# எங்கும் ஏகோபித்த அபிப்பிராயம்

எல்லா நகரங்களிலும் விமர்சகர்களும்-
படரசிகர்களும் மனமாறப் புகழ்ந்து வரு-
வதிலிருந்தும் தியேட்டர்களில் உண்டாகும்-
வசூல் களிலிருந்தும்.....

## மாடர்ன் தியேட்டர்ஸ்

# திகம்பர சாமியார்

முற்றிலும் புதுமாதிரியான படம் என்பதோடு
சிறந்த குதூகலத்தை அளிக்கும் சித்திரம்
என்பதும் புலனாகிறது.................................

டைரக்‌ஷன்-டி.ஆர்.சுந்தரம்

இப்பொழுது ...... சென்னை
பாரகன் · பிராட்வே
ராஜகுமாரி மற்றும் ராஜதானி
பூராவும் நடைபெறுகிறது...



1—22-10

# இம்மாதத்திய "எச்.எம்.வி." வெளியீடுகள்!



மதுரகீதவாணி
ஸ்ரீமதி என்.ஸி.வஸந்தகோகிலம்

N.28191 { மஹாலக்ஷ்மி
2 பாகங்கள்
-சங்கராபரணம்
(பாபனுசம் சிவன் இயற்றியது)



ஸ்ரீமதி என்.காந்திமதி
N.28185
பல்லாண்டு பல்லாண்டு
ஒற்றுமையாய் பணிவோம்
(சுத்தானந்த பாரதி இயற்றியவை)



ஸ்ரீமதி ஜானம்மா
N.28186
ஓ! நாம் சேர்ந்து
ஒன்றே தெய்வம்





ஸ்ரீ ஜி.எஸ்.விஜயராவ் &
ஸ்ரீமதி ஏ.பி.கோமளா
N.28187
தானுக்கனிஞ்ச பழம்
2 பாகங்கள்
('சுரபி' இயற்றியது)



(நாதஸ்வரம்)
வேதாரண்யம் ஸ்ரீ ஜி.வேதமூர்த்தி பிள்ளை

N.18975 { பாஹி பர்வத - ஆரபி
ஹிமகிரி தனயே - சுத்த தன்யாசி




"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்
கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி

கணீரென ஒலிக்கும் **அலாரம்**

## கைகடிகாரத்திற்குள்

நம் தேசத்தில் அலாரம் ஒலிக்கும் முதன் முதலான கைகடிகாரங்களை பேவர் லூபா மிக மகிழ்ச்சியுடன் வெளியிடுகின்றனர். இது மிக உன்னதமானது. இதர ஸ்டாண்டர்டு வாட்டர் ப்ரூப் கைகடிகாரங்களைவிட அளவில் அதிக வித்தியாசம் இல்லாதது. அயர்ந்து தூங்குவோரையும் எளிதில் விழிக்கச் செய்யும். "கிரி" என்று ரீங்காரம் செய்யும் சில் வண்டின் இனத்தைச் சார்ந்தே இந்த "கிரிக்கெட்" என்று பெயரிடப் பட்டுள்ளது. அன்றாடம் அதிகமாகும் அலுவல்களை, தங்கள் இதர பல வேலைகளிடையே அவ்வப்போது ஞாபகமூட்ட அலாரம் வைத்து, குறித்த நேரத்தில் செய்து முடிக்க இடையளிக்கிறது. வியாபாரத் துறையினர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் ஒரு கிரிக்கெட் அலார கடிகாரம் மிகவும் இன்றியமையாதது. எங்கள் ஷோ ரூம்களில் இதர வல்கேயின் கடிகாரங்களுடன் அலாரம் அடிக்கும் இருவித ரகங்களையும் பார்வையிடலாம்.





FAVRE-LEUBA

நெ. 7893 ஸ்டீல் கேஸ் ரூ. 338/-

நெ. 7897 அழுத்தமான 18 காரட் தங்க கேஸ் ரூ. 1065/-

## வல்கெய்ன்

### கிரிக்கெட் அலாரம்

பூரண விநியோகஸ்தர்கள்:

பேவர் - லூபா & கம்பெனி லிமிடெட், பம்பாய் - கல்கத்தா




# 3 WINNERS

**NATION'S LEADER CALENDAR** – Rs. 1/4 each

**EVERY MAN'S DESK DIARY** – Rs. 2/12 „

**EVERY MAN'S POCKET DIARY** – Rs. 1/12 „

SAMPLE BY V.P.P., M.O. or P.O

TRADE TERMS AND SPECIAL DISCOUNTS

Apply to –

**ASSOCIATED PRINTERS (MADRAS) LTD.**
165, MOUNT ROAD, MADRAS.
AND AT 17 A, MAHATMA GANDHI ROAD, BANGALORE.





மலர் 10 இதழ் 13 } அக்டோபர் 22 { விக்ருதி ஐப்பசி 6




"கல்கி"யில் வெளியாகும் கதைகளின் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.



# ஸ்ரீ கிருஷ்ண பகவான்

## இல்வாழ்க்கையில் ஓர் பொன் இதழ்!




# பாரிஜாதம்

டைரக்ஷன்: K.S. கோபாலகிருஷ்ணன் B.A.

**உங்களை மகிழ்விக்க வருகிறது!**

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற ... பாரதியார்



மலர் 10 கல்கி இதழ் 12

# என்ன சேதி ?

## வீரரை வாழ்த்துவோம்

ஒரு நாட்டில் எல்லாருமே மகான்களாகவும் கவிஞர்களாகவும் பிறக்க முடியாது. ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை மகான் அவதரிக்கலாம். நூறு ஆண்டுக்கு ஒரு முறை அதிர்ஷ்டம் இருந்தால் ஒரு கவிஞர் பிறக்கலாம். அவ்விதமே உலகத்தில் வீர புருஷர்களும் அருமையாகவே தோன்றுவார்கள். ஆனால் மகான்களையும் கவிஞர்களையும் வீரர்களையும் மக்கள் எல்லாரும் போற்றலாம்; வாழ்த்தலாம்; வழி படலாம். ஒரு நாட்டின் மக்கள் தங்களிடையே தோன்றும் மகான்களையும் கவிகளையும் மகா வீரர்களையும் தியாகிகளையும் போற்றிப் பாராட்டும் இயல்பு படைத்தவர்களாயிருந்தால், அந்த நாடு நாளுக்குநாள் முன்னேற்றம் அடைந்து எல்லாவித இடையூறுகளையும் தாண்டி உலகத்தில் மேலோங்கிய நிலையை அடையும்.

வீரர்களைப் போற்றும் இயல்பு பழந்தமிழ் நாட்டு மக்களிடையே நன்கு பரவியிருந்தது. வீரப் போரில் உயிர் நீத்த மக்களுக்குக் கல் நாட்டு விழா நடத்தும் வழக்கம் பழந் தமிழ் நாட்டில் பிரபலமாயிருந்தது. இந்நாட்டிலும் அந்த உயர்ந்த வழக்கத்தைப் புதுப்பித்துப் பரப்பு வதற்குச் சிலர் முயன்று வருகிறார்கள். அவர்களில் அன்பர் திரு ம. பொ. சிவஞான கிராமணியார் ஒருவர். பாரத நாட்டிலேயே முதன் முதலில் சுதந்திரப் போராட்டத்துக்கு அங்குரார்ப்பணம் செய்த வீர பாண்டியன் கட்டப் பொம்மனுடைய வரலாற்றைத் திரு சிவஞான கிராமணியார் தமிழ் மக்களுக்கு ஞாபகப்படுத்தி யிருக்கிறார். அந்தச் சுதந்திர வீரனுடைய வரலாற்றை எழுத்தோவியமாகத் தீட்டியிருக்கிறார். பல நூறு சொற்பொழிவுகள் ஆற்றி அவனுடைய வீர வரலாறு தமிழ் மக்களின் உள்ளத்தில் நன்கு பதியும்படி செய்திருக்கிறார். நாளது அக்டோபர் மாதம் 16-ம் தேதி ஸ்ரீ கிராமணியாரின் பெரு முயற்சியினால் வீர பாண்டியக் கட்டப் பொம்மன் நினைவு விழா சென்னையில் சிறப்பாக நடை பெற்றது. வரும் ஆண்டுகளில் வீர பாண்டியக் கட்டப் பொம்மன் திருவிழா தமிழ்நாடு முழுவதிலும், தமிழ் மக்கள் வாழும் இடங்களிலெல்லாம் கொண்டாடப்படும் என்று நம்புகிறோம்.

## கவிஞரைப் போற்றுவோம்

நாளது அக்டோபர் மாதம் 25ல் தமிழ் இலக்கிய உலகத்தில் ஒரு சிறப்பான நிகழ்ச்சி நடைபெறப் போகிறது. நமது காலத்தில், நம்முடைய கண்ணெதிரே, நாம் கண்டு கேட்டு அநுபவிக்கும் படியான உண்மைத் தமிழ்க் கவிஞர் ஒருவர்,—வள்ளுவர், கம்பர், பாரதியார் பரம்பரையில் வந்தவர், — நம்முடைய பாக்கிய வசத்தினால் வாழ்ந்து வருகிறார். அவர்தான் நாகர்கோவில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள். புத்தருடைய வாழ்க்கையை எளிய அமுதத் தமிழ்ப் பாடல்களாகப் பாடியவர். இன்னும் பல உயிரோட்டமுள்ள தமிழ்க் கவிதைகளை இயற்றியவர். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் வயது முதிர்ச்சியடைந்து தளர்ந்த நிலையிலிருப்பதால் அவரைத் தமிழ் நாட்டில் நடைபெறும் தமிழ் விழாக்களுக்கு அழைத்துச் சிறப்பிக்க முடியாமலிருக்கிறது. எனவே, தமிழ் நாட்டுக் கவிதா ரஸிகர்கள் சிலர் சேர்ந்து ஒரு திட்டம் வகுத்தார்கள். கவிமணியின் இருப்பிடமாகிய நாகர் கோவிலுக்கு யாத்திரை சென்று தமிழ்க் கவிதா ரஸிகர்களின் சார்பாக அவரை வாழ்த்தி விட்டு வருவது என்று தீர்மானித்தார்கள். இந்த விசேஷ நிகழ்ச்சிக்காக அக்டோபர் மாதம் 25-ந் தேதி குறிப்பிட்டிருக்கிறது. ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார், திரு ஆர். கே. சண்முகம் செட்டியார், ஆஸ்தானகவி ராமலிங்கம் பிள்ளை முதலிய ரஸிகர் கூட்டத்தார் அன்று நாகர்கோவில் புத்தேரிக்குச் சென்று தமிழ் மக்களின் சார்பாகக் கவிமணிக்கு வாழ்த்து விழா நடத்தப் போகிறார்கள். இந்த நன் முயற்சியைச் சிறப்பாக நடத்தி வைக்கத் தமிழ்த் தாயைப் பிரார்த்திக்கிறோம்.

# என்ன விநோதம் பார்!


ஜனாதிபதி ட்ருமன் மெக் ஆர்தரைச் சந்திப்பதற்காக வேக் தீவுக்கு ஓடோடியும் வந்தார். எனவே இனி என்ன விநோதம் எல்லாம் நிகழுமோ!
உங்களுக்கு வாழ்த்துக் கூறி யோசனை கேட்டுப் போகவே வந்தேன்!
அப்படி வழிக்கு வாருங்கள்! இப்போதாவது யார் பெரியவன் என்பது தெரிந்ததா?
நான் செய்த-தெல்லாம் தப்பு. தயவு செய்து இந்தச் சவுக்கினால் என்னை வெளுங்கள்.
ஒருவேளை ஸ்டாலின் டிட்டோவிடம் மன்னிப்புக் கோருவதற்காக வரலாம்.
மா ஸே துங் பார்மோஸாவுக்கு வந்து தம்மைக் கைது செய்யும்படி சியாங்கைக் கேட்டுக்கொள்ளலாம்!

- சாஸ்திரி


காஷ்மீர் பிரதமர் ஷேக் அப்துல்லா கலகத் தலைவர் சர்தார் இப்ராஹிமிடம் வந்து சரண் அடையலாம்.
பிரதம மந்திரி
இந்தியாவின் பிரதம மந்திரி பதவியை அங்கீகரிக்கும்படி பண்டித நேரு ஸ்ரீ என். ஜி. ரங்காவை வருந்தி அழைக்கலாம்.
உள்நாட்டு மந்திரி பதவியை ஏற்றுக் கொள்ளுமாறு சர்தார் படேல் ஸ்ரீ அசோக் மேத்தாவைப் பரிவுடன் வரவேற்கலாம்.
மந்திரி பதவி
-SHASTRY-

# சர்வ தேச சமர்க்கள மகாசபை!

கொரியா நாடு வெகு வேகமாக விடுதலை பெற்று வருகிறது!

முதலில் வடக்கு கொரியா தென் கொரியாவையும் அதன் மக்களையும் விடுதலை செய்வதற்காகப் போரை ஆரம்பித்தது. அதன் பலனாக, தென் கொரியாவிலுள்ள நகரங்கள் எல்லாம் பாதிக்குமேல் நாசமாயின. ஆயிரக் கணக்கான மக்கள் பலியானார்கள்.

அதற்குப் பிரதியாக அமெரிக்க வெடி குண்டு விமானங்கள் வட கொரியா நகரங்களைப் பாதிக்குமேல் அழித்து வஞ்சம் தீர்த்தன. யுத்தத்தில் எவ்வித சம்பந்தமும் இல்லாத நிரபராதிகளான ஜனங்கள் ஆயிரக்கணக்கில் கொல்லப் பட்டார்கள்.

பிறகு, தென் கொரியாவை வட கொரியாவிடமிருந்து விடுதலை செய்வதற்காக ஐ. நா. துருப்புகள் எதிர்த் தாக்குதலில் ஈடுபட்டன. அதன் விளைவாகத் தென் கொரியா நகரங்களில் முக்கால் பகுதி தரைமட்டமாயின. மேலும் பதினாயிரக்கணக்கான மக்கள் உயிர் இழந்தார்கள்.

இப்போது வடகொரியா சர்க்காரிடமிருந்து வட கொரியா மக்களை விடுதலை செய்யும் கைங்கர்யம் நடந்து வருகிறது.

மேற்படி கைங்கர்யம் 'வெற்றிகரமாக' முடிவடையுமாயின், அதன் பலனாக கொரியா முழுவதும் உள்ள பெரும்பாலான நகரங்களும் பாழாகி விடும் என்றும், போருக்கு இரையான கொரியா மக்களின் தொகை லட்சக் கணக்கை எட்டிவிடும் என்றும் நிச்சயமாகக் கூறலாம்.

மேற்படி யுத்தத்தினால் தென் கொரியாவின் தலைநகரான ஸியோலும் வட கொரியாவின் தலைநகரான பியோங்யாங்கும் பெரும் பகுதியும் அழிந்து பாழாகிவிட்டன என்று அமெரிக்கச் செய்திகளே கூறுகின்றன.

இவ்வாறாக, கொரியா மகாஜனங்கள் விடுதலை பெற்று வருகிறார்கள்! உள் நாட்டுக் கலகத்திலிருந்தோ, வல்லரசுகளின் கைப்பிடியிலிருந்தோ அவர்களுக்கு விடுதலை கிடைக்கவில்லை; இந்தப் பாழும் உலகத்திலிருந்து விடுதலை பெற்று வருகிறார்கள்!

* * *

வட கொரியாத் துருப்புகள் மளமள வென்று முன்னேறித் தென்கொரியாவில் பெரும் பகுதியையும் ஆக்கிரமித்துக் கொண்டபோது நாம் குறிப்பிட்டிருந்ததை இங்கு ஞாபக மூட்டுகிறோம்.

தென் கொரியா முழுவதையும் வட கொரியர்கள் ஆக்கிரமித்துக் கொண்டால் கூடத் திரும்பவும் அவர்களைத் தோற்கடித்து, கொரியா முழுவதையும் கைப் பற்றும் சக்தி மகா வல்லமை பொருந்திய அமெரிக்காவுக்கு உண்டு என்று குறிப்பிட்டிருந்தோம்.

தென் கொரியாவுக்கு அமெரிக்காவின் பூரண ஆதரவு இருந்தும் கூட வட கொரியர்கள் ஆவேசத்துடன் முன்னேறியதுதான் ஆச்சரியமேயன்றி, அமெரிக்கா இப்போது வெற்றி பெற்று வருவதில் வியப்பு எதுவும் இல்லை.

முப்பத்தெட்டாவது அக்ஷரேகையிலிருந்து அதாவது தென் கொரியா எல்லையிலிருந்து வட கொரியர்களை விரட்டி வெற்றி பெற்றபின், ஐ. நா. சபை போரை நிறுத்திச் சமரசத்திற்கான முயற்சியில் ஈடுபட்டிருக்கலாம்.

அந்த முயற்சி தோல்வியுறும் பட்சத்தில் பிறகு போரில் இறங்கியிருக்கலாம்.

அவ்வாறு முயற்சி செய்திருந்தால், தோல்வியடைந்த வட கொரியர்கள் ஒருவேளை சமாதானத்துக்கு இணங்கி வந்திருக்கக் கூடும்.

சமாதானத்துக்கு இணங்காவிடில் ஏற்படும் பலா பலன்களுக்கு வட கொரியா பொறுப்பாளியாக நேருமேயன்றி, அதனால் ஐ. நா. சபையின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்பட்டிராது.

ஆனால், பல்வேறு உலக அரசியல் பிரச்னைகளிலும் வல்லரசுகளால் ஆட்டி வைக்கப்படும் ஐக்கிய நாடுகள் சபை, கொரியா யுத்த விஷயத்திலும் வல்லரசுகளின் விருப்பு வெறுப்பையே பெரிதாகக் கருதித் தன் கடமையைச் செய்யத் தவறி விட்டது.

கடமையைச் செய்யத் தவறியது மாத்திரமல்ல, செய்யத் தகாத காரியத்தையும் செய்ய முற்பட்டு விட்டது.

தென் கொரியா எல்லையைக் கடந்து வட கொரியாவில் பிரவேசித்துப் போரைத் தொடர்ந்து நடத்தும்படி துருப்புகளுக்குக் கட்டளையிட்டதுடன் ஐ. நா. சபை நிற்கவில்லை. ஒவ்வொரு தேசத்திலும் தன் சார்பில் பிரத்தியேகமான இராணுவத்தைச் சிருஷ்டிக்கவும் உத்தேசித்திருக்கிறது.

அதாவது சர்வ தேச சமரச மகாசபையின் உருவம் சர்வதேச சமர்க்கள மகாசபையாக மாற ஆரம்பித்திருக்கிறது!

* * *

கொரியாப் போரிலிருந்து ஓர் உண்மை வெளியாகி யிருக்கிறது.

எந்த நாடும் நியாய அநியாயத்தைப் பகுத்தறிந்து நீதியுடனும் நேர்மையுடனும் நடந்து கொள்ளாவிடில் உய்ய முடியாது என்பதுதான்.

அது எந்த வல்லரசின் கட்சியில் இருந்தாலும் ஆபத்து என்பதும் வெட்ட வெளிச்சமாகி யிருக்கிறது.

என்ன நேர்ந்தாலும் தங்கள் சொந்த நாட்டின் ஒரு பகுதியைச்சேர்ந்த சகோதரர்கள் மீது படை யெடுப்பதில்லை என்று வட கொரியா உறுதியுடன் நின்றிருந்தால் கொரியா யுத்தம் மூண்டிராது; கொரியா நகரங்கள் பாழாகியிராது; கொரியா மக்கள் அழிந்திருக்க மாட்டார்கள்.

ஆனால் அவ்வாறு வட கொரியா நேர்மையுடன் நடந்து கொள்ளாமல் ருஷ்யாவின் கைப்பொம்மையாக இருந்ததால்தான் அந்த நாட்டுக்கு மகத்தான ஆபத்து ஏற்பட்டிருக்கிறது.

அது போலவே தென் கொரியாவும் அமெரிக்காவின் கைப்பாவையாகி யிராமல் வட கொரியாவுடன் சமாதானம் செய்து கொண்டிருந்தால் நிலைமை இவ்வளவு படுமோசமாகி யிராது.

தென் கொரியா வெற்றி பெற்ற பின் எல்லையைத் தாண்டி வட கொரியாவில் பிரவேசிப்பதில்லை என்று கூறியிருந்தால், கொரியாவின் எதிர்கால ஐக்கியத்துக்கு அது நிரந்தரமான அஸ்திவாரமாக அமைந்திருக்கலாம்.

எனவே, வட கொரியா தென் கொரியா மீது படையெடுத்தது பெரும் தவறு; வெற்றி பெற்ற தென் கொரியா மறுபடியும் வட கொரியாவுக்குள் பிரவேசித்துப் போர் புரிய முற்பட்டிருப்பது அதைக்காட்டிலும் பெரிய தவறு; அதைத் தடுக்காமல் ஐ. நா. சபை அதற்கு இடம் கொடுத்தது மாபெரும் தவறு என்பதில் சந்தேகம் இல்லை.

வட கொரியா முழுவதையும் அமெரிக்கத் துருப்புகள் ஆக்கிரமித்துக் கொண்டால் கூட கொரியா யுத்தம் முடிவடையும் என்று தோன்றவில்லை. ஏனெனில் கொரில்லா யுத்தத்தில் கைதேர்ந்த வட கொரியர்கள் இடைவிடாது தொல்லை விளைவித்துக் கொண்டே யிருப்பார்கள். எனவே, வட கொரியாவில் அமெரிக்கத் துருப்புகள் பிரவேசித்தது அங்கு நிரந்தரமான அமைதியின்மைக்கு விதை விதைத்தது போல் ஆகியிருக்கிறது.

இந்தத் தவறுகளுக்கெல்லாம் மூல காரணம் வல்லரசுகளின் கட்சிப் பிரதிகட்சி விபரீதம் அல்லவா?

எனவே, எந்த வல்லரசின் கட்சியிலும் சேருவதில்லை; எந்தப் பிரச்னையையும் அதன் தராதரத்தைச் சீர்தூக்கிப் பார்த்தே ஒரு முடிவுக்கு வருவது என்ற கொள்கையை இந்தியா அனுஷ்டித்து வருவது மிகச் சிறந்த அரசியல் தர்மம் என்பதை யாராவது ஆட்சேபிக்க முடியுமா?

கொரியா யுத்தத்தில் இப்போது ஏற்பட்டுள்ள புதிய நிலைமையைக் குறித்து இந்தியாவின் கருத்து என்ன என்பதைப் பண்டித ஜவாஹர்லால் நேரு சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவுபடுத்தி யிருக்கிறார்.

"முதலாவதாக, சமாதான முயற்சியில் ஈடுபடாமல் அவசரப்பட்டுத் தென் கொரியா எல்லையை ஐ. நா. துருப்புகள் கடந்து சென்றது சரியல்ல. இரண்டாவதாக, ஒவ்வொரு தேசத்திலும் ஐக்கிய நாடுகள் சபையின் சார்பில் பிரத்தியேக படைகள் இருப்பதைப் பாரதநாடு அங்கீகரிக்க முடியாது" என்று ஜவாஹர்லால்ஜி புதுடில்லியிலே நடந்த பத்திரிகைப் பிரதிநிதிகளின் மகாநாட்டில் வியக்தமாக அறிவித்துள்ளார்.

ஐ. நா. துருப்புகள் எல்லையைக் கடந்ததன் விளைவாகப் பல புதிய பிரச்னைகள் முளைக்க ஹேது உண்டு.

அது போலவே உலக நாடுகளிடையே உண்டாகும் புகைச்சலையும் பிணக்கையும் தீர்த்துச் சமரசம் ஏற்படும்படி செய்வதற்காகச் சிருஷ்டிக்கப்பட்ட சர்வதேச சமாதான மகாசபை சர்வதேச யுத்த மகாசபையாக மாறுவதைக் காட்டிலும் உலகத்துக்குப் பேராபத்து வேறு என்ன வேண்டும்?

இந்த உண்மையைப் பண்டித ஜவாஹர்லால் நேரு தைரியமாகச் சுட்டிக் காட்டியிருப்பதன் மூலம் உலக நாடுகளுக்கு ஒப்பற்ற தொண்டு செய்திருக்கிறார் என்று கூறுவது மிகையாகாது.

அது மாத்திரமல்ல, ஐக்கிய நாடுகள் சபையின் வாழ்வும் அற்ப வாழ்வாக முடிந்து விடாமல் இருப்பதற்கான வழியையும் காட்டியிருக்கிறார்.

ஜவாஹர்லால்ஜியின் யோசனைக்கு ஐ. நா. சபை செவி சாய்க்குமாயின் அது தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளலாம்; கொரியா மக்களையும் மேற்கொண்டு கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காகாமல் ரட்சிக்கலாம்; உயர்ந்த உலக சமாதான லட்சியத்துக்கும் ஆக்கம் அளிக்கலாம்.

அட்டைப்பட விளக்கம்

# ஸ்ரீமதி இந்திராணி

ஏறக்குறையப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீமதி ராகிணிதேவி என்பவருடைய நடனம் பிரபலமாயிருந்தது. விளம்பரத்தைப் பார்த்த பலர் இவர் யாரோ இந்தியப் பெண்மணி என்று எண்ணிக் கொண்டு நடனக் கச்சேரிக்குப் போனார்கள். உண்மையில், அவர் ஓர் ஐரோப்பிய மாது என்று அறிந்து வியப்படைந்தார்கள். ஐரோப்பியப் பெண்மணி ஒருவர் இவ்வளவு தூரம் நம்முடைய இந்திய நடனக் கலையைப் பயின்று நடனம் ஆடுவது பெரியதோர் சாதனை என்று திருப்தியடைந்து திரும்பினார்கள்.

ஸ்ரீமதி ராகிணிதேவி இந்தியாவிலேயே தங்கி இந்திய நாகரிகம், இந்தியப் பண்பாடு,— இவற்றில் ஒன்றிவிட்டார். இந்திய நாகரிகத்திலும் தென்னிந்தியப் பண்பாடு அவரை அதிகமாகக் கவர்ந்தது. தென்னிந்தியப் பெண்மணிகளைப்போல வர்ணச் சேலைகளை உடுத்தினார். இந்திய நடனக் கலைகளில் பரத நாட்டியமே தலைசிறந்த கலை என்பதைக் கண்டார். அதைத் தாம் பூரணமாகப் பயில முடியாமற் போனாலும் தமது குமாரிக்காவது நன்கு பயில்விக்க வேண்டும் என்ற மனோரதம் கொண்டார். அந்த மனோரதம் இன்று நிறைவேறியிருப்பது கண்டு குதூகலத்தில் ஆழ்ந்திருக்கிறார்.

ஸ்ரீமதி ராகிணி தேவியின் செல்வக் குமாரியான ஸ்ரீமதி இந்திராணி தேவி நமது இந்த இதழின் அட்டையைச் சிறப்பாக அலங்கரிக்கிறார். பூர்வமான சாஸ்திரிய முறையில் அவர் பரதநாட்டியக் கலையை அரும்பாடு பட்டுப் பயின்றிருக்கிறார். பரதநாட்டியக் கலைத்தோற்றம் ஒன்றிலேதான் அவர் இந்த இதழ் அட்டைப் படத்தில் காட்சி தருகிறார்.

புகழ்பெற்ற பந்தநல்லூர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் பிரதம சீடரான ஸ்ரீ சொக்கலிங்கம் பிள்ளை ஸ்ரீமதி இந்திராணி தேவிக்குப் பரத நாட்டியக் கலையைக் கற்பித்த பேராசிரியர் ஆவர். பிட்சை பூரணமடைந்து விட்டது என்று நடன ஆசிரியர் மனமுவந்து ஆசி கூறியதன் பேரில் ஸ்ரீமதி இந்திராணியின் பரத நாட்டியம் எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் நாளை அக்டோபர் மாதம் 23-ந் தேதி திங்கட்கிழமை அரங்கேறப் போகிறது என்று அறிகிறோம்.

'இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் பைன் ஆர்ட்ஸ்' என்னும் சங்கத்தின் ஆதரவிலேயே ஸ்ரீமதி இந்திராணி தேவி பரதநாட்டியக் கலையைக் கற்றார். அந்தச் சங்கத்தின் ஆதரவிலேயே அரங்கேற்றமும் நடைபெறுகிறது.

"திறமான புலமையெனில் வெளிநாட்டோர் அதை வணக்கம் செய்தல் வேண்டும்!"

என்று பாரதியார் பாடினார். புலமைக்கு அவர் கூறியது கலைக்கும் ஓரளவு பொருந்தும். ஸ்ரீமதி ராகிணி தேவி பரதநாட்டியக் கலையில் கொண்ட பிரேமை நமது பழமையான நடனக் கலையின் சிறப்புக்கு இணையில்லாத ஒரு பெருமையாகும். அன்னை கொண்ட மனோரதத்தை அவரது செல்வப் புதல்வி நிறைவேற்றி வைப்பது அனைவரும் மகிழ்வதற்குரிய சிறப்பாகுமல்லவா!



# ஆரோக்கிய ரகசியம்

## 11. அப்பாவி வயிறு !

வெள்ளம் வருவதற்கு முன் அணை போடுவதுதான் புத்திசாலித்தனமாகும். அதைப்போல நோய்கள் வந்து அதற்கு வைத்தியம் செய்வதற்குப் பதில், வராமல் தடுப்பது சிலாக்கியம். நோய்கள் வராமலே தடுப்பதால் உடம்பின் சக்தி விரயமாகிறதில்லை. பணம் செலவாகாது. காலமும் மிச்சமாகும். ஆரோக்யமும் பாதுகாக்கப்படும்.

ஜீவித்திருப்பதற்காகச் சாப்பிடுகிறவர்கள், சாப்பிடுவதற்காக ஜீவித்திருப்பவர்கள் என இரண்டு வகையானவர்கள் இருக்கிறார்கள். பின்னால் சொல்லப்பட்ட வகையில் சேர்ந்தவர்களுக்குத்தான் அநேகமாய் நோய்கள் வருகின்றன. இவர்களில் சிலர் வாய் மூடாப் பட்டினியாளர்களும் உண்டு. தூங்கும் நேரம் தவிர மற்ற நேரங்களில் எல்லாம் வாய் அசைந்து கொண்டேயிருக்கும். இவர்களுக்கு நோய்கள் வரக் காரணம் வேறு வேண்டுமா? ஆகாரப் பை என்று ஒன்று இருக்கிறதென்ற நினைப்பே இவர்களுக்கு இருக்காது போலும்.

ஆகாரப் பை சவ்வுகளினாலான ஒரு பை போன்றது. ஆகாரக் குழாய்க்கும், சிறு குடலுக்கும் இடையில் இருக்கிறது. அது ஆறு கப் ஆகாரம் கொள்ளும் அளவுதான் இருக்கிறது. ஆகாரம் அதற்குள் சென்றதும் காஸ்டிக் எனும் ரசம் வந்து கலக்கிறது. சில இடங்களில் ஒரு வித டெலிபோன் இருப்பதைப் பார்த்திருப்பீர்கள். டெலிபோன் பேசுவதற்குண்டான கட்டணத்தை அதில் போட்டவுடன், அந்த யந்திரம் தானாகவே இயங்கும். பிறகு நமக்கு வேண்டிய எண்களைத் திருப்பிப் பேசலாம். அதுபோல ஆகாரம், ஆகாரப் பையில் போய் விழுந்தவுடன், அதை ஜீரணிக்க, காஸ்டிக் ரசம் உற்பத்தியாகி வேலை செய்யத் துவங்குகிறது. ஆகாரத்தைக் கூழ் போலாக்கி, சிறு குடல் அதன் சத்தைக் கிரகித்துக் கொள்ளும் அளவுக்குப் பக்குவப் படுத்திய பிறகுதான் சிறு குடலுக்கு அதை அனுப்பி வைக்கிறது.

நாம் சாப்பிடும் ஆகாரத்தின் தன்மை, அளவு முதலியவைகளைப் பொறுத்து, ஆகாரப் பை காலி ஆக மூன்று முதல் ஆறு மணி நேரம் ஆகும். அதற்குப் பிறகு ஆகாரப் பை சுருங்கும். அப்பொழுதுதான் நமக்குப் பசி உணர்ச்சி தோன்றுகிறது. ஆனால் அப்படிப் பசி தோன்றியதும் சாப்பிட்டு விடாமல் அரை மணி, ஒரு மணி நேரம் ஓய்வு கொடுத்துச் சாப்பிடுவது நல்லது. இடையில் சாப்பிடுவதெல்லாம் ஆகாரப் பைக்குத் தீங்கு செய்வதாகும். இந்த நியதியை அறிந்து நடப்பவர்கள் எத்தனை பேர் இருக்கின்றார்கள்.

தாட்சண்யத்திற்காகச் சாப்பிடுவது, தமாஷாகச் சாப்பிடுவது, நாக்கின் நப்பாசைக்காக மெல்லுவது எல்லாம் நாம் வயிற்றுக்கு இழைக்கும் கொடுமையே. அப்பாவி வயிறு இந்தக் கொடுமையை எத்தனை நாள் சகித்திருக்கும்? அதற்கு வாய் இருக்கிறதா சொல்ல? முதலில் வந்து விழுந்த ஆகாரத்தைச் சரியாய் அரைத்துத் தள்ளுவதற்குள், மேற்கொண்டும் ஆகாரம் வந்து விழுந்தால் ஆகாரப்பை என்ன செய்யும்? திணறுகிறது. துள்ளித் துடித்து காஸ்டிக் ரஸத்தைத் தீவிரமாய் உற்பத்தி செய்து மேலும் வேலை செய்கிறது. இப்படியே சில நாட்கள் செய்து, சக்தி இழந்து, வந்த ஆகாரத்தை ஜீரணம் செய்ய முடியாமல் போய்விடுகிறது.

ஒரு வேலைக்காரன் தன்னுடைய வேலைகளையெல்லாம் முடித்து இரவில் தூங்குகிறான். அவனை நடு நடுவே தூங்க விடாமல் எழுப்பி வேலை செய்ய ஏவினால் அவன் நிலைத்து நிற்பானா? உங்கள் வேலையும் வேண்டாம், நீங்கள் கொடுக்கும் சம்பளமும் வேண்டாம் என்று தன் வேலையை ராஜிநாமா செய்துவிட்டுப் போய்விடுவான்.

ஆனால், வயிற்றுக்குள் சிறைப்பட்டிருக்கும் ஆகாரப் பை எங்கு போகும்? சக்தி இழந்து வேலை செய்ய முடியாமல் சோர்ந்து போகிறது. வியாதிகள் வர கேட்பானேன்? வயிற்று வலி என்று முதலில் ஆரம்பிக்



ஒருவர் (பேப்பர் படித்துக் கொண்டிருப்பவரிடம்):—என்ன ஸார்! சண்டை சமாசாரம் எப்படி?

பத்திரிகை படிப்பவர்:—விடு என்று இருந்தால், நாலுந்தான் இருக்கும்; அதைப்பற்றி உமக்கு என்ன, ஐயா?

---

கும். பிறகு அஜீரணம், புளியேப்பம், டிஸண்ட்ரீ முதல் சகல வியாதிகளும் உண்டாகிறது. மற்றும் சிலருக்கு ஆகாரம் ஆகாரப் பையில் அழுகுவதால், விஷங்கள் உற்பத்தியாகி அதிலிருந்து பலமாதிரி ஜ்வரங்கள் வரும். சிலருக்கு வாயிலிருந்து வீசும் துர் நாற்றம் சகிக்காது. என்னதான் தின்றாலும், ஏலம், லவங்கம் போட்டுக் கொண்டாலும் அத்துடன் துர்நாற்றமும் கலந்துதான் அடிக்கும். ஆளை நெருங்க விடாது. சிலருக்கு ஆகாரப் பையில் புண்கள், புற்றுகள்கூட உண்டாகிவிடுகிறது. ஆகாரப் பைக்கும், சிறு குடலுக்கும் உள்ள வழியைக்கூடச் சிலருக்கு அடைத்துக் கொள்ளும்.

இப்பேர்ப்பட்டவர்களின் கதி என்ன ஆவது? இப்பொழுது ஒரு புது முறையைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். வேண்டாத கெட்டுப்போன உறுப்பை வெட்டி எடுத்து விடுகிறார்கள்.

அந்த முறைப்படி கெட்டுப் போன, அடைந்து போன ஆகாரப் பையை எடுத்து, ஆகாரக்குழாயையும் சிறு குடலையும் நேராய் இணைத்து விடுகிறார்கள். சில தேகங்களில் ஆகாரப் பை தனியே கிடக்கட்டும் என்று விட்டு விட்டு, ஆகாரக் குழாயிலிருந்து சிறு குடலுக்கு நேராக ஆகாரம் போகும்படி ஆப்பரேஷன் செய்து விடுகிறார்கள். இவைகளெல்லாம் அபூர்வமான விஞ்ஞான முன்னேற்றம்தான். ஆனால் அந்த ஆப்பரேஷன் செய்து கொண்ட ஆள் மற்றவர்களைப் போல உண்டு களித்து இருக்க முடியுமா? ஜீவிய காலபரியந்தம் பத்திய உணவே சாப்பிட்டல்லவா வாழவேண்டும்?

இவைகளெல்லாம் வெள்ளம் வருவதற்கு முன் அணைபோடாத குற்றமே. நோய் வருவதற்கு முன் இஷ்டப்படி நடந்து கொண்டதற்குத் தண்டனையே. வயிற்றுக்கு இழைத்த கொடுமை வட்டியும் முதலுமாகச் சேர்ந்து வாட்டுகிறது.

ஆகாரப் பையை ஆப்பரேஷன் செய்து எடுத்து விடுவதால் ஆகாரம் கூழாக்கப்படாமல் சிறு குடலுக்கு நேராய்ச் செல்லுகிறது. சிறு குடலின் சுவர்கள் சத்தைக் கிரகித்து ரத்தத்துடன் சேர்க்கத்தான் முடியும். அரைபடாத ஆகாரத்தின் சத்தைக் உறிஞ்ச அவைகளால் முடியாது. ஏதோ சிறிதளவு குடல் சக்தியினால் சத்தைக் கிரகித்துக் கொள்ளலாம். ஆனால் அந்த மனிதன் தன் பூரண ஆயுளை அனுபவிப்பான் என்று சொல்ல முடியாது.

தவிர, இம்மாதிரி ஆப்பரேஷன்களெல்லாம், எல்லோருக்கும் கிட்டக் கூடியதல்ல. பணக்காரர்கள் செய்து கொள்ளலாம். மற்றவர்களால் முடியாது. அவர்கள் கதி என்ன ஆவது? நோய் வராமல் பாதுகாப்பதேயாகும். அப்படி வந்தாலும் ஆரம்பத்திலேயே ஆசனம் பழகிக் கொண்டால், வெள்ளம் வருவதற்கு முன் அணைபோட்டது போலாகும். சாப்பாட்டு நேரம் தவிர மற்ற வேளைகளில் தாட்சண்யத்திற்காகவும், நண்பர்களின் வற்புறுத்தலுக்காகவும் சாப்பிட மாட்டேன் என்ற பத்தியமிருந்து உடலுக்கேற்ற ஆகாரத்தை மட்டும் உட்கொண்டு, தனுராசனத்தைப் பழகுவதே, இதன் விமோசனத்திற்குச் சிறந்த வழி.

"ஆசனங்கள் போடுவதற்கு எங்கு ஸார் நேரம் கிடைக்கிறது? விடிந்தால் வேலை சரியாக இருக்கிறது. இவைகளெல்லாம் வேலையில்லாதவர்களுக்குத் தான் ஸார் சரி!" என்று சிலர் வெகு சுலபமாக முடிவு கட்டி விடுவார்கள்.

பொதுவாக எந்தக் காரியத்தையுமே குறை சொல்லுவது என்றால் வெகு சுலபம். ஆனால் எதையாவது சாதிப்பது தான் கஷ்டமான காரியம். தேசத்துக்கு வேண்டிய பொதுஜன சேவையில் ஈடுபட்டு சேவை செய்ய முடியா விட்டாலும் ஒவ்வொருவரும் அவரவர்களுக்குக் காவது சேவை செய்து கொண்டு நோயின்றி ஆரோக்கியமாக வாழக் கூடாதா?

எதற்கெடுத்தாலும் குறை சொல்லிக் கொண்டு, பிதண்டாவாதம் சொல்லுபவர்களின் வேலை நேரங்களைக் குறித்து ஒரு அட்டவணை தயாரித்தால் எத்தனை மணி நேரத்தை அவர்கள் வீணாய்க் கழிக்கிறார்கள் என்பது தெரியும். சகோதரிகளும் இப்படி அட்டவணை தயார் செய்து பார்த்தால் எவ்வளவு நேரம் மிஞ்சுகிறதென்று தெரியும். கிடைத்தற் கரிய மானிட உடலைச் சுத்தமாய் வைத்திருக்க, நோய்களின்றிப் பாதுகாக்க, ஆரோக்கியமாய் வைத்திருக்க இந்த இருபத்துநான்கு மணி நேரத்தில் அரை மணி அல்லது ஒரு மணி நேரம் கூடவா கிடைக்காமல் போகும்? ஏனோ இந்த அசட்டை தங்கள் உடலின் மேல்!

உண்மையில் பார்க்கப் போனால் அசட்டையல்ல, அசட்டுத்தனம் தான். ஒவ்வொரு உயிருள்ள பிராணியும் தன் உயிரின் மேல் ஆசை வைத்துத்தான் இருக்கிறது. சாகப் போகும் கிழம்கூட இன்னும் சிலகாலம் வாழமாட்டோமா என்றுதான் நினைக்கும். ஆனால், சோம்பல் ஆராய்ச்சியின்மை, அசட்டு மதிப்பு இவைகளால் மனித சமூகம் சீரழிகிறது.

வயிற்று வலியா? ஒரு மாத்திரை விழுங்க வேண்டும். உடனே வலி 'பட்' என்று போய்விட வேண்டும். தலைவலியா ஒரு மாத்திரையில் 'டக்' என்று நின்று விடவேண்டும். பசியில்லையா? அதற்கு ஒரு மாத்திரை. மலச்சிக்கலா ஒரு மாத்திரை விழுங்கு. இப்படி நம்மவர்களின் மனோபாவம் வளர்ந்து விட்டது.

அந்த மாத்திரை எந்தச்சரக்கினால் செய்யப்படுகிறது? அதனுடைய செயலாற்றும் குணம் என்ன? அது எப்படி நம் வலிகளைப் போக்கடிக்கிறது? அவை வலிகளை மட்டும் தான் போக்கடிக்குமா? மற்றும் அதனால் ஏதாவது கோளாறு உண்டாகுமா? இப்படியே சாப்பிட்டுக் கொண்டு போவதனால் அதன் முடிவு என்ன? மருந்தினாலேயே உயிர் வாழ்வதா? இயற்கைச் சக்திகள் இல்லையா என்று இம்மாதிரி ஆராய்ச்சிகள் எல்லாம் செய்வதில்லை.

"இதற்கெல்லாம் எங்கே ஸார் நேரம் இருக்கிறது? ஏதோ வலித்ததும் மருந்து சாப்பிட வேண்டியது. வலி 'டக்' என்று நின்று விடவேண்டும். நம் வேலைகளை நாம் செய்து கொண்டு போக வேண்டும்" என்று அதே பதிலைச் சொல்லுவார்கள்.

இப்பேர்ப்பட்டவர்களின் மனோபாவம் எப்பொழுது மாறுகின்றதோ, அப்பொழுதுதான் நமது சமூகத்துக்கும் நமது நாட்டுக்கும் விமோசனம். (தொடரும்)

# மோகன் பிறந்தான்!

**வஸுமதி ராமஸ்வாமி**

அன்புமிக்க ஜெயா மாமிக்கு,

உங்களுடைய அளவற்ற அன்பினால் அணைந்து போக இருந்த என் வாழ்வு ஒளி பெற்றது. துயரக் கடலில் மூழ்கின எங்கள் மனம் இன்பக் கடலில் மிதக்கிறது. எனக்கு இந்த வருஷம்தான் தலை தீபாவளி. நீங்கள் பெண் வீட்டுக்காரர்கள் சார்பில் அவசியம் வர வேண்டும். அவரும் உங்கள் மாமா, மாமியும் வருகிறார்கள். சிரமத்தைப் பாராமல் வர வேண்டும். நீங்கள் வராவிட்டால் நான் மிகவும் ஏமாற்ற மடைவேன். உங்களை இன்னொரு சந்தோஷ சமாசாரம் வரவேற்கக் காத்துக் கொண்டிருக்கிறது. குழந்தைகளையும் அவசியம் அழைத்துக்கொண்டு வர வேண்டும். அம்மா ரொம்பவும் வற்புறுத்தி எழுதச் சொன்னாள். மாமாவுக்கு என் நமஸ்காரத்தைத் தெரிவிக்கவும்.

உங்கள் அன்புள்ள,
விமலா.

இதைத் திரும்பத் திரும்பப் படித்தேன். இந்தப் பெண் தன்னுடைய சந்தோஷ வாழ்வில் கவியரசியாகப் போய் விட்டாள் போலும். சுருக்கமாக வற்புறுத்தி எழுதியிருக்கிறாள். போய்த்தான் வரவேண்டுமென்று தீர்மானித்தேன். இதை ஒட்டிச் சுமார் நான்கு வருஷங்களுக்கு முன் நடந்த விமலாவின் கல்யாண நினைவுகள் மனத்திரையில் காட்சி யளித்தன.

## 2

காப்பி, டீ முதலியவைகளைச் சாப்பிடுவதில் ஒரு உற்சாக உணர்ச்சி உண்டாகிறது. அது போலப் பொதுக் காரியங்களில் ஈடுபட்டால் ஒரு உற்சாக வெறியே உண்டாகிறது. பிறருக்கு உதவிசெய்து அதனால் கீர்த்தியும் கிடைத்து விட்டால் கேட்கவே வேண்டாம். யாரோ ஒரு அறிஞர் சொல்லி வைத்தார். "பெருங் குணம் படைத்த மனிதர்களின் கடைசி துர்க்குணம் முகஸ்துதியை விரும்புவது தான்" என்று. நான்மட்டும் அதற்கு விதிவிலக்கா? சுபாவத்தில் நான்குபேருக்கு நன்மையானதைச் செய்ய வேண்டும் என்று விருப்பம். அதன் பலனாக வரும் புகழை விட்டு விடுவதற்கு நான் என்ன கர்ம யோகியா?

எங்கள் வீட்டிலிருந்து மூன்றாவது வீட்டுக்குக் குடிவந்தார் பலராமய்யர். அவருடைய இரண்டு பெண்களும் இரண்டு பிள்ளைகளும் மனைவியும்தான் குடும்பத்தின் அங்கத்தினர்கள். பலராமய்யர் சர்க்கார் உத்தியோகம் பார்த்து ஓய்வு பெற்றுக் கொண்டவர். ஒவ்வொரு ரூபாயாகச் சேர்த்து வைத்திருப்பவர். எளிதில் ஸிநேகம் பிடித்துக் கொள்ளும் எனக்கு அந்த வீட்டு மாமி மூன்று நாளில் பழக்கமாய் விட்டார். சின்னப்பெண் விமலா அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவாள்.

என் கணவருக்கு எட்டு மணிக்கே ஆபீஸுக்குக் கிளம்பும் உத்தியோகம். பால்காரன் கூப்பிட, வேலைக்காரி சத்தமிட, குழந்தைகள் அழ, என் கணவர் சாப்பிட உட்கார்ந்து விடுவார். வீட்டில் தண்ணீருக்குத் தாளம். குழாய் ஒன்றிரண்டு சொட்டு ஆனந்தக் கண்ணீர் விடும். அந்தச் சமயத்தில் விமலா எனக்கு உதவி செய்வாள். அந்தப் பெண் "மாமி, மாமி!" என்று அன்புடன் கூப்பிடுவதே தனி அழகு. அவள் கள்ளங் கபடின்றித் தன் தந்தையின் கண்டிப்பையும் சிக்கனத்தையும் சொல்லுவாள். எனக்கு உற்ற தோழியாகி விட்டாள். அவள் சிறிது நேரம் வராவிட்டால் கூட என் மனம் வருந்தும்.

அபூர்வமாய் எப்பொழுதாவது விமலாவின் அம்மா வருவாள். ஆனால் எனக்கு மட்டும் அவளுடன் பேசுவதே ரஸிக்காது. திரும்பத் திரும்ப ஒரு விஷயம்தான் அவள் வாயிலிருந்து வரும். "விமலாவின் கல்யாணம் இந்த வருஷம் முடியணும், ஏதாவது நல்ல வரனைச் சொல்லுங்கள்" என்பதுதான். அந்தப் பெரிய காரியத்தை நான் மனம் வைத்தால் செய்ய முடியும் என்பது போலப் பேசுவாள். சில சமயம் அந்த அப்பாவி மனுஷி தன் கணவர் பணம் சேர்ப்பதையே வாழ்க்கை லட்சியமாக கொண்டிருக்கிறாரே தவிரப் பெண்ணுக்கு ஒரு நல்ல வரன் தேட முயற்சிப்பதில்லை என்று சொல்லி அங்கலாய்ப்பாள்.

"உன்னால் கடலைத் தாண்ட முடியும். நீ வாயு புத்திரன் இலங்கையை அடைய முடியும்" என்று சொன்ன பிறகுதான் அநுமார் தம் சக்தியை உணர்ந்தாராம். ஆனால் எனக்கில்லாத சக்தியை இருக்கிறதென்று சொன்னபோது அந்தப் பெருமையை இழக்க நான் விரும்பவில்லை. என்னுடைய வேலைகளுடன் விமலாவுக்குப் புருஷன் தேடுவதையும் ஒரு வேலையாகச் சேர்த்துக் கொண்டேன்.

அந்த வருஷம் என் மாமா பிள்ளை படிப்பு முடிந்து உத்தியோக வேட்டைக்

காகச் சென்னைக்கு வந்தான். வந்தவன் எங்கள் வீட்டில் ஒரு வாரம் தங்கினான். நல்ல பையன், மாமாவுக்கு என்னிடம் தனிப்பட்ட அன்பு. ஆகவே சுந்தரராமனை முற்றுகையிடத் தீர்மானித்தேன்.

அவனையே விமலாவின் கணவனாக்க முனைந்தேன். மாமா, மாமி தருவிக்கப்பட்டார்கள். இவைகளை எல்லாம் செய்யும் பொழுது சாதாரணப் பெண்களை விட நான் எவ்வளவோ உயர்ந்தவன் என்று எண்ணிச் சந்தோஷப்பட்டேன்.

பெண் பார்க்கும் படலம் ஆயிற்று. "பெண் மாநிறம், பாட்டும் சுமார்தான்" என்றான் சுந்தரராமன்.

"ஆமாம், அவள் முகத்தில் களையைப் பார்த்தாயா?" என்றேன். சுந்தரராமன் பதிலே பேசவில்லை.

"என்ன சீர் செய்வார்களோ அதை முதலில் பேசிக்கொள்ள வேண்டும். கல்யாணத்தில் நம்ம மனுஷ்யாளை நன்றாக நடத்த வேண்டும். வீட்டு வேலைகளைப் பெண் நன்றாகச் செய்வாளா?" என்று அம்மாமி அடுக்கினாள்.

"பதினாயிரம் ரூபாய்க்குச் செய்யாமல் போகிறார்களா? பெண் காரியக் கப்பல். அவள் வேலை செய்யும் அழகை நானே பார்த்திருக்கிறேன்!" என்று சொன்னேன்.

"பெண்ணைப் பெற்றவர்கள் குணம் எப்படியோ பெண் நம்மாத்துக்கு வந்து அடங்கி நடக்க வேண்டும்!"

"தங்கமான பெண் நம்ம சுந்தரராமனுக்கு ஏற்றவள்!"

"பாட்டு நன்றாக இல்லை. பெண் கலகலப்பாக இருப்பாளா? அல்லது உன் மாமி மாதிரி சிடுமூஞ்சியா?" இது என் மாமாவின் கேள்வி? — அவர் ஒரு உல்லாசப் பேர்வழி.

"நான் சிடுமூஞ்சியாக இருந்தால் இருக்கட்டும். அந்தப் பிராமணனைப் பார்த்தால் கருமி மாதிரி இருக்கிறது. நாம் பெண்ணைப் பார்த்து விட்டு வாசற்படி கூடத் தாண்டி இருக்க மாட்டோம். விளக்கைப் 'படக்' கென்று அணைத்து விட்டார். பெண்ணும் ரொம்பத் துணிவாகத்தான் இருக்கிறது!" இது என் மாமியின் கருத்து.

"அப்படி நினைக்க வேண்டாம், மாமி! அவர் மிகவும் விதரணையுள்ள மனிதர். அநாவசியச் செலவு, டாம்பீகம் இதெல்லாம் பிடிக்காது. பிறர் ஜோலிக்குப் போகவே மாட்டார். பழகினால்தான் தெரியும், அவர் அருமை. தங்கக் கம்பி!"

## 3

மறுநாளே பெண் வீட்டாரின் அபிப்பிராயம் தெரிந்துவரப் போனேன். மாமி வழக்கம் போல் மிகவும் உற்சாகமாகவே என்னை வரவேற்றார்.

"விமலாவுக்குப் பிள்ளையைப் பிடித்திருக்கிறதாம். உன்னைச் சகோதரி மாதிரி நினைத்துக் கேட்கிறேன். உங்க மாமாவும், மாமியும் நல்ல மாதிரி தானே? நேற்று யாரோ சொன்னார்கள். உங்கள் மாமியும் அவள் தங்கையுமாகச் சேர்ந்து அவர்கள் தம்பி மனைவியைக் கொடுமை செய்து வாழ வொட்டாமல் செய்து விட்டார்களாமே? ஆனால் அவைகளெல்லாம் பராபரிச் செய்தி. நீ சொன்னால் சரிதான். நம்ம விமலா சிறு குழந்தை மாதிரி. அவளுக்கு இடக்கை வலக்கை தெரியாது."



"நன்றாயிருக்கிறது. அப்படித் தவறாக இருந்தால் நான் மதிக்க மாட்டேனா? மாமி சற்று படபடப்பாகப் பேசுவாள். அவ்வளவுதான். மாமிக்கு வெளுத்ததெல்லாம் பால். கருத்ததெல்லாம் நீர். அவளுக்குப் பெண் குழந்தைகள் இல்லை. விமலாவைப் பெண்ணாகப் பாவித்து எப்படித்தான் நடத்துவார்கள் பாருங்கள். மாமாவும் தமாஷ் பேர்வழி. விமலா அதிர்ஷ்டசாலி மாமி. பிள்ளையாண்டான் சாக்ஷாத் ராமன் தான். அப்பா, அம்மாவிடம் அவ்வளவு பக்தி. நல்ல படிப்பு. நாளைக்கே அவனுக்கு உத்தியோகமாகிவிடுகிறது!"

"என்னவோம்மா, அவர்களோ எங்கள் பக்கத்து மனிதர்களில்லை. நூதன சம்பந்தம். உன்னை நம்பித்தான் இதில் இறங்கு

கிறேன். ஜாதகம் பொருந்தி இருக்கிறது. நிச்சயதார்த்தத்தைச் செய்துவிடுவோம்!"

"அவர்கள் சீர் வரிசைகளைப்பற்றிக் கேட்கவில்லை, மாமி! நானாக நீங்கள் பதினாயிரம் ரூபாய்க்குச் செய்வீர்களென்று சொல்லி வைத்தேன்!" என்றேன்.

இரு தரப்பினரும் அவ்வப்பொழுது பச்சையாகச் செய்யும் விமர்சனத்திற்கு மெருகேற்றி என் வாக்குச் சாதுர்யத்தால் நிச்சயம் செய்து விட்டேன். இதை எல்லாம் என் கணவரிடம் சொன்னபொழுது அவர் அவ்வளவாக ரஸிக்கவில்லை. நான் பெருமையாக என்னுடைய சாமர்த்தியத்தைச் சொல்லும்வரையில் வாயைத் திறக்கவில்லை. "ஜெயா, இம்மாதிரி பெரிய விஷயங்களில் நீ தலையிடுவது உசிதமில்லை!" என்று நான் பேசி முடித்ததும் சொன்னார். 'இவருக்கு ஜனங்களே கூடாது. நாலு பேருக்கு நல்லது செய்வதில்லை' என்றெல்லாம் எண்ணி என் மனம் கசந்தது. பெண் வீட்டார் பிள்ளை வீட்டார் இருவரும் என்னைக் கேட்டே ஒவ்வொன்றும் செய்தார்கள். நிச்சய தாம்பூலம் விமரிசையாக நடந்தது. இந்தக் கல்யாணத்தில் நான் முக்கிய பாத்திரமாக விளங்குவேனென்ற பெருமை தலை தூக்கியது. அதில் தனிக் கௌரவம் வந்தது போல் நான் நினைத்தேன். அதைவிட ஒரு பெரிய நல்ல காரியம் செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது என்ற அலாதி திருப்தியும் எனக்கு இல்லாமல் இல்லை.




டாக்டர் (கோபமாக):—நீங்கள் ஒரு டாக்டராக இருந்து இது மாதிரி டாக்டர்பீஸ் கொடுக்காமல் மருந்து கேட்டால் என்ன செய்வீர்கள்?

மருந்து வாங்க வந்தவர் (நிதானமாக):—பொழுதை வீணாக்காமல் நல்ல மருந்தாகக் கொடுத்துச் சீக்கிரமாக அனுப்பி வைப்பேன்.

விவாகத்திற்கு முதல் நாள், மாமியின் தங்கை வந்திருந்தாள். அவளுக்கு நான் கல்யாணத்தில் முன் நின்று செய்வது பிடிக்கவில்லை. அவள் மந்தரையின் வம்சத்தில் வந்தவள். அக்காளிடம் தூபம் போட ஆரம்பித்தாள். ஜான வாசத்துக்கு மாப்பிள்ளைக்குத் தைத்த உடுப்பு நன்றாயில்லை யென்ற அபிப்பிராயம் இலேசாகப் பரவியது. பிற்பகல், சம்பந்தி அம்மா என்னை விசாரித்த அளவு தன்னை விசாரிக்கவில்லை யென்ற புகைச்சல் கிளம்பிப் பற்ற ஆரம்பித்தது. "சுந்தரம் பெண் கொஞ்சம் அசடு மாதிரி இருக்கிறாள். ஜெயா உன் தலையில் இதைக் கட்டிவிட்டாள். சட்டியா, பானையா, நாளைக்கு மாற்ற? பெண்ணை வீட்டுக்கு அழைக்காமல் விட்டால் பொல்லாப் பட்டம் நமக்குத்தான் வரும். பெண் இல்லாத குறைக்கு அக்கா அழகாய்ப் பார்க்க மாட்டாளோ! இனி இனியாய் எவ்வளவு பெண்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்? அக்கா இப்படி இந்தச் சேற்றில் மாட்டிக் கொண்டாளே!" என்று மாமியின் தங்கை சொன்ன சொல் மாப்பிள்ளையின் மனத்தைக் குழப்பின.

அவள் ஒரு ராஜதந்திரி, "அக்கா! இந்த சம்பந்தி அம்மா குடும்பமே மாப்பிள்ளையைக் கையில் போட்டுக் கொள்ளுகிற ஜாதி. பெரிய மாப்பிள்ளை அப்படித் தானாம்." இப்படியாக அவள் மனதில் விஷ விதையை ஊன்றினாள்.

பெண்ணின் தாய் சம்சாரத்தில் அடிபட்டவள். கணவருடைய கட்டுச்செட்டை மறைத்துத் தன்னால் இயன்றவரைச் செய்தாள். ஆனால் பார்க்கிற கண்கள் குற்றக் கண்களாய் விட்டன. வெள்ளிப் பாத்திரங்கள் தகரம் மாதிரி இருப்பதாகக் குற்றம். சாப்பாடு விஷம் மாதிரி.—'விஷத்தை யார்தான் ருசி பார்த்தார்களோ?—இப்படியே புகார்கள். பெண் கறுப்பு. இனி மூக்கு—இப்படியெல்லாம் சொல்லி மாப்பிள்ளையின் கண்களில் திரையைப் போட்டு விட்டார்கள்.

அவனும் ஆசையுடன் மனைவியைப் பார்க்கவில்லை. பிகுவுடன் தாலியைக் கட்டினான். பெண் அவ்வளவு அழகில்லை யென்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். முதலில் கண் எங்கே போயிற்றோ தெரியவில்லை. இம்மாதிரி மனஸ்தாபங்கள் இருபத்துநாலு மணி நேரத்தில் வேகமாக முற்றியது. என் பாடு போதும் போது மென்றாகி விட்டது. எல்லாரும் என்னையே

பார்த்தார்கள். அனைவருடைய பேச்சிலும் என்னைப் பற்றிய குற்றச் சாட்டுத்தான்.

எல்லோரையும் விட என் கணவர் முகத்தைப் பார்க்க வெட்கினேன். அவரும் அந்தக் கல்யாணத்தின் விருந்தினராக இருந்தார். ஆனால் அவர் உலகம் தெரிந்த மேதாவி போலும் என் சங்கட நிலையை பார்த்துப் பரிதாபப்படுவது போலும் எனக்குத் தோன்றியது. அதை என்னால் பொறுக்க முடியவில்லை. ஏன், அதைவிடக் கோபித்துக் கொண்டாலும் பதில் சொல்லிச் சமாளித்துக் கொள்ளுவேன்.

இந்தப் பூசல் இத்துடன் முடிவு பெறவில்லை. மாமி அட்டகாசம் செய்ய ஆரம்பித்து விட்டாள். "என் அருமை மகனுக்கு அழகில்லாத பெண்ணா? கொள்ளை கொள்ளையாகச் சீர் செய்து பெண்ணைக் கொடுக்க எத்தனையோ பெற்றோர்கள் காத்திருக்கும் பொழுது இந்தச் சனியனை ஜெயா தலையில் கட்டி விட்டாள். நாத்தனார் தான் சத்துரு என்றால் அவள் பெண்ணும் என் பிள்ளைக்குச் சத்துருவாக வந்தாளே" இப்படிப் புஸ்வாணங்கள் கிளம்பின. தென்றல் முற்றிப் பெருங் காற்றாகி விட்டது. பெண்ணை அழைத்துக் கொள்ள மாட்டேன் என்கிறவரையில் முடிந்தது.

நாமாகச் செய்த கல்யாணத்தை நாம் தான் சேர்த்து வைக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ரொம்ப சிரமம் எடுத்துக் கொண்டு இருதரப்பினரையும் சேர்த்து வைக்க முயன்றேன். இருதரப்பினரிடமும் அந்தரங்கமாய்ப் பேசினேன்; வெளிப்படையாகப் பேசினேன்; பிள்ளைக்குத் தனியாக உபதேசம் செய்தேன். என் பிரயத்தனம் காரணமாகப் பெண்ணையும், பிள்ளையையும் பெற்றோர்களுக்குத் தெரியாமல் என் வீட்டில் சந்திக்க வைத்தேன்.

இந்தப் புதுத் தம்பதிகளுக்கு என்னால் இந்த உபகாரம் செய்ய முடிந்ததில் எனக்கு அளவற்ற பெருமை.

ஒவ்வொரு அநுபவமும், நமக்கு ஏற்பட்டு உலகத்தை அறிந்து நம் வாழ்க்கையைச் சரிப்படுத்திக் கொண்டு போவதற்கு வாழ்நாள் போதாது. இனிக் கல்யாண விஷயங்களில் தலையிடக் கூடாதென்று ஆயிரம் உறுதி கொண்டது என் மனம். ஆனால் ஆரம்பித்த சுப காரியத்தை முடிக்காமல் விட மனம் இல்லை.

## 4

நாட்கள் ஓடின. சுந்தர ராமனுக்கு உத்தியோகம் கிடைத்தது. சித்தியின் கணவருக்கு வடக்கே மாற்றலாகிப் போய் விட்டார். சதா கலகலப்பின்றி அவன் வாடி வதங்கி அறையோடு இருக்க ஆரம்பித்தான். அவன் மனம் பெரிதும் மாறுதலடைந்திருந்தது. மாமிக்கும் போதனை செய்ய ஒருவருமில்லாததனால் மனதில் சூழ்ந்த பாசி விலக ஆரம்பித்தது. கடவுளுடைய சிருஷ்டியில் என்னதான் விநோதம்! கொடிய நெஞ்சமானாலும் அதில் கருணை ஏற்படத்தான் செய்கிறது.

சுந்தரராமன் தைரியமில்லாத பிள்ளை. கர்ப்பிணியான மனைவியை ஏற்றுக் கொள்ளலாமென்று நெஞ்சம் குமுறியது. வாய் ஒத்துழைக்கவில்லை. இந்தப் போராட்டத்தில் படுத்த படுக்கையாகி விட்டான். இந்தச் சமயம் மாமாவுக்குச் சுதந்திரம் கிடைத்தது. "இப்படிக் கல்யாணமாயும் பிரும்மச்சாரி உண்டா? நீ என்ன ரம்பை? என்ன சீர் வரிசைகளெல்லாம் புரட்டிக்கொண்டு வந்துவிட்டாய்? உன்னோடு வாழ்ந்து நான் குப்பை கொட்டவில்லையா? உடனே அந்தப் பெண்ணை வீட்டுக்கு அழைக்காவிட்டால் சுந்தரம் தேறமாட்டான்" என்று கத்தி அமர்க்களம் செய்தார். கடைசியாக விமலா புருஷன் வீட்டில் தனக்கு ஒரு நிரந்தர ஸ்தானத்தைப் பிடித்துக் கொண்டாள்.

இதனிடையே என் கணவருக்கு வெளியூர் மாற்றலாகி விடவே எங்கள் குடும்பம் அவ்விடம் போக வேண்டியதாகி விட்டது.



ஹோட்டலில் சாப்பிட்டவர் (ஹோட்டல் முதலாளியிடம் கோபமாக):— உங்கள் ஹோட்டலில் போடுவது சாதமா, மண்ணாங் கட்டியா?

ஹோட்டல் முதலாளி:—ருசியைக் கொண்டு அதைக் கண்டு பிடிக்க முடியவில்லையா?

சாப்பிட்டவர்:—முடியாததனால் தானே கேட்கிறேன்?

ஹோட்டல் முதலாளி:—அப்படியானால் நான் சொல்லுவதில் என்ன பிரயோஜனம்?

அடிக்கடி விமலாவிடமிருந்து கடிதம் வரும். இந்தக் கடிதம் என்னுடைய பழைய சிந்தனைகளைத் தூண்டியது.

* * *

**வி**தவிதமான பரிசுகளுடன் விமலாவின் வீட்டுக்குப் போனேன். விமலா, அவள் அம்மா, மாமி எல்லோருமே என்னை ஆவலாக வரவேற்றார்கள். "தலை தீபாவளி என்றுதானே அழைப்பு வந்தது? குழந்தைக்குத் தொட்டில் கல்யாணம் என்று வரவில்லையே!" என்றேன்.

"இரண்டும் தான்" என்றாள் மாமி.

குழந்தையைத் தொட்டிலில் விடும் சமயம். ஆண் குழந்தை. புஷ்பம் போன்ற மேனி. ஆனந்த மோன நிலையில் தூங்குகிறான். உலகத்தில் பிறக்கும் குழந்தைகள் அனைவருமே கண்ணன் அம்சம்தானோ? பட்டுப்போன்ற கைகள், குட்டிக்கால்கள், உச்சி முகர்ந்தால் பால் மணம். மகிழ்ச்சி பொங்கச் சுந்தரம் குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டான். மாமனார் சுழலும் மின்சார விசிறியை நிறுத்தினார்.

"விமலா, அப்பாவுக்குப் பேரன் மேல் என்ன ஆசை பார்த்தாயா? இந்தக் காற்று உடம்புக்கு ஆகாதாம்!" என்றார் மாமி. விளக்கை அணைத்ததற்குக் கரும் பென்று பட்டம் கொடுத்த மாமிக்கு இந்தச் செய்கை எப்படி அர்த்தம் கற்பிக்கிறதென்று எண்ணி வியந்தேன்.

விமலாவுக்கு ஆனந்தம் கரை புரண்டது. அவர்கள் சந்தோஷத்தில் எனக்குச் செய்த உபசாரம் திணற அடித்தது.

"விமலா, அதிகமாய்ப் பேசாதே. பலஹீனமான உடம்பு. சீக்கிரம் உடம்பைத் தேற்றிக் கொண்டு ஊர் வந்து சேரவேண்டாமா? குழந்தையைப் பிரிந்து எங்களால் இருக்கவே முடியாது" என்றாள் மாமி. விமலாவை வெறுத்த மாமியா இப்படிப் பேசுகிறுளென்று திகைத்தேன்.

சுந்தரராமன் அங்கேயே சுற்றிச் சுற்றி வட்டமிட்டான்.

குழந்தைக்குப் பெயரிடும் சுப வேளை வந்தது. "ஜெயா மாமியினால்தான் உன் வாழ்வு நிலைபெற்றது. குழந்தைக்கு அவர் சொல்லும் பெயர்தான் வைக்க வேண்டும்" என்றாள் விமலா. நானும் சம்மதித்தேன்.

எல்லோரையும் ஒன்று சேர்த்து ஆனந்திக்கச் செய்யும் மோகன சக்தி இந்தக் குட்டிப் பாப்பாவுக்கு இருக்கிறதே என்று நினைத்தேன். மோகன என்ற பெயரையே குழந்தைக்கு வைத்தேன். மஞ்சள் குங்குமத்துக்கு வந்த பெண்கள் "காந்திஜீயின் பெயரென்று வைத்தீர்களா, மாமி?" என்றார்கள். இரண்டு பங்காக வரும் பெருமையை நான் ஏற்றுக் கொண்டேன்.

# வட்ட மேஜை

## ★ செவிடரின் நிலை

அன்றொரு நாள் நான் "இலங்கையில் ஒரு வாரம்" என்று 'கல்கி'யார் அவர்கள் எழுதிய கட்டுரையை வாசித்துக் கொண்டிருந்தேன். அதில் 'கல்கி'யார் அவர்கள், "எப்போதுமே நமக்குத் தம்முடைய காதின் மேல் நம்பிக்கை கிடையாது" என்று எழுதியிருந்ததைப் படித்த உடன் எனக்கு மிகவும் சிரிப்புண்டாயிற்று. ஏனெனில், அவரே அப்படிக்கூறியிருக்கும்போது செவிடர்களாகிய எங்கள் கதி என்ன! என்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறேன்.

இதைக் கேளுங்கள். "செவிடன் 'காதில்' ஊதிய சங்குபோல் உனக்கு நான் எவ்வளவு புரியும்படி சொன்னாலும், மண்டையில் ஏறுதுடா!" என்று ஆசிரியர் பையனைக் கண்டிக்கிறார். அப்போது என் மனது மிகவும் சஞ்சலப்படுகிறது. 'செவிடன் காதில்' என்பதால் செவிடனுடைய 'காதுக்கு அருகே' என ஆகிறது. அதுகூட அவசியமில்லை. நீங்கள் ஒரு செவிடனுக்கப்பால் ஒரு கஜம் அல்லது இரண்டு கஜம் தள்ளி நின்று, சங்கை ஊதச் செய்தால், அவன் அதை நிச்சயம் உணர்வான் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை. ஒருவன் முக்கால் செவிடாயிருந்தாலும் சரி; அல்லது முழுச் செவிடாயிருந்தாலும் சரி; அவனுக்கும் சங்கின் சத்தம் சிறிதளவாவது நிச்சயமாய்க் கேட்கும் என்பதை செவிடனாகிய நான் மிகவும் வலியுறுத்திக் கூறுகிறேன். ஆகவே, இனிமேலாவது ஒருவரும் இந்த உபமானத்தை உபயோகிக்கமாட்டார்கள் என எண்ணுகிறேன்.

இன்றைய உலகில் ஒரு செவிடனின் நிலை என்ன! தாழ்ந்த சமூகம் முன்னேற வழி பார்க்கிறது. முன்னடைந்த சமூகம் இன்னும் முன்னேற முயற்சி செய்கிறது. ஆனால், இரு சமூகத்திலும் உள்ள பெரும்பாலான செவிடர்களின் கதி என்ன! அவசியம் ஆலோசிக்க வேண்டிய விஷயம் ஆகும்.

படித்துப் பட்டம் பெற்ற செவிடனாகிய என் நிலையைக் கேளுங்கள். நான் சிறுவனாயிருக்கும்போது, என் சிநேகிதர்கள் என்னைக் கேலி பண்ணும்போது, பொறுக்க முடியாத அளவு கோபமும், துன்பமும் எனக்கு உண்டாகும். ஆனால் அதே சமயத்தில், அவர்கள் உண்மையைத்தானே சொன்னார்கள்; அவர்கள்மேல் கோபப்படுவது நியாயம் இல்லையே, என மனதைத் தேற்றிக் கொள்வேன்.

படிக்கும்போது, ஆசிரியர், என்னிடம் ஒரு கேள்வி கேட்டார். அவர் கேட்ட கேள்வி என் காதில் சரியாய் விழாததால் நான் ஒன்றும் சொல்லாமல் நின்றேன். அப்போது அவர், (நான் செவிடன் என்று அவருக்குத் தெரியும்) "இந்தச் 'செவிட்டு இழவு' எல்லாம் எதற்காகப் படிக்கவேண்டும்!" என்று கோபத்தோடு கூறினார். பாவம், என்னுடைய தாபத்தை அவர் எங்கே அறிவார்! செவிடர்களுக்கு மட்டும், தான் முன்னேறவேண்டும், படிக்கவேண்டும், பட்டம் பெறவேண்டும் என்ற ஆசையும் உணர்ச்சியும் கிடையாதா!

உபாத்தியாயர் சொல்வது காதில் விழவில்லை என்றால் என்ன! புஸ்தகம்தான் இருக்கிறதே! அதைப் படித்தால் என்ன! என்று சிலர் கேட்கலாம். வாஸ்தவம்தான். மற்ற மாணவர்களுக்கும், அப்படித்தானே! அப்படியானால் ஆசிரியரோ, பள்ளிக்கூடமோ, தேவையில்லையே! ஆகவே, செவிடர்களைச் சிறிது முன்னால் இருக்க வசதி செய்து கொடுக்கும்படி, அரசாங்கத்தாரையும், ஆசிரியரையும் கேட்டுக் கொள்கிறேன். ஆசிரியர் சொல்லுவது விளங்கினால்தான் புஸ்தகத்தைப் படிக்க முடியும். இதனாலன்றோ, "கற்றலின் கேட்டலே நன்று" என ஆன்றோர்கள் கூறியுள்ளனர்.

"செல்வத்தில் எல்லாம் தலைசிறந்த செல்வம் செவிச் செல்வம்" என வள்ளுவர் கூறுகிறார். ஆம். முற்றிலும் உண்மை. செவியற்றவன் வாழ்வு சீரழிந்த வாழ்வே. சீரழியும் செவிடர் வாழ்வைச் செப்பனிட முடியாதா! முடியும். பொது ஜனங்கள் அவர்களை இடித்துக் காட்டாமலிருந்தால், படித்த மாணவர்கள் உதவி செய்யாவிட்டாலும், அவர்கள் மனதை நோகச் செய்யாமலிருந்தால், ஆசிரியர் பலபேர் முன்னிலையில் அவன் செவிடன் என்று அறிந்தும், அவனைக் கேலி பண்ணாமலிருந்தால், அவனால் ஓரளவு முன்னேறத்தான் முடியும்.

மாணவர்களும், பொது ஜனங்களும் என்ன கேலி பண்ணுகிறார்கள்! என்று சிலர் கேட்கலாம். நடந்த உண்மைச் சம்பவம் ஒன்றைக் கூறுகிறேன், கேளுங்கள். நான் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் என "ரிஸல்ட்" வந்தது. மறுநாள் எங்கள் ஊரில் சில இடங்களில் என் பெயர், நெம்பர் எல்லாவற்றையும் எழுதி, இந்தச் செவிட்டு மாணவன் பாஸாகிவிட்டான் என்று எழுதப்பட்டிருந்தது. என்ன! அவன் கூடப் பாஸாகி விட்டானா! என்று அதை வாசித்த சிலர் கேட்டார்கள். என்னே பேதமை! ஏன்! செவிடனிடம் அறிவு, ஆற்றல் கிடையாதா! யாராவது ஒருவர் பதில் சொல்லட்டும் பார்க்கலாம்.

ஆழ்வார்க்குறிச்சி
10—10—50

"ஒரு மனமொடிந்த செவிடன்"

○●○

## புண்ணியவான்கள்!

கிராம ரேஷன் கடைக்காரர்களுக்கு அதிர்ஷ்டம் வந்தாலும் வந்தது, ஒரே அடியாக யோகம் மேலோங்க நிற்கிறது. இந்த ரேஷன் சம்பந்தமான, பிர்க்கா சப்ளை ஆபீசர், தாலுக்கா சப்ளை ஆபீசர் முதலியவர்களுக்கும் அதிர்ஷ்டம் வந்து அணைத்துக் கொண்டிருக்கிறது. எங்கள் பிரதேசத்தில் ரேஷன் நிலைமையைப் பற்றி மனதால் நினைத்தாலே கதிகலங்குகிறது. அவர்கள் கிராம மக்களை எவ்வளவு

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'செவிடரின் நிலை' என்ற கடிதம் எழுதிய "ஒரு மனமொடிந்த செவிட"ருக்கும், 'நாமும்—கடைக்காரர்களும்' என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ என். டி. சுந்தரத்துக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது



முதல் நாய்:—என்னப்பா, சௌக்கியமா? உங்கள் ஊரிலே பூகம்பம் ஒன்றும் வரவில்லையே!

இரண்டாவது நாய்:-பூகம்பம் வரவில்லை; ஆனால் "குப்பை வாரம்" வந்து நம்ம குப்பை மேடு களெல்லாம் அழிந்து இருக்க இடமில்லாமல் தவிக்கிறேன்!

---

கேழ்த்தரமாக மதிக்கிறார்கள் என்பதை வாயினால் சொல்லவோ, எழுதவோ முடியவில்லை.

ஒவ்வொரு ரேஷன் கடைக்காரரும் வாரக் கடைசியில் கணக்குக் கொடுக்கத் தாலூக்கா தலைநகருக்குச் செல்லுகிறார். அங்கு அதிகாரி போதிய ஸ்டாக் இல்லை என்று சொல்லுகிறாராம். பிறகு கடைக்காரர் 'ஒருவாறு கவனிக்க' அவர் சப்ளை செய்கிறார். கடைக்காரர் அரிசி, நெல் முதலிய ரேஷன் சாமான்களைப் பெற்றுக் கொண்டு அந்த நகரத்திலேயே சில மூட்டைகளைப் பிளாக்மார்க்கெட்டில் ஒழித்துக் கட்டிவிட்டு, தங்கள் இஷ்டப்படி மீதியுள்ள மூட்டைகளைக் கிராமத்துக்குக் கொண்டு வருகிறார்கள். கொண்டு வந்து குரைக்கும் நாய்க்கு எலும்புத் துண்டை எறிவதைப் போல, ஊரில் உள்ள ஒரு சிலருக்கு ரேஷனைக் கொடுத்துவிடுகிறார்கள். அடுத்தபடியாக அவர்களின் நெருங்கிய உறவினருக்குக் கொடுக்கிறார்கள். உயர்தரமான பொருளாயின் தங்களுக்கு வேண்டிய மட்டும் எடுத்துக் கொள்ளுகிறார்கள். கடைசியாக ஐந்தாம் நாளான வியாழன் அல்லது வெள்ளியன்று ஊரிலுள்ள இதர ஜனங்களுக்குக் கொடுக்க ஆரம்பித்து, இவ்வாரம் சப்ளை செய்தது மிகக் குறைவு என்றும் இரண்டொரு நாளைக்குத் தான் ரேஷன் கொடுக்க இயலும், என்றும் கடுகடுப்பாகக் கூறிக் கொடுத்து அனுப்புகின்றனர்.

அநேக எளியவர்களின் ரேஷன் கார்டுகளை நூற்றுக்கணக்கில் ரேஷன் கடைக்காரர்களே வைத்திருக்கிறார்கள். இதனுடைய உட்கருத்தைக் கபடமற்ற மக்கள் எவ்வாறு உணர்ந்திருக்கக் கூடும்! சொந்த நெல் தருவதாக ரூபாய்க்கு ஒன்றரைப்படி நெல் விதம் விற்கிறார்கள். சர்வ சாதாரணமாக இந்தப் புனித காரியம் களிப்புடன் நடத்தப் படுகிறது.

"நாட்டின் நிலைமையை உணர்ந்து ரேஷன் கடைக்காரர்கள் மக்களிடம் நியாயமாக நடந்து கொள்வார்களா! ரேஷன் அதிகாரிகள் ரேஷன் கடைக்காரர்களை நியாயமாக நடக்கும்படி நடவடிக்கை எடுப்பார்களா! இந்த ரேஷன் தொந்தரவுகள் நீங்கி நாட்டில் எப்பொழுது நியாய விலைக்கு அரிசி கிடைக்குமோ!" என்று ஏங்குவதைத் தவிர வேறு ஒன்றும் வழியிருப்பதாகத் தோன்றவில்லை.

12—10—50 ஏ. நாராயணன்

○●○

## உண்மை அழியாது

உலக அறிவாளிகளில் ஒருவரும் இந்தியாவின் அரசாங்கத்திலும் பொது அரங்கிலும் உன்னத பதவி வகிக்கும் ஒருவருமாகிய அம்பேத்காரின் அறிவு மெச்சத் தக்கதா? என்ற கேள்வியை நான் கேட்கும்பொழுதே இவன் யாரோ பயித்தியம் என்று நீங்கள் எண்ணிக் கடிதத்தைப் படிக்காமலே விட்டு விடப் போகிறீர்கள். ஆனால் ஞாபகமிருக்கட்டும்; பொறுமைக்கே பூரணத்துவம் கொடுத்த இந்து சமயத்தவர் நீங்கள் என்பது.

புத்த சமயத்திற்குத் தாம் புத்துயிர் கொடுப்பதாயும், புத்த சமயத்திற்கே தமது வாழ்நாட்களை அர்ப்பணிக்கப் போவதாயும் அறை கூவுகிறார் அம்பேத்கார். நன்றாகச் செய்யட்டும். புத்த சமயம் மாத்திரமல்ல, வெவ்வேறு கொள்கைகளையுடைய எத்தனையோ சமயங்கள் தோன்றின; மறைந்தன. அப்பொழுதும் எல்லா சமயமும் நல்ல சமயம் என்ற அறக் கொள்கை பிறழாமல் எல்லாவற்றையும் ஆதரித்து அனுசரித்த சமயம் இந்து சமயம். தன்னைத் தாக்கிய சமயத்தவரையும் அன்புக் கண்ணால் நோக்கிய சமயம் இந்து சமயம். காலத்தின் தாக்குதலை எதிர்த்துப் போராடித் தலை நிமிர்ந்து நிற்கும் சமயம் இந்து சமயம். ஆதலால் எப்பேர்ப்பட்ட அறை கூவலையும் நாம் வெறுக்கப் போவதுமில்லை. அதற்கு அஞ்சப் போவதுமில்லை.

இவ்வளவையும் எதற்காக எழுதுகிறேன் என்பதைக் கீழே "சிலோன் டெயிலி நியூஸ்" என்னும் ஆங்கிலப் பத்திரிகையில் 4-10-50 ல் வெளியான செய்தியைப் படித்தால் விளங்கும்.

"தற்பொழுது இருக்கும் இந்து சமயம் ஆயிரம் வருஷங்களுக்கு முன் இருந்த புத்த சமயமே யல்லாமல் வேறொன்றுமல்ல. முகம்மதிய ஆட்சியாலும் வேறு காரணங்களாலும் கலப்புற்று அதன் புனிதத்தன்மை குன்றியிருக்கிறது" என்று டாக்டர் அம்பேத்கார் கூறியுள்ளார்.

என்னே அம்பேத்காரின் ஆராய்ச்சி! இது இந்து சமயத்தைத் தூஷிப்பதேயல்லாமல் வேறொன்றுமில்லை. கிறிஸ்துவ மதத்தவர் தான் கடவுளைக் காண்பதற்கு அனுமதிச் சீட்டுப் பெற்றவர்கள், மற்றவர்கள் அஞ்ஞானிகள் என்று கூறும் பாதிரிமார்களுக்கும் அம்பேத்காருக்கும் என்ன வித்தியாசம்! இன்னும் சிலகாலம் சென்றால் புத்தர் பிறந்த தேதியையே மாற்றிச் சரித்திர அறிஞர்களுக்கே சவால் விடுவார்போல் இருக்கிறதே!

தனது கட்சியைப் பலப்படுத்த வேண்டுமானால் மற்றக் கட்சியைத் தாழ்த்திப் பேசினால்தான் முடியும் என்ற எண்ணம் இப்படிப்பட்ட மேதைகளுக்குத் தகுமா!

ஒரு மாணவன் பல பாடங்களைப் படித்தாலும் ஒன்றில்தான் பாண்டித்தியம் அடை

கிறான். அதிலேயே பட்டமும் பெறுகிறான். புத்தர் பல பகுதிகளையுடைய இந்து சமயத்தைப் படித்து அதில் ஒரு பகுதிக்கு விரித்துரை கூறினார். அதனால் அவர் இந்து சமயத்தின் கர்த்தாவாக முடியாது. புத்த சமயமே இந்து சமயம் என்று கூறவும் முடியாது. இந்தச் சிறு உண்மை சட்ட நூல்களை அலசி ஆராயும் அம்பேத்காருக்கு விளங்காமற் போனது விந்தையிலும் விந்தையே!

இங்கே, இலங்கையில் அம்பேத்கார் கூறிய வாக்கே தேவ வாக்கு என்று நினைத்துச் சிலர் புத்த மதத்தைத் தழுவி விட்டனர் என்பதை அறிந்து வருந்துகிறோம். தன் தாய் வறுமைப்பட்டு விட்டாளென்று நினைத்துப் அவளைப் புறக்கணித்து இன்னொருத்தியைத் தாயாகச் சுவீகாரம் செய்து கொள்ளலாமா!

அம்பேத்கார் அவர்களே! மணமுள்ள பூவுக்கு விளம்பரம் வேண்டியதில்லை. உமது சமயத்தையும், உமது கொள்கையையும் எவ்விதப் பிரசாரத்தால் பரப்ப முடியுமோ அப்படியே செய்யுங்கள். அதற்காக எமது தாயாகிய இந்து சமயத்தைப் பழிக்க எத்தனிக்க வேண்டாம். உண்மையை அழிக்க முடியாது.

இலங்கை
8—10—50 நா. த. நடராஜா

○●○

## ★ கதரும்-கடைக்காரர்களும்

நாட்டுக்கு விடுதலை வந்தபின், தேசபக்தியும் தியாக புத்தியும் குறைந்து விட்டதைப் போலவே கதர் உடுத்தும் உறுதியும் குலைந்து விட்டது. இதற்குப் பல காரணங்கள் உண்டு. முக்கியமாகக் கருப்பு மார்க்கெட்டுக்காரர்களும் புதிய காங்கிரஸ்காரர்களும் கதர் உடுத்தி அவர்கள் செய்யும் பாதகத்துக்கு ஒரு படுதாவாக உபயோகிக்க ஆரம்பித்தனர். இரண்டாவது அதிகாரத்தில் இருப்பவர்களும் கதராடையை அணிந்திருப்பதால், அவர்கள் மீதுள்ள அரசியல் வெறுப்பு பொதுவாக கதர் கட்டுபவர்கள் மீதும் பரவத் தொடங்கி விட்டது.

இந்த விருப்பு வெறுப்புக்களையெல்லாம் தாண்டி துறவு மனப்பான்மையுடன் மகாத்மா காந்தியடிகளை நினைத்து, அவர் கட்டளை தவறாமல் கதரைக் கட்டலாம் என்று கதர்க் கடைக்குப் போனால், அங்கு கதரை விற்பனை செய்பவர்கள் கதர் வாங்கச் செல்பவரை மிக மிகக் கேவலப்படுத்துகிறார்கள்.

அதாவது பிரிட்டிஷ் அரசாங்கத்தில் கிரிமினல் வழக்கில் தண்டிக்கப்பட்ட தேசபக்தனை மாஜிஸ்ட்ரேட் விசாரிக்கும் கடுமையைவிடக் கீழ்த்தரமான கையாண்டிக் கேள்விகளைக் கேட்டு, கதர் வாங்கச் சென்றவரின் பொறுமையைப் பரிசோதித்து விடுகிறார்கள். கதர்க் கடையில் இருப்பவர்கள் கதர் அன்பர்களுக்குத் தனிச் சிறப்புச் செய்யா விட்டாலும், மற்ற ஜவுளிக் கடைகளில் வியாபார முறையில் பேசும் சாதாரண இன் சொல்லாவது பேசி, கடைக்கு வந்தவர்களை விசாரித்து, அவர்களுக்குத் தேவையானதை, மரியாதையுடன் இருக்குமானால் இருக்கிறதென்றும், இல்லாவிட்டால் இல்லை என்றும் சொல்லலாம்.

அறிவறிந்த நாள் முதல் கதருடுத்தும் என் போன்றவர்களையே, இந்தக்கதர்க்கடைச் சிப்பந்திகளின் பேச்சு புண்படுத்துகிறது என்றால், புதிதாக கதர் உடுத்த எண்ணி, கடைக்கு வரும் நண்பர்களின் மனம் எப்படி யிருக்கும்! அவர்கள், கதர் ஸ்தாபனத்தைப் பற்றியும், நிர்வாகத்தைப் பற்றியும் என்ன நினைப்பார்கள்!

கதர் விற்பனை அதிகமாக வேண்டுமானால், தேசத் தந்தை கண்டு பிடித்த நிர்மாண வேலையாகிய கதர் இயக்கம் பெருக வேண்டுமானால் கதர்க் கடைக்காரர்கள், அயல் நாட்டு ஜவுளிக் கடைக்குச் சென்று, வியாபார நளினத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும். இரண்டாவது, நூல் கொடுக்கும் திட்டம் கைவிடப்பட வேண்டும். இவை நடக்காவிடில் கதர் இயக்கம் குன்றிவிடும் என்று நல்ல மனமுடையவர்கள் எச்சரிக்கை செய்யாமலிருக்க முடியாது.

சென்னை
15—10—50 எஸ். டி. சுந்தரம்

## பிரபல திருமணம்

திருநெல்வேலி ஜில்லாவின் பிரபல காங்கிரஸ் பிரமுகரான ஜனாப் வி. எஸ். டி. முகம்மது இப்ராகிம் அவர்களின் அருமைக் குமாரர்கள் ஜனாப் முகம்மது சதக்கதுல்லாவுக்கும் ஜனாப் சம்சுதாஜனிஸுக்கும் அவருடைய மருமகரான ஜனாப் எஸ். எம். எஸ். அகம்மது அலிக்கும் சமீபத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் பிரமுகர்களும் திரளாக விஜயம் செய்து சிறப்பித்தனர். திருமணத்தின்போது ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத் முதல் பல மத்திய சர்க்கார் மந்திரிகளிடமிருந்தும் மாகாண சர்க்கார் மந்திரிகளிட மிருந்தும் இன்னும் தமிழ் நாட்டிலுள்ள முக்கிய பிரமுகர்களிட மிருந்தும் எண்ணற்ற வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. வாழ்க மணமக்கள்!

# அப்பா எங்கே?

எஸ். சங்கரன்

"அப்பா...அம்மா...அண்ணா......" என்று தன் அரிச்சுவடிப் புத்தகத்திலிருந்து பாடத்தைப் படித்துக் கொண்டிருந்தாள் லோசனி. திடீரென்று என்ன தோன்றியதோ, வாசிப்பதை நிறுத்தி விட்டு ஒரு கணம் யோசித்தாள்.

"ஏம்மா, அப்பா இங்கே வரதே இல்லே, அவர் எங்கே?" என்ற கேள்வியுடன் பதிலை எதிர் நோக்கி மலர்ந்த கண்களுடன் தன் தாயைப் பார்த்தாள்.

மேஜையருகில் அமர்ந்து பரீட்சைக்குக் கேள்விகள் தயாரித்துக் கொண்டிருந்த யமுனாவுக்கு லோசனியின் இந்தக் கேள்வியைக் கேட்டு 'திக்' என்றது. குழந்தை லோசனி சில சமயங்களில் 'எக்கச்சக்கமாக' இப்படிப்பட்ட கேள்வியைக் கேட்கும்போதெல்லாம் அவள் மனம் படாத பாடு படும். என்னவெல்லாமோ பதில் சொல்லி மழுப்புவாள்.

"இப்ப லீவு கிடைக்கவில்லையாம். அடுத்த மாதம் வருவதாக எழுதியிருக்கிறார்" என்று பச்சைப் புளுகொன்றைச் சொல்லிவைத்தாள். குழந்தை இந்தப் பதிலினால் தற்காலிகமாக சமாதானமடைந்து மீண்டும் தன் பாடத்தில் கவனம் செலுத்தத் தொடங்கினாள். ஆனால் யமுனாவின் உள்ளத்திலோ பெரும் எரிமலை குமுறி எழுந்து விட்டது.

"அப்பாவுக்காக இப்படி ஏங்குகிறதே! இந்தக் குழந்தை எல்லோரையும் போல் கரிசனமாக இருந்து விட்டால் எப்படியிருக்குமோ?" என்று நினைத்தபோது அவளுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்தது. மறக்க முயன்று கொண்டிருந்த பழைய சம்பவங்கள் அவள் மனத்திரையிலே வந்து வட்டமிட்டன.

## 2

எல்லாப் பெண்களையும் போல் யமுனாவுக்கும் 'அது' நடக்கவேண்டிய வயதில் தான் நடந்தது. ஒரே பெண் என்பதற்காகவும், நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட வேண்டும் என்பதற்காகவும் தனது சக்திக்கு மீறியே அவள் தந்தை எல்லாவற்றையும் செய்தார். ஆனால் அவள் புகுந்த வீட்டிலோ இதனால் எல்லாம் திருப்தியடைந்து விடவில்லை.

"அதைச் செய்யவில்லை; இதைச் செய்யவில்லை" என்று மாமியார் இடித்துக் காட்டிய பொழுதெல்லாம் யமுனாவின் மனம் விவரிக்க இயலாத வேதனையடைந்தது. 'பேசியபடி வைரத்தோடு போடவில்லை' என்று நிச்சயதார்த்த தினத்தன்றே தகராறுக்கு அங்குரார்ப்பணமாகி விட்டது. அது படிப்படியாக, விசுவரூபம் எடுத்து யமுனாவின் வாழ்க்கையையே சூன்யமாகும்படி செய்து விட்டது. ரங்கநாதனோ அம்மாவுக்கேற்ற பிள்ளையாக இருந்து வந்தான். அவனுடைய சம்பாத்தியம் சௌகரியமாக வாழ்க்கை நடத்தப் போதுமானதாகவே இருந்தது. இருந்தும் அவன் தகப்பனற்ற பிள்ளையாக இருந்ததால் அம்மாவின் வாக்கே அவனுக்குத் தேவ வாக்காக இருந்தது.

நாலு பேரிடம் சொல்லிப் பெருமைப்படும்படியான அளவுக்குச் சீர்கொண்டு வரவில்லை என்ற காரணத்தினால் யமுனா செய்யும் ஒவ்வொன்றும் குற்றமாகவே பட்டது அவர்களுக்கு. இந்தச் சூழ்நிலையில் இரண்டாண்டுகள் ஓட்டிய பின்னர்தான் லோசனி பிறந்தாள்.

விதியை நொந்துகொண்டு வாழ்க்கை நடத்தி வந்த யமுனா குழந்தை பிறந்த பின்னராவது தனக்கு விமோசனம் வராதா என்று காத்திருந்தாள். அப்போதும் அதற்கு நேர்மாறாக நடந்து விட்டது. பேத்தி பிறந்த சந்தோஷத்தில் ரங்கநாதனுடைய தாயார் கொஞ்சம் பூரித்துப் போனாள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் அது நீடிக்கவில்லை.

"குழந்தைக்குச் சித்திரை நட்சத்திரமா? குடும்பத்துக்கு ஆகாது என்பார்களே?" என்றாள் குழந்தையின் புண்யாவசனத்துக்கு வந்துவிட்டுப் போன ஒரு பாட்டி. அதற்கேற்றாற் போல் ஒன்றன் பின் ஒன்றாகப் பல சம்பவங்கள் நடந்து விட்டன. ரங்கநாதனுக்கு வேலை போய் விட்டது. சீரும், சிறப்புமாகக் கல்யாணம் செய்து கொடுத்த அவன் தங்கை விதவைக் கோலத்துடன் வீடு வந்து சேர்ந்து விட்டாள். அவ்வளவுதான்! எல்லாம் பச்சைக் குழந்தையின் தலையில் போய் விடிந்தது. யமுனாவுடன், குழந்தையையும் சேர்த்து வீட்டில் உள்ளவர்களெல்லாம் கரித்துக் கொட்ட ஆரம்பித்தனர்.

தன்னை யாராவது ஏதாவது சொன்னால் யமுனா இப்பொழுதெல்லாம் பொருட்படுத்துவதில்லை. ஆனால் ஸ்வர்ண விக்கிரகம் போன்ற தன் பச்சிளங் குழந்தையை யாராவது ஏதாவது சொல்லி விட்டால் அவளால் சகிக்க முடிவதில்லை.

ஒரு நாள் மாமியார், "வரும்போது வாரிக் கட்டிக்கொண்டு வந்தயோன்னோ, இருக்கிற இரண்டொன்றையும் துடைச் கட்டுப் போக! 'துடைகாலி!' ஒன்றைப் பெற்று விட்டாயாக்கும்" என்று சொன்ன போது யமுனாவுக்குத் தன்னையும் மீறிக் கோபம் வந்து விட்டது.

"பச்சைக் குழந்தை என்னத்தைக் கண்டது மாமி? அதன் மீது ஏன் எரிந்து விழுகிறீர்கள்?" என்றாள். யமுனா எதிர்த்துப் பேசியது இதுதான் முதல் தடவை. அவள் மாமியார் இதைக் கேட்டு காளி அவதாரம் எடுத்து விட்டாள்.

"இன்றைக்கு இரண்டிலொன்று தீர்த்து விடுகிறேன்" என்று சொல்லி ரங்கநாதனை எதிர்பார்த்துக் கொண்டு அலங்கோலமாய் உட்கார்ந்திருந்தாள்.

இரவு ஒன்பது மணிக்குமேல் தான் ரங்கநாதன் வீட்டுக்குத் திரும்பி வந்தான். அலுப்புடன் களைத்துச் சோர்ந்து வந்த அவனிடம் யமுனா மீது நீண்டதொரு குற்றப் பத்திரிகையைப் படித்து அவனுக்கு வெறி யூட்டி விட்டாள்.

"இந்தாடா ரங்கா! இனி நீயாச்சு, உன் பெண்டாட்டியாச்சு. என்னால் ஒரு நிமிஷம்கூட இந்த வீட்டிலே இருக்க முடியாது. காசியோ, ராமேசுவரமோ எங்கேயாவது போகிறேன்! நான் காளியாம்......அவளையும் அவள் அழகுக் குழந்தையையும் கரித்துக் கொட்டுகிறேனாம்" என்று சொல்லித் தாயார் கண்ணைக் கசக்கியதைப் பார்த்ததும் ரங்கநாதன் தன் நிலையையே மறந்து விட்டான்.

"நீ எதுக்காக அம்மா போகிறது? இன்னியோட அந்தச் சனியன் தொலையட்டும்" என்று யமுனாவை வாசலில் தள்ளிக் கதவைத் தாளிட்டு விட்டான்.

அது நடந்து இப்பொழுது ஐந்து வருஷங்களாகி விட்டன. கடுங் குளிரில் கைக்குழந்தையுடன் நடுத்தெருவில் வெகு நேரம் நின்று கொண்டிருந்த யமுனா தன் எதிர்காலத்தைப் பற்றி ஒரு தீர்மானமான முடிவுக்கு அப்பொழுதே வந்து விட்டாள். அவளுக்கு உறவு என்று சொல்லிக் கொள்ளும்படியாக அத்தை ஒருத்திதான் இருந்தாள். சென்னையிலிருந்த அவளிடம் அடைக்கலம் புகுந்தாள் யமுனா. ஏற்கெனவே அவள் எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்திருந்தாள். தையல், பின்னல் வேலைகளிலும் நல்ல தேர்ச்சி உண்டு. அதனால் சுலபமாக ஒரு பெண்கள் பள்ளிக்கூடத்திலே அவளுக்கு வேலை கிடைத்தது.

குழந்தை லோசனிக்கு இப்பொழுது ஐந்து வயதாகிவிட்டது. அவள் மழலையிலே இன்பம் கண்டு வந்தாள் யமுனா. பூர்வாசிரம நினைவுகளை அனேகமாக அவள் தன் நினைவிலிருந்து அகற்றிவிட்டாள். ஆனால் சென்ற ஒரு வருஷ காலமாக லோசனி அதைக் கிளறிவிட்டுக் கொண்டிருந்தாள். வீட்டை விட்டுவந்த பின்னர் தன் புருஷனைப் பற்றியோ மற்றவர்களைப் பற்றியோ எதுவுமே தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டுமே என்று அவள் கவலைப்பட்டதுமில்லை. அப்பாவைப் பற்றிக் குழந்தை கேட்கும் போது



மாத்திரம் மனதில் தோன்றியபடி எதையாவது சொல்லி லோசனியைச் சமாதானம் செய்து வந்தாள்.

இவ்விதம் பழைய நினைவுகளில் தன்னை மறந்திருந்த யமுனா சுய உணர்வுவந்து பார்த்த பொழுது குழந்தை லோசனி அத்தைப் பாட்டியின் அணைப்பில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

## 3

அன்று யமுனா பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்பும்பொழுது விளக்கு வைக்கும் நேரமாகிவிட்டது. வந்ததும் வராததுமாகத் தலையில் கல்லைத் தூக்கிப் போட்டாற்போல் எதிர்வீட்டுப் பையன் ஓடிவந்து அந்தச் செய்தியைச் சொன்னான். லோசனிமீது கார் ஏறிவிட்டதென்றும், அவளை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள் என்றும் அவன் சொன்னதைக் கேட்டு அவள் இதயம் வெடித்துச் சுக்கு நூறாகி விடும்போலிருந்தது.

ஆஸ்பத்திரியில் குழந்தை லோசனி இருந்த நிலையைக் கண்டு அவள் பயந்து விட்டாள். ஸ்மரணையற்றுக் கிடந்தது குழந்தை. தலையிலும், உடம்பில் பல இடங்களிலும் கட்டுகள் போடப்பட்டிருந்தன. இதைப் பார்த்த யமுனா பதறிப் போனாள்.

எதிர்பாராத விதமாக குழந்தை காரில் சிக்கி அகப்பட்டுக்கொண்டு விட்டதென்றும், காரின் சொந்தக்காரரே அவளை எடுத்துக்கொண்டு வந்து ஆஸ்பத்திரியில் 'அட்மிட்' செய்ததாகவும் இன்னும் ஒரு மணி நேரத்தில் திரும்பி வருவதாகச் சொல்லி விட்டு வெளியே சென்றிருக்கிறார் என்றும், அந்த ஆஸ்பத்திரி நர்ஸ் யமுனாவிடம் கூறினாள். அதைக் கேட்டதும் எல்லோரையும் போல யமுனா, கார் ஏற்றினவரைச் சபித்துக் கொட்டவில்லை. காரை ஏற்றிவிட்டு அனாதையாக நடுத்தெருவில் விட்டு விட்டுப்போகாமல் இந்த மட்டுமாவது உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துவந்து முதல் உதவிக்கு ஏற்பாடு செய்தாரே என்ற நன்றியுணர்வே அவளுக்கு எழுந்தது.

அப்போது, "அம்மா, இது உங்கள் குழந்தையா? என்னை மன்னிக்க வேண்டும்" என்ற குரல் கேட்டுத் தலையை நிமிர்த்தி யாரென்று பார்த்தாள். நேருக்கு நேர் அவர்கள் முகங்கள் சந்தித்தன.

அவளுக்கு இந்த உலகமே சுழல்வது போலிருந்தது. "ஐயோ, நீங்களா?" என்று அவளையும் மீறிக் கத்திவிட்டாள்.

சிலைபோல் ஸ்தம்பித்து நின்று விட்டான் ரங்கநாதன். தன்னைச் சுதாரித்துக் கொள்ளச் சற்று நேரம் பிடித்தது அவனுக்கு. மரணப் படுக்கையில் கிடக்கும் குழந்தை தன்னுடையது என்பதை அறிந்ததும் அவன் மனம் புழுவாய்த் துடித்தது.

"யமுனா! என்னை மன்னித்துவிடு. நானும் அம்மாவும் உன்னிடம் மிருகத்தனமாக நடந்துகொண்டு விட்டோம்" என்று நாத் தழு தழுக்க குழந்தையைப் போல் அவன் கெஞ்சும் குரலில் சொன்னான்.

பிறகு ரங்கநாதன், தனக்குச் சென்னை கம்பெனி ஒன்றில் வேலை கிடைத்து விட்டதென்றும், வேலையை ஒப்புக்கொண்டு ஒரு வாரம்தான் ஆகிறதென்றும், தன் தாயார் சென்ற வருஷமே இறந்து விட்டாளென்றும், கடைசிக் காலத்தில் மாட்டுப் பெண்ணை பாடாகப் படுத்தியதை எண்ணிப் புலம்பிக் கொண்டே உயிரை விட்டாள் என்றும் சொன்னான்.

இவ்வளவும் சொல்லிவிட்டு, "கடந்ததையெல்லாம் மறந்துவிடு யமுனா!" என்று அவன் சொன்னபோது பதில் எதுவும் சொல்லவில்லை யமுனா. லோசனி, "அம்மா, அம்மா!" என்று முனகுவதைக் கேட்டு அவள் அருகில் ஓடினாள்.

தாயைக் கண்டு குழந்தையின் முகம் சற்று மலர்ந்தது. தன் அழகிய விழிகளை நாலா புறமும் சுழற்றிப் பார்த்தாள்.

"லோசனி! அப்பா எங்கே, அப்பா எங்கே என்று கேட்பாயே? இதோ வந்திருக்கிறார் பார்!" என்று ரங்கநாதனைச் சுட்டிக் காட்டினாள் யமுனா. ரங்கநாதனும் குழந்தையின் அருகே வந்திருந்தான்.

கண் கொட்டாது அவனையே கொஞ்ச நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள் லோசனி. மனதில் பொங்கி எழுந்த மகிழ்ச்சி அவள் கண்களிலே ஜொலித்தது.

"அப்பா!......என் அப்பா......!" என்று இரண்டு மூன்று தடவை தனக்குள்ளேயே மெதுவாகச் சொல்லிப் பார்த்துக் கொண்டாள் குழந்தை லோசனி.

"அப்பா! இனிமே நீ அம்மாவை விட்டுட்டுப் போகவே கூடாது!" என்று குழந்தை சொன்னபோது அவள் குரலில் ஒரு கண்டிப்பு தொனித்தது.

"இல்லை, லோசனி!" என்று ரங்கநாதன் சொல்லியபோது உணர்ச்சி வசப்பட்டிருந்த அவன் குரல் தழு தழுத்தது.

புன்னகை தவழும் முகத்துடன் இருவர் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள் லோசனி. அவள் அழகிய கண்கள் மெதுவாக மூடிக்கொண்டன.

அக்கணம் "எங்களைச் சேர்த்து வைப்பதற்காகக் குழந்தையைப் பலி வாங்கிவிட்டாயே!" என்ற யமுனாவின் அலறல் ஆஸ்பத்திரி முழுவதும் எதிரொலித்தது.

# பொழுது போக்கு

**" தும்பி "**

சாதாரணமாக நிதி மந்திரிகள் எங்கு பேசினாலும் தாங்கள் போடும் வரிகளுக்கு ஆதாரம் காட்டியே பேசுவது வழக்கம். ஆனால் நம் நிதி மந்திரி ஸ்ரீ தேஷ்முக் வரிகளைப் பற்றியும் பேசாமல், பொருளாதார நிலைமையையும் பற்றிப் பேசாமல் வேறு ஒரு சுவாரஸ்யமான விஷயத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார். அவர் சமீபத்தில் லண்டனில் பேசியதைத்தான் குறிப்பிடுகிறேன். அப்போது அவர் வரிகளைப் பற்றிப் பேசவில்லை; மக்களின் வாழ்க்கைகளைப் பற்றியும் பேசவில்லை. ஆனால் தங்கள் வாழ்க்கைத் திட்டங்களை ஒவ்வொருவரும் எப்படிக் காற்று வாக்கில் விட வேண்டுமென்பதைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

"நீங்கள் விரும்புவதைச் செய்வதைவிட, இப்போது என்ன செய்கிறீர்களோ அதையே விரும்புங்கள்" என்று அவர் சொல்லிவிட்டு மேலும், "வாழ்க்கைத் திட்டத்தை நாமே வகுத்துக்கொள்ள வேண்டுமென்பது முடியாது. என்னைப் பாருங்கள். நான் தாவர சாஸ்திரியாக வாழ்க்கையை ஆரம்பித்து நிதி மந்திரியாக முடிந்திருக்கிறேன்" என்று கூறியிருக்கிறார்.

நம் வாழ்க்கைத் திட்டங்களைப் பற்றி ஸ்ரீ தேஷ்முக் என்ன கூறினாலும் தாவர சாஸ்திரியாக வாழ்க்கையை ஆரம்பித்தவர் நிதி மந்திரியாக முடிந்தார் என்ற செய்திதான் எனக்கு இயற்கையின் கோளாறுகளில் ஒரு உண்மையைத் தெரிவிக்கிறது. கனம் தேஷ்முக் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் நிதி மந்திரிப் பதவிக்கும் தாவர சாஸ்திரத்திற்கும் ஒரு சம்பந்தமிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. எந்த விதையை எந்தச் சமயத்தில் விதைத்தால் செடி முளைத்துச் சீக்கிரம் பலன் தரும் என்று தாவர சாஸ்திரிகளுக்குக் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும். அதே போல எந்த வரியை எந்தச் சமயத்தில் யாருக்குப் போட்டால் பணம் தானாகக் குவியும் என்று நிதி மந்திரிகளுக்குத் தெரிந்திருப்பது அவசியம். ஒரு வேளை எந்த விதை விதைத்தால் பணமாகவே செடியில் முளைக்கும் என்ற வித்தை ஸ்ரீ தேஷ்முக்குக்குத் தெரிந்திருக்குமென்று நினைத்துத்தான் அவரை நிதி மந்திரியாக நியமித்திருக்கலாம்!

அதே போல பிரதம மந்திரியாக முடிவதற்கு வாழ்க்கையில் பௌதிக சாஸ்திரியாக ஆரம்பிக்க வேண்டுமா என்று அவர் யோசனையைக் கேட்க விரும்புகிறேன். மற்றும், உணவு, தற்காப்பு, சுகாதாரம், கல்வி முதலிய மந்திரிப் பதவிகளுக்கு வாழ்க்கையில் என்ன சாஸ்திரியாக ஆரம்பிக்க வேண்டுமோ!

* * *

பாமர ஜனங்களின் பகுத்தறிவை விருத்தி செய்ய நம் அரசாங்கம் டாகுமெண்டரிப் படங்களைக் கட்டாயமாக எல்லா சினிமாக் கொட்டகைகளிலும் காண்பித்து வர ஏற்பாடு செய்திருக்கிறது. நடக்க முடியாத சம்பவங்களையும், நம்ப முடியாத விஷயங்களையும் கற்பனை செய்வதில் பட முதலாளிகளுக்குத் தாங்களும் சோடையில்லையென்று சர்க்கார் நிரூபித்திருக்கின்றனர்.

சென்ற வாரம் டாகுமெண்டரிப் படம் ஒன்றைப் பார்த்தேன். படம் பொதுவாகக் குழந்தைகளைப் பற்றி இருந்தது. குழந்தைகள் பிறக்குமுன்பு ஸ்திரீகளை எப்படிக் கவனித்துக் கொள்வது, பிறந்த பிறகு குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்பதைப் பற்றிய படமாய்த் தானிருக்க வேண்டும் இது. ஏனென்றால் படத்தில் 'உங்கள் குழந்தை', 'உங்கள் சகோதரி அல்லது மனைவி' என்ற சத்தங்கள் அடிக்கடி கேட்டது.

படத்தில் கர்ப்ப ஸ்திரீகளுக்கு வீடுகளில் காண்பிக்கப்படும் சலுகைகளும் ஆஸ்பத்திரியில் அவர்களுக்கு அளிக்கப்படும் அனுசரணைகளையும் பார்க்கும் போது, "அடடா! எந்த ஆஸ்பத்திரியில் கர்ப்பிணிகளுக்கு இவ்வளவு வசதிகள் செய்கிறார்கள்!" என்ற அங்கலாய்ப்புத்தான் ஏற்படுகிறது.

படம் முக்கியமாக மத்தியதர வகுப்பார்களுக்கே என்று முதலிலேயே தெரிவித்து விடுகிறார்கள். ஆனால் படத்தில் வரும் 'கர்ப்பிணி' சாய்வு நாற்காலியில் சுகமாக உட்கார்ந்து கொண்டு 'எம்பிராய்டரி' வேலை செய்து கொண்டிருப்பதையும், அவளருகிலேயே கணவன் எப்போதும் முகமலர்ச்சியுடனிருப்பதையும் கவனித்தால், இந்த மத்தியதர வகுப்புக் குடும்பத்தின் சமையல் வேலைகளையும் வீட்டு வேலைகளையும் எந்த வேலைக்காரர்கள் இலவசமாகச் செய்கிறார்கள் என்ற சந்தேகம் உண்டாகிறது. மேலும், இதைக் கண்டு சகிக்க (அல்லது களிக்க) இக்குடும்பத்தில் மாமியார், நாத்திகள் யாரும் கிடையாதா என்றும் எண்ணத் தோன்றுகிறது.

ஆஸ்பத்திரிக்குக் கர்ப்பிணி போனவுடனேயே ஒரு நர்ஸ் முகமலர்ச்சியுடன் அவளை டாக்டரிடம் அழைத்துச் செல்கிறாள். டாக்டர் முகமலர்ச்சியுடன் எல்லா விவரங்களையும் பொறுமையுடன் கேட்டு எழுதிக் கொண்டு கவனமாகப் பரிசோதனை செய்கிறார். பிறகு வாரா வாரம், பிரசவிக்க சில நாட்களாகும் வரை கர்ப்பிணியின் வீட்டுக்கு வந்து டாக்டர் கவனித்துக் கொள்கிறார். கடைசியில் பிரசவம் ஆஸ்பத்திரியில் டாக்டர்கள், நர்ஸுகள் அன்பினிடையில் நடைபெறுகிறது.

பிரசவம் ஆனபிறகு குழந்தைக்கு அவர்கள் கூறும் பால் வகைகளையும், தாயாருக்கு அவர்கள் நாலுமணிக்கொரு தடவை விதிக்கும் பழம், பால், முட்டை, காய்கறி, நெய் இவைகளையும் பார்க்கும் போது இவ்வளவும் இலவசமாக மத்திய வகுப்பார்களுக்குத்தானா என்று ஆச்சரியமடைந்தேன். ஆனால் இதெல்லாம் சினிமாவில்தான், நிஜமாக இல்லை என்ற விஷயம் எனக்கு மிகவும் ஆறுதலையளித்தது.

இத்தனையும் காண்பித்தவர்கள் இந்த ஆஸ்பத்திரி இந்தியாவின் எந்த மூலையில் ஒளிந்து கொண்டிருக்கிறது என்று தெரிவித்திருந்தால் சௌகரியமாயிருந்திருக்கும்!

# அக்கப்போர்

அமெரிக்கா இந்தியாவுக்குக் கோதுமை "இல்லை" என்று ஏன் சொல்லி விட்டது தெரியுமா என்று கேட்கிறார் ஒரு அரசியல்வாதி.

தெரியும், தெரியும். அமெரிக்கா என்ற பதத்தில் முதல் பாதி அமெரி என்று இருப்பதால் தானே!

★

"ஸ்ரீ தாண்டனுக்கும் நேருஜிக்கும் இடையே இருந்த சிக்கலைத் தீர்த்து வைத்தது ராஜாஜி அவர்கள்தான்."—புது டில்லி செய்தி

ராஜாஜி அவர்கள் சிக்கலைத் தீர்க்கும் விஷயத்தை ஒரு கலையாகவே பயின்றிருக்கிறார் போலும்!

★

எளிலையும் மேனி வசீகரத்தையும் அளிப்பது எங்கள் ஸோப்பே. —ஒரு விளம்பரம்

ழியும், ளியும் இடம் மாறி விட்டதால் வந்த விபரீதத்தைப் பாருங்கள்!

★

ஜுரம் காரணமாக ஒருவர் காரியாலயத்துக்கு நான்கு நாட்கள் லீவு போட்டு விட்டார். ஐந்தாம் நாள் ஆபீசுக்கு வந்தார். ஆபீஸ் மானேஜர், "என்ன ஸார் நாலு நாள் சேர்ந்தாப்போல லீவு அடிச்சுட்டாப்பலே இருக்கு!" என்று கேட்டார்.

"லீவு அடிக்கலே ஸார்! ஜுரம்தான் அடிச்சுது" என்றார் குமாஸ்தா!

★

"......கை வியாபாரிக்குக் கையில் விலங்கு போட்டு அழைத்துச் சென்றதை மற்றைய வியாபாரிகள் ஆட்சேபித்தார்களாம்."

பொன் விலங்கு போட்டு அழைத்துச் சென்றிருந்தால் ஒரு வேளை ஆட்சேபித்திருக்க மாட்டார்கள்.

★

"குழப்ப மயமான மனுவைச் சமர்ப்பித்த வக்கீலுக்குப் பிரதம நீதிபதி குட்டுகொடுத்தார்."
—ஒரு செய்தி.

இந்த குட்டைப்பெற்று வக்கீலின் மூளை மேலும் குழம்பிப் போயிருக்கலாம்!

★

"அதிகமாகக் குருவைப் பயிர் செய்யுங்கள்."
—ஒரு வேண்டுகோள்

சிஷ்யர்கள் இல்லாமல் குருவை மட்டும் அதிகமாகப் பயிர் செய்தால் அதனால் யாருக்கு என்ன பிரயோஜனம்!

★

"பறங்கி"ப் பேட்டையில் போலி ரேஷன் கார்டுகள் பறி முதல் செய்யப்பட்டன."
—செய்தி.

முழுப் பறங்கிக் காயை ரேஷன் சோற்றில் மறைக்க முடியுமா!

★

"நேருஜியுடன் ரிக்ஷாவாலாக்கள் தூது கோஷ்டி பேட்டி." —செய்தி

இந்த பேட்டியின்போது ரிக்ஷாவாலாக்கள் உடனே ஊரைச் சுத்திச் சுத்தி வராமல் நேரே விஷயத்துக்கு வந்திருப்பார்கள் என்று நம்புகிறோம்.

"கால் ரூபாய் அதிகம் விலை வைத்து விற்ற வியாபாரிக்கு ரூ. 500 அபராதம் போட்டார்களாம்."
—செய்தி

அபராதத்தை மூக்கால் அழுது கொண்டே அவர் கொடுத்திருக்க வேண்டும்!

★

ஆசிய தேசங்கள் அமெரிக்க கோஷ்டியில் சேர வேண்டும் என்று பசிபிக் உறவு மகாநாட்டில் கேட்டுக் கொள்ளப்பட்டது.

பசிபிக் உறவு மகாநாடு ஆசியாவின் பசிக்கு ஏதேனும் செய்யுமா!

★

"ஒரு நீதிபதியின் தலையில் விழுந்த பாம்பை உடனே அடித்துக் கொன்று விட்டார்கள்."
—பம்பாய்ச் செய்தி

அந்த நீதிபதி எந்த வழக்கிலும் இவ்வளவு சீக்கிரம் மரண தண்டனை விதித்திருக்க மாட்டார்.

★

"ரேஷன் விதிகள் மீறப் படாமல் இருக்கின்றனவா என்பதைக் கவனிக்க, சர்க்கார் அதிகாரிகள் கல்யாண வீட்டுக்கு முன்னதாகவே வந்து விடுவார்கள்!"
—சர்க்கார் அறிக்கை

நாலு நாள் முன்னதாக பந்துமித்திரர்களை அழைத்துக்கொண்டு வந்து விடுவார்களோ!

★

"காந்திஜி ஜயந்தி விழாக்கொண்டாடுவதனாலும், 'காந்திஜிக்கு ஜே!' என்று கோஷம் இடுவதனாலும் கதர் கட்டுவதனாலும் மட்டுமே காந்திஜியின் சிஷ்யர்கள் ஆக முடியாது."
—ஒரு பிரசங்கம்

இது தெரிந்துதான் தமிழ் நாட்டில் மேற்படி காரியங்கள் எல்லாம் குறைந்துகொண்டு வருகின்றன!

★

"வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் உணவுப் பொருள் அளவுக்கு நம் நாட்டில் குரங்குகள் உணவுப் பொருளை நாசம் செய்கின்றன. இதைத் தடுக்கச் சர்க்கார் தீவிர முயற்சி எடுக்காததன் காரணம் என்ன!" என்று சமீபத்தில் லக்ஷ்மணபுரியில் நடந்த உணவு மகாநாட்டில் ஒரு பிரமுகர் கேட்டு அங்கலாய்த்தார்.

இராமராஜ்யம் வந்திருக்கும்போது வானரங்கள் குதூகலப்படுவதை எப்படித் தடுக்க முடியும்!

★

ஐ. என். ஓ. சபையில் 'உஷார் கமிட்டியை' அமைக்கும் யோசனையை விஷின்ஸ்கி ஆதரித்தாராம்.

விஷின்ஸ்கி ஆதரித்தார் என்றால், அதைப் பற்றிக் கொஞ்சம் உஷாராக இருக்க வேண்டியதுதான்!

★

"இருபத்திரண்டு வயதாகு முன் பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளக்கூடாது" என்று ராஜகுமாரி அம்ருத கௌரி கூறினார்.

அப்படிக் கல்யாணம் செய்து கொண்டால் 'கௌரி கல்யாணம்' பாடுவதற்கு ஸ்ரீமதி அம்ருதகௌரி வரமாட்டார் போலும்!

# ராமகிருஷ்ண உபநிஷதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 32. உய்தலும் உபதேசமும்

கதை, காலக்ஷேபம், பிரசங்கம் முதலிய தருமோபதேச முயற்சிகளில் பலர் ஈடுபட்டு வேலை செய்து வருகிறார்கள். இவர்கள் நன்றாகப் படித்து சாஸ்திரப் பயிற்சி பெற்றவர்கள் என்பதில் சந்தேகமில்லை. இவர்களுடைய முயற்சியும், நல்ல எண்ணத்துடன் செய்யப்படும் முயற்சியேயாகும். ஆனால் மக்களைத் திருத்த வேண்டுமானால் முக்கியமாக வேண்டியது பக்தி வேகம். போதிப்பவர்களுடைய பக்தியே கேட்பவர்கள் உள்ளத்தில் பாய்ந்து வேலை செய்யும். சாமர்த்தியமாகப் பேசுவது மட்டும் போதாது.

"சமயப் பிரசாரம் செய்கிறவர்களைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று பகவான் ராமகிருஷ்ணரை ஒருவர் கேட்டார்.

இதற்கு அவர் பதில் சொன்னதாவது: "ஒருவன் தன்னுடைய வீட்டில் தனக்கே போதும் போதாததுமாக சாப்பாடு இருக்கும்போது நூறு பேரைச் சாப்பிடக் கூப்பிட்டால் அவனுடைய நிலைமை எப்படியிருக்கும்? அந்த நிலைமையே சாதாரணமாகப் பிரசாரம் செய்பவர்கள் நிலைமை. அவர்கள் உள்ளத்தில் உண்மையாக நிலைத்திருக்கும் பக்தி அவர்கள் உய்வதற்கே போதாது. அப்படியிருக்க மற்றவர்களுக்குப் பக்தி ஊட்டுவது எப்படி?"

முதலில் உங்கள் உள்ளத்தில் ஆண்டவனை அமைத்துக் கொள்ளுங்கள். பிறகு மற்றவர்களுக்குப் போதிக்கப் பிரசங்கமும் உபதேசமும் ஆரம்பியுங்கள். ஒருவன் தன் உள்ளத்தில் காமமும் கோபமும் பற்றுகளும் வைத்துக்கொண்டு பிறருக்கு வைராக்கியமும் பக்தியும் உபதேசித்தால் என்ன பயன் உண்டாகும்? பிறருக்கு உபதேசம் எளிதில் செய்துவிடலாம். ஆனால் அது பூர்த்தியில்லாத பாழுங் கோயிலில் மணியடித்து, சங்கு ஊதுகிற மாதிரி.

* * *

குற்றங்கள் இருக்கலாம். ஆயினும் உண்மையான பக்தி உண்டாகி ஆண்டவனைச் சரண் அடைந்து அந்தக் குற்றங்களினின்று நீங்கிப் பிறருக்கும் வழி காட்டலாம்.

இத்தகைய ஒருவனை பகவான் ராமகிருஷ்ணர் கண்டு பேசிய கதை ஒன்று சொல்லுகிறார்: "என்ன சுவாமிகளே! தருமோபதேசம் பலமாகச் செய்து வருகிறீர். உம்முடைய சொந்தக் கதை வேறு விதமாக இருக்கிறதே! இவ்வளவு தோஷங்களை வைத்துக் கொண்டு நீர் எப்படி மக்களை வசீகரித்து அவர்களைப் பக்தியில் ஈடுபடச் செய்து வருகிறீர்? இதன் ரகசியம் என்ன?" என்று பரமஹம்ஸர் கேட்டார்.

"நான் மகா நீசன் என்பது உண்மை. ஆயினும் ஆண்டவன் அருள் என்பது ஒன்று இருக்கிறது. ஒரு துடைப்பக் கட்டை தெருவையும் வீட்டையும் பெருக்கிச் சுத்தம் செய்ய உபயோகப்படுகிறதல்லவா? அத்தகைய அழுக்குப்பட்ட ஒரு கருவி நான்" என்றார் அந்த மனிதர்.

"இதற்கு நான் ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை" என்கிறார் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

* * *

ஒருவனுடைய உள்ளத்தில் பக்தி அமைந்து இதய கமலத்தில் ஆண்டவன் கோயில் கொண்டபின் எந்த தோஷமும் தடையாகாது!

சூரியனுடைய கிரணங்கள் வெளிச்சமும் வெப்பமும் பரப்புவது போல் அவனுடைய பக்தி மற்றவர்களுடைய உள்ளத்துக்கு ஊடுருவிப் பாயும்.

# புதிய ரெக்ஸோனா சோப்!




**கேடில் கலந்த சோப் ரெக்ஸோனா ஒன்றே**

RP. 65-172 TM

# இருவர் கூடினால்...!

ஏ. கே. பட்டுசாமி

"இனிமேல் அந்தப் பக்கத்து வீட்டுப் பசங்களுடன் விளையாடப் போனால் காலை ஒடித்து விடுவேன்!" என்று பாலுவுக்குத் தடையுத்தரவு பிறப்பித்தாள் புஷ்பா.

"ஏன் அம்மா?" என்று கேட்டான் பாலு.

"போகக் கூடாதென்றால் போகக் கூடாது தான். ஏன், என்னத்துக்கு என்று எல்லாம் என்ன கேள்வி? பக்கத்து வீட்டு மீனாக்ஷி மாமி கூப்பிட்டால் கூடப் போகக் கூடாது!"

புஷ்பாவின் இந்த உத்தரவு எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. பக்கத்து வீட்டு சங்கர அய்யர் மனைவியும் புஷ்பாவும் இணை பிரியாத தோழிகள். சங்கரய்யரும் நானும் ஆபீஸுக்குப் புறப்பட்டு விட்டால் அப்புறம் வீட்டில் அவர்களுடைய ராஜ்யம்தான். புடவைக் கடை, நகைக் கடை, வளைக் கடைகளுக்கு ஒன்றாகப் போவார்கள். ஜாடிக்காரனிடம் ஒன்றாகப் பேரம் பேசி ஒரே மாதிரி ஜாடிகளை வாங்குவார்கள். இருவரும் ஒரே மாதிரிப் புடவைகளை வாங்கி ஒரே மாதிரி 'டிரஸ்' பண்ணிக் கொள்வார்கள். அங்கே பச்சைப்புடவையும் மஞ்சள் ரவிக்கையும் என்றால். இங்கேயும் அதே மாதிரி தான். இன்றைக்கு எங்கள் வீட்டில் முருங்கைக் காய் சாம்பாரும் உருளைக் கிழங்கு பொடிமாஸும் என்றால் பக்கத்து வீட்டிலும் அதே தான். முகத்தைத் தான் ஈஸ்வரன் வெவ்வேறு மாதிரி வைத்து விட்டாரே யொழிய மற்றபடி வாழ்க்கை முறையில் அவர்கள் ஒரே மாதிரி இருக்க விரும்பினார்கள். இவ்வளவு ஸ்நேகமாயிருந்த புஷ்பா இன்று இப்படிப் பேசக் காரணம் என்னவென்று புரியாமல் விழித்தேன் நான்.

"என்ன புஷ்பா? என்ன சமாசாரம்?"

"சமாசாரம் என்ன? என்னவோ வேண்டாமென்று தோன்றியது, வேண்டாமென்று சொன்னேன்!"

"இத்தனை நாளாக இவ்வளவு ஒற்றுமையாக இருந்தீர்களே என்றுதான் கேட்டேன்!"

"ஆமாம் இருந்தேன்! ஏதோ நம்மைப் போலவே பிறத்தியாரும் இருப்பார்களென்று நினைத்துக் கொண்டு இருந்தேன். மனுஷாளுடைய சுபாவம் ஒரே நாளில் தெரிந்து விடுகிறதா?"

"அப்படி என்னதான் நடந்துவிட்டது?"

"நடக்கிறது என்ன? வரவர அவளுக்குக் கழுத்தின் மேல் தலை நிற்க மாட்டேன் என்கிறது!"

"எதனால்?"

"அவள் அகமுடையானுக்கு உங்களை விடச் சம்பளம் ஐந்து ரூபாய் அதிகம் அல்லவா?"

"அப்படியா சொன்னாள்?"

"வாயைத் திறந்து சொல்ல வேண்டுமா? மனுஷாள் இருக்கிற கிராணத்தைப் பார்த்தாலே தெரியவில்லையா? அன்றைக்கு அவள் ஒரு புடவை வாங்கிக் கொண்டு வந்தாள்!..."

"நீ கூடப் போகவில்லையோ?"

"இல்லையே! அவள்தான் என்னைக் கூப்பிடவில்லையே!"

"உம்...அப்புறம்?"

"அந்தப் புடவை கொஞ்சம் மட்ட ரகம் என்று நான் ஒரு வார்த்தை சொல்லி விட்டேன். இதிலே என்ன தப்பு? நீங்களே சொல்லுங்கோ!"

"ஒரு தப்பையும் காணோமே! நீ உள்ளதைத் தானே சொல்லியிருப்பாய்!"



"இதற்குப்போய் பிரமாதமாக மூஞ்சியைத் தூக்கிக் கொண்டு மூன்றாவது வீட்டுக்காரியிடம் போய் ரகசியம் பேசுகிறாள். இவள் என்னைக் கடைக்கு அழைத்துக் கொண்டு போகாததால்தான் நான் அதை மட்டம் என்கிறேனாம்! எப்படி இருக்கிறது?"

"உம்...அப்புறம்!"

"அது ஆச்சா! அப்புறம் ஒரு நாள், 'நீ என்ன தைலம் தடவிக் கொள்கிறாய்? என்று என்னைக் கேட்டாள். அதற்கு நான் 'தலை மயிர் இல்லாதவர்களுக்குத்தானே தைலத்தைப் பற்றிய கவலை! நான் தேங்காய் எண்ணெய்தான் தடவிக் கொள்ளுகிறேன்' என்று சொன்னேன்; இதிலே என்ன தப்பு?"

"ஒரு தப்பும் இல்லையே! நீ பொதுவாகத் தானே சொல்லியிருக்கிறாய்!"

"நீங்களே சொல்லுங்கோ! அவள் தலையில் மயிர் குறைவாக இருக்கிறதென்று நான் சொல்லிக் காட்டினதாக அவள் நினைத்துக் கொண்டால் அதற்கு நானா..."

"அதற்கு நீயா ஜவாப்தாரி? கிடக்கட்டும், விட்டுத் தொலை!"

"இதைச் சொல்ல வந்துட்டேனே! அன்றைக்கு இவள் என்ன சொன்னாள், தெரியுமா? 'ஏண்டி புஷ்பா, உன் அகத்துக்காரர் தலைமயிரெல்லாம் நாளுக்கு நாள் ஏன் குறைந்துகொண்டே வருகிறது? கொட்டுகிறதா என்ன?' என்று கேட்டாள். அதற்கு நான், 'என் அகத்துக்காரர் தலைமயிராவது இப்பொழுதுதான் கொட்ட ஆரம்பித்திருக்கிறது; உன் அகத்துக்காரர் தலையில் ஒரு மயிர்கூட இல்லையே! எந்தக் காலத்திலாவது அது மயிர் இருந்த தலைதானா, இல்லை எப்போதுமே பொட்டல்தானா?' என்று கேட்டு வைத்தேன்!"



எனக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. "ஏன் புஷ்பா? என்ன அனர்த்தம் இதெல்லாம்? உங்கள் வரையில் சண்டை போட்டுக் கொள்கிறது தானே? இடையில் எங்கள் மண்டையையும் ஏன் உருட்ட வேண்டும்?" என்று கேட்டேன்.

"மண்டையை உருட்டுகிறது அவளா, நானா? அவள் ஒன்று சொன்னால் பதிலுக்கு நானும் ஏதாவது ஒன்று சொல்லத்தானே வேண்டியிருக்கிறது?"

"வாஸ்தவம்தான்! அதோடு விடு!"

"இதோடு போகவில்லையே! நேற்று நான் காமாக்ஷி அகத்துக்குப் போனபோது இவள் அவளிடம் ஏதோ பேசிக் கொண்டே இருந்தவள், என்னைப் பார்த்ததும் பேச்சைச் 'சட்' டென்று நிறுத்தி விட்டாள்!...... நேற்றுத்தான் அப்படி யென்றால் இன்று காலை அவளுடைய பிள்ளை மண்ணில் உட்கார்ந்து விளையாடிக் கொண்டிருந்தது. 'ஏண்டா மண்ணில் விளையாடறே, சட்டை யெல்லாம் அழுக்காய்ப் போய்விடுமே!' என்று சொன்னேன். அவள் சரசர வென்று பத்திரகாளி மாதிரி வந்தாளே பார்க்கணும்! அந்தக் குழந்தையின் முதுகில் 'படார்' 'படார்' என்று பேய் அறைகிற மாதிரி அறைந்து உள்ளே இழுத்துக் கொண்டு போனாள். இப்பேர்ப்பட்ட மனுஷியிடம் நமக்கு என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது?"

"வாஸ்தவமான பேச்சு! நமக்கு என்ன வேண்டிக் கிடக்கிறது!" என்று ஒத்துப் பாடினேன் நான்.

"உங்களைக் கூடத்தான் சொல்லுகிறேன்! நீங்கள் கூட அந்தப் பக்கத்து வீட்டு மனுஷரிடம் பேச வேண்டியதில்லை!" என்று அதிகப்படியாக எனக்கும் ஒரு 144 பிறப்பித்தாள் அவள்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது! தினந்தோறும் சங்கரய்யரும் நானும் ஒன்றாகத்தான் ஆபீஸுக்குப் புறப்படுவோம். பத்திரிகையுடன் திண்ணையில் உட்கார்ந்து ஒன்றாக அரட்டை யடிப்போம். அப்படியிருக்க, இந்தப் பெண் பிள்ளைகள் சச்சரவுக்காக நாங்களும் 'டூ' விட்டுக் கொள்வதா என்று என் மனம் யோசிக்கத் தொடங்கியது.

"என்ன, நான் சொல்லுவது புரிகிறதா?"

"உம்......புரிகிறது!"

ஆபீஸுக்குப் போகும்போது வழக்கமாக என்னை வந்து கூப்பிட்டுக் கொண்டு போகும் சங்கரய்யர் அன்றைய தினம் குடையை எடுத்துக் கொண்டு நேராகக் கிளம்பி விட்டார். என் வீட்டுப் பக்கம் தலையைக் கூடத் திருப்பவில்லை. ஓஹோ! அந்த முனையிலும் உபதேசம் சரியாக ஏறி விட்டது என்று புரிந்து கொண்டேன்.

எலெக்டிரிக் ரயிலுக்காக பிளாட்பாரத்தில் இருவரும் ஒன்றாகக் காத்திருந்தோம். ஒரே வண்டியில்தான் ஏறினோம். ஆனால் ஒருவர் முகத்தை யொருவர் நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை. வண்டி புறப்பட்டுக் கொஞ்ச தூரம் சென்றதும் நான் சங்கரய்யர் என்ன செய்கிறார் என்று கடைக்கண்ணால் பார்த்தேன். அதே சமயத்தில் அவரும் என்னைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தார். உடனே இருவரும் மறுபுறமாக வக்கரித்துக் கொண்டோம்.

* * *

மறு நாள் காலையில் குளித்துவிட்டுப் பச்சைப் புடவையைக் கட்டிக் கொண்ட புஷ்பா ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் அதைக் களைந்து விட்டுச் சிவப்புப் புடவையைக் கட்டிக் கொண்டாள். காரணம் பக்கத்து வீட்டுக்காரியும் பச்சைப் புடவை கட்டிக் கொண்டிருந்ததுதான்! அதே மாதிரிப் புடவையை இவளும் கட்டலாமா? இருவருக்கும்தான் சண்டையாயிற்றே!

“உருளைக் கிழங்கைத் தவிர உங்களுக்கு மார்க்கெட்டில் வேறு ஒன்றுமே கிடைக்கவில்லையாக்கும்!” என்று சொல்லிக் கொண்டே நான் வாங்கிவந்திருந்த உருளைக் கிழங்கை நிறுத்திவிட்டுப் பருப்புத் துவையலை அரைத்துப் போட்டாள் அவள். காரணம் எனக்கு உடனே விளங்கிவிட்டது.

மேலும் இரண்டு மூன்று தினங்கள் கழிந்தன. சங்கரய்யரிடம் பேசாதது எனக்கு என்னவோபோலிருந்தது. ஆனால் அவரிடம் வலுவில் போய்ப் பேச எனக்கு மனமில்லை. அவர் எனக்குத் தரவேண்டிய பத்து ரூபாயை உடனே திருப்பித் தரும்படி சீட்டு எழுதி அனுப்பினேன்.

“அந்த அற்பன் மூஞ்சியில் விட்டெறிந்து விட்டு வா!” என்று உரத்துக் கூறிக் கொண்டே அவர் பணத்தைக் கொடுத்து அனுப்பியது என் காதுகளில் விழுந்தது.

“யார் ஐயா அற்பன்? கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்டவன் அற்பனா? நாக்கை அடக்கிப் பேசும்! இந்த அற்பனிடம் கடன் வாங்கிய நீர் எவ்வளவு பெரிய மனிதராயிருக்க வேண்டும்!” என்று கூடச் கூடத் திருப்பிக் கொடுத்தேன்.

## நேர் பாதை!





சாப்பிட வந்தவர்:—என்ன ஸார்! நீங்கள் கொடுத்த பொங்கல் சுத்த மோசம், ஒரே கல்லாயிருக்கிறதே!

ஸர்வர்:—இதில் என்ன அதிசயம் ஸார்! அது தான் பொங்கல் ஆயிற்றே!

---

வார்த்தை தடித்தது! வம்சாவளிகள் அம்பலத்துக்கு வந்தன! எங்கே அடிதடியில் முடிந்து விடுமோ என்றுகூடத் தோன்றி விட்டது!

நான் சங்கரய்யரிடம் சண்டை போட்டு விட்டு உள்ளே திரும்புகையில் புஷ்பா புழைக் கடையில் யாருடனோ பேசிக் கொண்டிருந்தவள் என்னைப் பார்த்துவிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு வந்தாள்.

"புஷ்பா, நீ சொன்னது சரிதான்! இந்தப் பக்கத்து வீட்டுக்காரர்கள் மகா கர்வம் பிடித்தவர்கள்தான்! எனக்கு இப்போது தான் புரிகிறது!"

"அது என்னவோ போங்கோ! நீங்கள் இரண்டு பேரும் என்ன இருந்தாலும் இப்படி அநாவசியமாகச் சண்டை போட்டிருக்க வேண்டாம்! எனக்குப் பயமாய்ப் போச்சு!" என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் புஷ்பா.

இவளுடைய தகராறை மனதில் வைத்துக்கொண்டு சண்டைக்குப்போன எனக்கு ஒரு பாராட்டுச் சொல் கூடக் கிடையாதா?

அன்று எனக்கு ஆபீஸில் வேலை ஓடவில்லை. மாலை மூன்று மணிக்கே தலைவலி என்று வீடு திரும்பி விட்டேன். உள்ளே நுழையும்போதே சமையலறையில் புஷ்பா யாருடனோ பேசிக் கொண்டிருந்தது கேட்டது! இதற்குள் வேறு யாருடன் புது சிநேகம் பிடித்து விட்டாள் என்று ஆச்சரியத்துடன் ஊன்று கவனித்தேன்.

"அது என்னவோ அம்மா! இன்று காலையில் அவர்கள் இரண்டு பேரும் போட்ட சண்டையைப் பார்த்து நான் பயந்தே போய் விட்டேன்!"

நான் திகைத்துப் போனேன்! சந்தேகமேயில்லை! புஷ்பாவோடு பேசிக் கொண்டிருந்தது வேறு யாரும் இல்லை; சங்கரய்யரின் மனைவி மீனாக்ஷியேதான்!

"அதை ஏன் கேட்கிறாய், மீனாக்ஷி! எங்கேயாவது அடிதடியில் முடிந்துவிடப் போகிறதே என்று வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தேன். ஆனாலும் இந்தப் புருஷர்களுக்குப் புத்தி என்கிறது துளிக்கூடக் கிடையாது!" என்றாள் புஷ்பா.

"இந்தச் சண்டைக்குக் காரணம் நீயும் நானும்தான்! நாம் புத்தி கெட்டுப் போய் இந்தச் சண்டையைப் புருஷாளிடம் சொல்லியிருக்கக்கூடாது!"

"அப்படிச் சொன்னால்தான் என்ன முழுகிப் போச்சு! அதை மனதிலே வைத்துக்கொண்டு இவர்கள் இப்படிப் பிரமாதப் படுத்தவேண்டுமோ, என்ன? பெண்களாகிய நாம் இந்த நிமிஷம் சண்டை போட்டால் அடுத்த நிமிஷமே கூடிக்கொள்ளப் போகிறோம். நீ கூட அன்றைக்கு அவ்வளவு கோபித்துக் கொண்டு போனாயே! மறுநாள் சாயங்காலமே வந்து என்னைப் புஷ்பா என்று பெயர் சொல்லிக் கூப்பிடவில்லையா!"

"நீயும்தான் 'என் மீனாக்ஷி?' என்று கேட்டாயே!"

"அதைத்தான் சொல்கிறேன்! இவர்கள் ஆபீஸுக்குப் போய்விட்டால் நமக்கு வேறு யார் துணை! உனக்கு நானும், எனக்கு நீயும் தானே? இவர்களுக்கு இது தெரிய வேண்டாமா?"

"அதை ஏன் கேட்கிறாய்! வீட்டில் அவர் ஐந்து நிமிஷத்துக்கு ஒருதரம் தங்களுடைய சண்டையை நினைத்து, 'அற்பப் பயல்! ஆகட்டும் சொல்கிறேன்!' என்று உறுமிக் கொண்டே இருக்கிறார்."

"இவர் மாத்திரம் என்ன? 'உதைக்காமல் விட்டது தப்பு!' என்று கறுவிக்கொண்டிருக்கிறார்!"

"அது தொலையட்டும். கொஞ்சம் நட்டான் கடைவரை போய் விட்டு வரலாம், வா!"

நான் வந்த சுவடு தெரியாமல் வெளியே வந்து ஸ்டேஷனை அடைந்தேன்.

போயும் போயும் இந்தப் புஷ்பாவை நம்பிச் சங்கரய்யரிடம் சண்டை போட்டோமே என்று வருந்தியது என் மனம். என்ன

செய்வதென்று யோசித்துக் கொண்டிருக்கையில் சங்கரய்யர் வண்டியிருந்து இறங்கி வந்தார். என்னைப் பார்த்தும் பாராதது போல் முகத்தைத் திருப்பிக்கொண்டு போன அவரைப் பார்த்து எனக்கு இரக்கம் உண்டாயிற்று. பாவம், மனுஷனுக்கு விஷயம் தெரியாதல்லவா?

"சங்கரய்யர், இங்கே வாரும் ஐயா, ஒரு சமாசாரம்!" என்றேன். ஆனால் அவர் திரும்பவும் இல்லை; பதிலும் பேசவில்லை.

"நீர் என்னிடம் பேசாவிட்டால் போகிறது! தயவு செய்து தட்டான் கடைக்குப் போய்ப் பாரும், நமது முட்டான்தனம் புரியும்" என்றேன்.

அவர் என்னை ஒரு முறை திருப்பிப் பார்த்துவிட்டுத் தட்டான் கடைப்பக்கம் திரும்பினார். நான் வீட்டு வாசல் திண்ணையில் போய் உட்கார்ந்தேன். ஐந்து நிமிஷத்துக்குப் பிறகு சங்கரய்யர் சிரித்துக் கொண்டே அங்கே வந்து சேர்ந்தார்.

"ஸார், சந்தேகமே இல்லை! நாம் இரண்டு பேரும் முட்டான்கள் தான். நம்மை சண்டை போடச் சொல்லித் தூண்டிவிட்டு இவர்கள் இரண்டு பேரும் அந்தத் தட்டான் கடையில் அப்படி இழைகிறார்களே!"

"இதைச் சொல்லப்போய் விட்டீரே! இவர்கள் சண்டை போட்டுக்கொண்டு நாலு நாட்களாகின்றன. நேற்று உமது வீட்டில் என்ன சமையல்? கத்திரிக்காய் சாம்பாரும் கருணைக்கிழங்கு வறுவலும்தானே?"

"உமக்கு எப்படி ஐயா தெரிந்தது?"

"என் வீட்டிலும் அதே சமையல்தான் ஐயா! அவர்கள் மறு நாளே பேசிவிட்டார்கள்! ஏன், நாம் இரண்டு பேரும் வாசலில் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பொழுதுகூட அவர்கள் புழைக்கடையில் பேசிக்கொண்டிருந்திருக்கிறார்கள்!"

சங்கரய்யர் அசந்து போனார்.

"மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கிய கதையாக, போயும் போயும் இவர்கள் பேச்சைக் கேட்டு நீரும் நானும் சண்டை போட்டுக்கொண்டோமே! நமது புத்தியைச் சொல்லும்! ஆயிரம் புருஷர்கள்கூட ஆயுட்காலமுழுவதும் ஆனந்தமாகக் காலம் கழிக்க முடியும். ஆனால் இரண்டு ஸ்திரீகள் கூடிவிட்டால் இரண்டு விநாடி நேரம் கூடச் சும்மா இருக்க மாட்டார்கள்! அவர்கள் சண்டை போடுவதுமல்லாமல் நம்மையும் சந்தியில் இழுப்பார்கள்! நாம்தான் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்" என்றார் அவர்.



ஸ்ரீ மெ. வி. மெ. மெய்யப்பன்

காரைக்குடியில் நலல கௌரவமான குடும்பத்தில் பிறந்த இவர், பால்ய வயதிலிருந்தே ஏழைகளுக்காக மிகவும் தொண்டாற்றி வருகிறார். ஆறு வருட காலம் இந்நகர் கோவாபரேடிவ் ஸ்டோர்ஸ் டைரக்டராகவும் மூன்று வருடம் பஞ்சாயத்து கோர்ட் மெம்பராகவும் இரண்டு வருடம் இராமநாதபுரம் ஜில்லா இந்துஸ்தான் ஸ்கௌட் கமிஷனராகவும் இன்னும் பல பொது ஸ்தாபனங்களிலும் தன்னலமின்றி சேவை செய்து வருகிறார். சமீபத்தில் நடைபெற்ற நகர காங்கிரஸ் பஞ்சாயத்திலும், 6-9 50-ல் நடைபெற்ற பஞ்சாயத் கோர்ட்டில் கௌரவ மெம்பராகவும் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்.



# யந்திரக் குதிரை

ரா. ரா.

## 2. அரசகுமாரியிடம் அடைக்கலம்

**பா**ரசீக மன்னனும் அவனுடைய பிரஜைகளும் பெருந் துக்கத்தில் ஆழ்ந்திருக்கையில் இளவரசன் பிரோஸ் ஷாவைக் குதிரை வாயு வேகத்தில் தூக்கிச் சென்று கொண்டிருந்தது. அது வானத்தில் வெகு உயரத்தில் போய்க் கொண்டிருந்தது. இளவரசனுக்குத் தான் எந்த தேசத்தின் மீது பறந்து கொண்டிருக்கிறோம் என்பது தெரியவில்லை. அதிசயக் குதிரைமீது சவாரி செய்ய பிரோஸ் ஷாவுக்கு ஆசைதான். இருந்தாலும் முடிவு என்ன என்பதை அறியாமல் பறந்து கொண்டிருக்க அவன் மனம் விரும்பவில்லை. குதிரையை எப்படி அடக்கித் திருப்புவது என்ற கவலை அவன் உள்ளத்தை வாட்டியது. நேரம் ஆக ஆக எப்படியாவது கீழே இறங்கி விட்டால் போதும் என்று அவனுக்குத் தோன்றியது. அவன் வெகு நேரம் யோசித்து யோசித்துப் பார்த்தான். ஆயினும் அவனுக்குக் குதிரையைத் திருப்பும் வழி விளங்கவே இல்லை. புறப்படுமுன் அதைப் பற்றிக் குதிரைக்காரனிடம் கேட்டுக் கொள்ளாமல் கிளம்பியதற்காக அவன் தன்னை மிகவும் நொந்து கொண்டான். குதிரையின் கழுத்திலுள்ள பொத்தானை எப்படித் திருப்பினாலும் அது மேன்மேலும் உயரப் பறந்ததே ஒழிய அதன் வேகம் கட்டுப்படவில்லை. அது கீழே இறங்கவும் இல்லை.

அதிசயக் குதிரை வான வீதி வழியே பாரசீக நாட்டை விட்டு வெகு தூரம் வந்து விட்டது. இரவு வந்து இருள் சூழ ஆரம்பித்தது. இந்த இருட்டில் ஏதாவது ஒரு வனாந்திரத்திலோ கடலிலோ அந்தப் பொல்லாத குதிரை தன்னைத் தள்ளிவிடப் போகிறதே என்று இளவரசன் அஞ்சினான். தப்புவதற்கு ஏதாவது வழி இருக்கிறதா என்று ஆலோசித்துக் குதிரையை மறுபடியும் பரிசோதித்துப் பார்த்தான். அப்பொழுது அதன் வலது காதுக்கருகில் இன்னொரு பொத்தான் இருப்பதைக் கண்டான். அந்தப் பொத்தானைத் திருப்பியவுடன் குதிரை மெதுவாகக் கீழே இறங்க ஆரம்பித்தது. அப்புறம் தான் இளவரசனுக்குப் போன உயிர் திரும்பி வந்தது. கடைசியில் குதிரை பூமியில் வந்து நின்றது.

பிரோஸ், 'அப்பாடா!' என்று நீண்ட பெருமூச்சு விட்டான். குதிரையை விட்டுக் கீழே இறங்கியவுடன் அவனுக்கு மயக்கமாகவும் களைப்பாகவும் இருந்தது. பசி வேறு வயிற்றைக் கிள்ளியது. சிறிது சிரமப் பரிகாரம் செய்து கொண்டபின், தான் இறங்கியிருக்கும் இடம் ஒரு அழகிய அரண்மனையின் மேல்மாடி என்பதை அவன் அறிந்தான். அந்த மாடியைச் சுற்றி அழகிய வெள்ளைப் பளிங்குக் கற்களாலான கைப்பிடிகள் அமைக்கப் பட்டிருந்தன. இளவரசன் இருட்டில் மிகவும் சிரமப்பட்டு நடந்தான்.

கொஞ்சதூரம் சென்றதும் ஒரு மாடிப் படி தெரிந்தது. அதன் வழியாகக் கீழே இறங்கினன். அந்தப் படிக்கட்டு ஒரு அழகிய அறைக்கு எதிரே அவனைக் கொண்டுபோய் விட்டது. அந்த அறையிலிருந்து வந்த வெளிச்சம் இளவரசனின் கண்ணைக் கவர்ந்தது. அறைக் கதவும் திறந்திருக்கவே, இளவரசன் பிரோஸ் அந்த அறையை நோக்கி நடந்தான். அந்த அறைக்கு எதிர்த்தாற்போலிருந்த ஒரு பெரிய மண்டபத்தில் பல நீக்ரோ அடிமைகள் உருவிய கத்திகளுடன் தூங்கிக் கொண்டிருந்தனர். அதைக் கண்டதும் அவனுக்குத் திகில் உண்டாயிற்று. ஏனெனில் அவர்களைத் தாண்டிக் கொண்டுதான் அவன் அந்த ஒளிவீசிய அறைக்குள்ளே செல்ல வேண்டும்.

பயங்கரமான அந்தக் அடிமைகளைப் பார்த்ததும், உள்ளே தூங்கிக் கொண்டிருக்கும் ஒரு இளவரசிக்கு அவர்கள் காவல் புரிகிறார்கள் என்பதைப் பிரோஸ் அறிந்து கொண்டான். சந்தடி செய்யாமல் அந்த அடிமைகளைத் தாண்டிக்கொண்டு அந்த அறையின் வாசற்படியை அணுகிவிட்டான். அடுத்த நிமிஷம் வாயிற் படியை மறைத்துக் கொண்டிருந்த பட்டுப் படுதாவை அகற்றிவிட்டு உள்ளேயும் நுழைந்து விட்டான். அங்கே அவன் கண்கொள்ளாக் காட்சி ஒன்றைக் கண்டான். அறையின் மத்தியில் ஒரு பிருதுவான மஞ்சத்தில் அழகே உருவெடுத்தாற்போல் ஒரு இளவரசி தூங்கிக் கொண்டிருந்தாள். அவளுக்கு இருபுறத்திலும் பல ஸோபாக்களில் அவளுடைய தோழிகள் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

இளவரசன் பிரோஸ் தோழிகளைப் பாராமல் நேராக இளவரசியின் மஞ்சத்தருகே சென்றான். தங்கத்தை உருக்கி வார்த்தாற்போல் அழகு வாய்ந்த அந்த இளவரசியைக் கண்டதும் அவன் அவளிடம் தன் உள்ளத்தையே பறி கொடுத்தான். சத்தம் செய்யாமல் மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு இளவரசியை மெதுவாகத் தட்டி எழுப்பினன்.

இளவரசி கண் விழித்தவுடன், தன் எதிரே அழகில் சிறந்த ஒரு யுவன் நின்று கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரிய மடைந்தாள். இளவரசன் அவளுக்குத் தலை வணங்கி மெல்லிய குரலில் தான் அங்கே வந்த வரலாற்றைக் கூறினன்.

இளவரசி ஆச்சரியம் நீங்கி அமைதி அடைந்தவுடன இளவரசன் பிரோஸ் ஷா அவளைப் பார்த்துக் கூறினன்: "நான் பாரசீக அரசனின் குமாரன். நேற்று எனது நாட்டில் நடந்த புது வருஷத் திருவிழாவின் பொழுது ஒரு அதிசய சம்பவம் நிகழ்ந்தது. அதனல் நான் இங்கு வந்து சேரும்படி ஆயிற்று. இது எந்த தேசம், இந்தத் தேசத்து மக்கள் எப்படிப் பட்டவர்கள் என்பது எனக்குத் தெரியாது. இந்த நாட்டு ஜனங்கள் என்னைப் பார்த்தால் என்ன செய்வார்களோ என்று எனக்குப் பயமா யிருக்கிறது. உன்னைப் பார்த்தால் நல்லவள் போலத் தோன்றுகிறது. ஆகையால் எனக்கு உதவி புரிந்து காப்பாற்றுவாயா?"

பிரோஸ் கூறிய அதிசயமான வரலாற்றைக் கேட்ட இளவரசி பிரமித்துப் போனாள். 'முதல் நாள் பாரசீக நாட்டில் இருந்தவன் இன்று வங்க நாட்டில் வந்து இறங்குவதாவது? இது எப்படி முடியும்?' என்று சிந்தனை செய்தாள். ஏனெனில், பிரோஸ் வந்து இறங்கியது வங்க நாடு. அவன் பேசியதும் வங்கநாட்டு இளவரசியுடன் தான்.



தாய் முயல்:—ஜிம்மி! உன்னைத் தேன் ஜாடியை எடுத்துக்கொண்டு வரச் சொன்னேனே, என்ன செய்து கொண்டிருக்கிறாய்?

இளவரசி உடனே தன் முன் நிற்கும் அழகு வாய்ந்த அந்த இளைஞனைக் காப்பாற்றுவதாக வாக்களித்தாள். பாரசீகத்திலிருந்து வங்க நாட்டிற்கு ஒரே நாளில் எப்படி அவன் வந்தான் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அவளை உந்தித் தள்ளியது. எனினும் மிகவும் களைத்திருந்த அந்த இளைஞனுக்கு அவசரமாகத் தேவையானது உணவும் ஓய்வும் என்பதை அவனுடைய முகக் குறியிலிருந்து அவள் உணர்ந்தாள். ஆகையால் தன் பணிப் பெண்களை அழைத்து இளவரசனை வேறு ஒரு அறைக்கு அழைத்துச் சென்று உணவு அளிக்கும்படி கட்டளையிட்டாள்.

பணிப் பெண்கள் உடனே தங்கள் எஜமானியின் கட்டளையை நிறைவேற்றப் புறப்பட்டனர். மெழுகு வர்த்திகளை ஏற்றிக் கொண்டு அந்த வெளிச்சத்தில் வழிகாட்டி இளவரசனை ஒரு அழகிய சயன அறைக்கு அழைத்துச் சென்றனர். அங்கு அவனுக்கு திருப்தியாக உணவளித்து விட்டு அங்கிருந்து நீங்கி இளவரசியிடம் வந்தனர்.

இளவரசி பாரசீக இளவரசனைப் பற்றி அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டாள். அவர்கள் எல்லோரும் ஒரு முகமாக, "உலகிலே இவன் மாதிரி அழகன் இருக்க முடியாது. இவனை நாயகனாக அடைந்தால் நீங்கள் பாக்கியசாலிதான்!" என்று கூறினர்.

அடுத்த நாள் காலை இளவரசி தன் விடமிருந்த விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்து கொண்டு தன் விருந்தாளியைச் சந்திக்கச் சென்றாள்.

இரவு நன்றாகத் தூங்கியதன் பயனாக பிரோஸ் மிகவும் உற்சாகமாக இருந்தான். இளவரசியைக் கண்டதும் ஆவலுடன் வரவேற்று ஒரு ஆசனத்தில் உட்கார வைத்தான். பிறகு சிறிது நேரம் பொதுவாகப் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு, தன்னைக் குதிரை எப்படிப் பாரசீக நாட்டிலிருந்து முன் பின் கண்டிராத நாட்டில் கொண்டு வந்து சேர்த்தது என்பதை விரிவாக விளக்கினான். குதிரை ஏதோ ஒரு அரண்மனை மாடியில் தன்னைக் கொண்டுவந்து இறக்கியவுடன் தனக்கு ஏற்பட்ட ஆச்சரியத்தையும் அச்சத்தையும் எடுத்துரைத்தான். பிறகு அவள் அறைக்கு வந்து அவளுடைய அழகைக் கண்டு மயங்கியதையும் விவரித்து விட்டுக் கடைசியாக, "இளவரசி! இனி உனக்கு அடிமையாயிருந்து நீ இட்ட பணியை நிறைவேற்றி வைக்கத் தயாராயிருக்கிறேன்" என்று சொன்னான்.

பாரசீகத்திலிருந்து இந்தியாவின் கிழக்குக் கோடியிலுள்ள வங்காளத்துக்கு ஒரே நாளில் ஒரு அதிசயக் குதிரை இளவரசனைக் கொண்டு வந்து சேர்த்ததைக் கேட்டு இளவரசி மிகவும் ஆச்சரியமடைந்தாள். வாயு வேகத்தில் அதிசயக் குதிரை பறந்து வந்தபொழுது இளவரசன் என்ன கஷ்டப்பட்டிருப்பானோ என்பதை நினைத்து மனமுருகினாள். என்றாலும் தன் விடம் இளவரசன் கொண்டுள்ள அன்பைப்பற்றிக் கேட்டு அவள் மட்டில்லா மகிழ்ச்சியடைந்தாள். ஆனால் அவனை அடிமையாகக் கொள்ள அவள் விரும்பவில்லை. தன் அரண்மனையில் இருக்குமட்டும் அவன் இஷ்டப்படி சுதந்திரமாக வாழ்வதற்கான உதவி செய்வதென்று மனத்தில் தீர்மானம் செய்து கொண்டாள்.

## உங்களால் முடியுமா?



ஒரு வளையத்தை நூலில் கட்டித் தொங்க விடுங்கள். பிறகு ஒரு கண்ணை மூடிக்கொண்டு ஒரு பென்சிலை வளையத்தினுள் கொண்டு போக முயற்சி செய்யுங்கள். இது இலேசான காரியந்தான் என்று தோன்றும். ஆனால் செய்து பார்த்தால் அதன் கஷ்டம் தெரியும்!

இளவரசன் வரலாற்றைக் கேட்டு முடிந்ததும் வங்கத்து இளவரசி அவனை ஒரு அழகிய மண்டபத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே ஆடம்பரமான விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இளவரசனும் இளவரசியும் ஒரு புறம் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் மற்றொருபுறம் இளவரசியின் அழகுவாய்ந்த அடிமைப் பெண்கள் இன்னிசை பொழிந்து கொண்டிருந்தனர். விருந்தும் கச்சேரியும் முடிந்தவுடன் இளவரசி தனது கோடை அரண்மனையை விருந்தாளிக்குக் காட்டினான். அந்த அரண்மனை வங்காளத் தலைநகருக்கு வெகு தூரத்துக்கு அப்பால் உள்ளது. அங்கேதான் இளவரசி உல்லாசமாகக் கோடை காலத்தைக் கழிப்பது வழக்கம். அந்த அரண்மனையையும், அவற்றை அடுத்துள்ள நந்தவனங்களையும் தடாகங்களையும் பார்த்து இளவரசன் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கையில் இளவரசி, "இந்தக் காட்சியைப் பார்த்தே நீங்கள் மயங்கிப் போகிறீர்கள். வங்கத்து அரசரான என் தந்தையுடைய அரண்மனையைப் பார்த்தால் நீங்கள் என்ன சொல்வீர்களோ? நாம் விரைவில் அங்கு போகலாம். என் தந்தை உங்களை அன்புடன் வரவேற்பார்" என்றான். (தொடரும்)

## முடியுமா, பாருங்கள் !



மலைமேலிருக்கும் வீட்டிலிருந்து வந்துவிட்ட விஷமக்காரி விமலாவுக்குத் திரும்பிப் போக வழி தெரியவில்லை. உங்களால் அவளுக்கு உதவி செய்ய முடியுமா, பாருங்கள் !

சென்ற வார விடுகதைகளுக்கு விடை:
1. ரெயில் வண்டி 2. பற்கள்

# சரியான தம்பி!

ராமு சுத்தமாக இருக்கமாட்டான். எப்போதும் மண்ணில் விளையாடுவான். சட்டையையும் வேட்டியையும் அழுக்காக்கிக் கொள்வான். அவனை எப்படித் திருத்துவதென்று விளங்காமல் தவித்தார் அவனுடைய அப்பா.

ஒரு நாள் அவர் ராமுவைப் பார்த்து, "அடே, நீ ரொம்ப அழுக்காய் இருக்கிறாய். கொல்லையில் உன் தம்பி இருக்கிறான். அவனிடமாவது போய்ப் பாடம் கற்றுக் கொள்" என்றார்.

ராமு ஆச்சரியத்துடன் கொல்லைப் புறத்துக்குப் போனான். அங்கே ஒரு அணிலைத் தவிர வேறு யாரையும் காணோம். ராமு அதைப் பார்த்து, "அணிலே, அணிலே, நீ என் தம்பியா?" என்றான்.

அணில் அவனை அலட்சியமாகப் பார்த்துவிட்டு, "தூ, உனக்கு வெட்கமாக இல்லையா என்னைத் தம்பி என்று சொல்ல? என்னைப் பார், நான் எவ்வளவு சுத்தமாக இருக்கிறேன்" என்று சொல்லிவிட்டு அப்பால் போய்விட்டது.

ராமு வெட்கத்துடன் அப்பால் சென்றான். ஒரு பூனை எதிரே வந்தது. ராமு அதைப் பார்த்து, "பூனையே, பூனையே, நீ என் தம்பியா?" என்றான். பூனை விழுந்து விழுந்து சிரித்து, "நான் உன்னைப் போல அசுத்தமாய் இருக்கிறேனா, என்ன?" என்றது.

ராமுவுக்குப் பதில் பேசவே முடியவில்லை. அதற்குள் ஒரு எருமை ஓடி வந்து, "என்ன அண்ணா ராமு, சௌக்கியமா?" என்றது.

ராமு திடுக்கிட்டு, "சீ! சீ! நானா உன் அண்ணன்?" என்றான்.

எருமை விடவில்லை. "ஆமாம், நீ என் அண்ணன்தான்! அந்தக் குட்டையில் இறங்கி விளையாடலாம், வா!" என்றது. ராமு அலறியடித்துக் கொண்டு பிடித்தான் ஓட்டம்! அன்று முதல் அவன் மிகவும் சுத்தமாயிருக்கத் தொடங்கினான்.




## 16. பருன் தேர்தல்

தியூனஸின் மனக்கண் முன்னே நடந்த காலச் சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன.

பருன் போருக்குப் புறப்படும் அன்றைக்கு தியூனஸினிடம் வந்து எவ்வளவு அன்பாகவும் குழைவாகவும் பேசினான்! அவனுடைய விருப்பத்தைப் பூர்த்திசெய்து வைப்பதற்காக எவ்வளவு மன்றாடிக் கேட்டுக் கொண்டான்? அவன் வாய் திறந்து ஒன்றும் சொல்லாமலிருக்கும் பொழுதே குறிப்பறிந்து ரேம்பஸை விடுவிக்க உத்தரவு பிறப்பித்தானே! அவனுடைய பெருமையையும் மகிமையையும் என்னவென்று சொல்லுவது? ரேம்பஸுக்கும் அவனுக்கும் உள்ள தொடர்பை அறிந்திருந்தும், மாசு மறுவற்ற மனத்துடன் அவன் ரேம்பஸை விடுவிக்கவில்லையா? இதையெல்லாம் நினைத்துப் பார்க்கும்பொழுது, 'உலகம் அவனைப் பற்றி என்ன சொல்லிக் கொண்டால் என்ன? நமக்கு அவன் தெய்வம்தான்!' என்ற எண்ணம் அவனுடைய உள்ளத்திலே வேரூன்றியது. ஆகவே அவன் அவனுடைய பெருமையைப் பலரும் அறியும்படியாகச் சொல்லவேண்டும் என்று எண்ணித் தன் ஆசனத்திலிருந்து எழுந்திருக்க நினைத்தான். அவனுடைய கருத்தைக் குறிப்பினால் அறிந்த அரசாங்கப் புரோகிதன் சட்டென்று எழுந்து நின்று. "இங்கே மகாராணியின் சாட்சியம் செல்லாது" என்று ஒரே சொல்லில் மடக்கி அவனை உட்கார வைத்து விட்டான்.

தியூனஸ் மனதில் நினைத்த விஷயம் மனதிலேயே தங்கி விட்டது. 'நம்முடன் இவ்வளவு நல்ல விதமாக நடந்து கொண்டவனைப்பற்றி நாலு நல்ல வார்த்தைகள் சொல்ல நமக்கு உரிமை இல்லையே!' என்று எண்ணித் தியூனஸ் மிகவும் மனம் நொந்தான். தனக்கு இப்படி வாய்ப் பூட்டுப் போடப்பட்டதை எண்ணி எண்ணி அவன் மிகவும் உள்ளம் பொருமினான். அதைத் தவிர அவனால் வேறு என்ன தான் செய்ய முடியும்?

புரோகிதன் மறுபடியும் எழுந்து நின்று, "நிறைந்த இந்தச் சபையிலே பருனின் நன்மைகளுக்குப் பாத்திரமானவன் யாருமே கிடையாதா?" என்று கேட்டான்.

பதிலுக்கு மறுபடியும் அதே அமைதி— அதே மௌனம் நிலவியது. அந்தத் தடவையும் பருன் தனக்குச் செய்த நன்மைகளைப்பற்றிச் சொல்லுவதற்கு யாரும் முன்வரவில்லை. சில நிமிஷ நேரம்வரை எதிர்பார்த்த பிறகு புரோகிதன் மறுபடியும் எழுந்திருந்து, "பருன் அம்மனை மனித உருவத்திலே வந்த பைசாசம் என்று தான் சொல்ல வேண்டும். அவன் தெய்வங்களை அலட்சியப்படுத்தி அவமதித்தான். தெய்வ சித்தத்தை அவதூறாகப் பேசி அவற்றின் கோபத்துக்கு இலக்கானான். தெய்வச் சிலைகளைக் காலால்

உதைத்து அவற்றின் கோபத்தைக் கிளறி விட்டான். அதன் பலனாக அவன் கதியற்ற அநாதையைப்போலச் சாக நேரிட்டது. தெய்வ கோபத்துக்கெதிரே மனிதனால் மீண்டுவிட முடியுமா? அவன் எப்படிச் செத்தான், எங்கே செத்தான், அவன் உயிரற்ற உடல் என்ன ஆயிற்று என்பது யாருக்காவது தெரியுமா? தெரியாதல்லவா? எனவே அவனுடைய கொடுங்கோன்மைக்கு ஏற்ற சாவு அவனுக்குக் கிடைத்தது என்பதில் யாருக்கும் ஆட்சேபணை இருக்க முடியாது. அவனுடைய குடிபடைகள் அவனுடைய சிம்மாசனத்துக்கெதிரே அவனுடைய அக்கிரமங்களைப் பற்றிப் பேசி விசாரணை நடத்தின. அவற்றை யாருமே மறுக்கவில்லை. வாய் திறந்து எதிர்த்துப் பேசவும் இல்லை. ஆகவே, நான்—எகிப்து நாட்டின் அரசாங்கப் புரோகிதனாகிய நான் — எகிப்து நாட்டு மக்கள் நிறைந்த இந்தச் சபையிலே சொல்ல விரும்புவது என்னவென்றால், எகிப்து நாட்டின் பொன்மயமான சரித்திரத்திலே பருன் அம்னஸின் பெயர் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட மாட்டாது, எங்குமே அவனுக்கு ஞாபகார்த்தம் எழுப்பப்பட மாட்டாது, எகிப்து நாட்டு மக்கள் அவனை ஒருபொழுதும் நினைவில் இருத்திக்கொள்ள மாட்டார்கள் என்பதுதான். மரகதங்களும் முத்துக்களும், வைரங்களும் வைடூரியங்களும், பவளங்களும் பச்சைக் கற்களும், செந்தாமரைப் புஷ்பங்களும் வெண்தாமரைப் புஷ்பங்களும் நிறைந்த சொர்க்க லோகத்திலே அவனுக்கு இடம் கிடையாது. அவன் சதா சர்வகாலமும், இந்தப் பதார்த்தங்களுக்காகவும் ஆத்மீக விடுதலைக்காகவும் ஊழி ஊழிகாலத்துக்கு அலைந்து கொண்டிருப்பான். ஆனால் அவை அவனுக்கு எப்பொழுதுமே எட்டாக் கனியாகத்தானிருக்கும்!'' என்றான்.

உலர்ந்த கட்டை போன்ற கையை உயரத் தூக்கி, "எகிப்து நாட்டு மகாராணி! தெய்வங்கள் அனைத்தும் ஒன்று கூடி ஒருமுகமாக உங்கள் மீது அபாரக் கருணை புரிந்திருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். உங்களை எகிப்து நாட்டு ராணியாக ஆக்கியதோடு மட்டும் அல்ல; உங்கள் தயவையும் மேதையையும் நம்பி, பருனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை உங்களிடமே அவை ஒப்படைத்து விட்டன. பருனைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் உங்களை விட அருகதையுள்ளவர்கள் வேறு யாரும் கிடையாது. இருக்கவும் முடியாது என்று தெய்வங்கள் அனைத்தும் ஒன்றுகூடி முடிவு செய்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் தாங்கள் சரியான இந்தச் சந்தர்ப்பத்தில் எங்களுக்கு மகாராணியாக வாய்த்திருப்பீர்களா? ஆனால் ஒன்று. கடவுளுக்காகக் கேட்டுக் கொள்ளுகிறேன். பருன் அம்னஸ் குற்றமற்றவர்களின் கன்னங்கள் வழியே ஆறாகப் பெருக விட்டிருக்கும் கண்ணீரை மறந்து விடாதீர்கள்! வேதனையின் வெம்மை தாளாமல் அவர்கள் பெருமூச்சு விட்டிருக்கிறார்களே, அதற்குச் செவி சாய்க்காமல் இருந்து விடாதீர்கள்! தான் செய்த கொடுமைகளுக்குப் பருனால் கூடச் சரியான பதில் சொல்ல முடியாது. அப்பப்பா! அவன் செய்த கொடுங்கோல் ஆட்சியை இப்பொழுது நினைத்துப் பார்த்தால் கூட வயிற்றை என்னவோ செய்கிறது. ஏழை-பாழைகள் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. நான் தங்களிடம் வேண்டிக் கொள்ளுவது என்னவென்றால், தாங்கள் நாட்டின் நலனையே தன் நலனாகக் கருத வேண்டும். அறியாப் பாலகர்களாகிய எகிப்து நாட்டுக் குழந்தைகளை நினைவில் இருத்திக் கொண்டு நன்கு தீர ஆலோசித்தபின் ஒரு முடிவுக்கு வரவேண்டும். அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வந்து விடக் கூடாது. எகிப்து நாட்டின் வருங்காலத்தை வெறும் சாதாரண விஷயமாக எண்ணி விடாதீர்கள். வானுலகத்து வாழும் அமர தெய்வங்கள் தங்கள் மனதுக்கும் ஆன்மாவுக்கும் புத்தொளி அளித்து அருள்வார்களாக! எகிப்து நாட்டின் நலனுக்காக-நாட்டு மக்களின் க்ஷேமத்துக்காக — எகிப்து நாட்டின் வீரப் புதல்வன் ஒருவனைப் பரு

புரோகிதனின் அந்தத் தீர்ப்பைக்கேட்ட மக்கள் மிகவும் மகிழ்ச்சியுற்றனர். ஆனால் தியூனஸின் மனதில் மட்டும் தாங்க முடியாத துயரம் உண்டாயிற்று. அவனுடைய கண்கள் ஆறாக நீரைப் பெருக்கின. அவன் தலையைத் தொங்க விட்டுக் கொண்டு துயரமே உருவெடுத்தவனாக உட்கார்ந்திருந்தான்.

அரசாங்கப் புரோகிதன் தியூனஸின் பக்கம் திரும்பிப் பார்த்தான். பிறகு தன்னுடைய





ளாகத் தேர்ந்தெடுங்கள்! தங்களுடன் சரிநிகர் சமானமாகச் சிம்மாசனத்தில் அமருவதற்கும் தங்களுடன் அரண்மனையில் வாழ்வதற்கும் அவள் அருகதை உள்ளவளாக இருக்க வேண்டும். ஆகவே, நல்குதிர ஆலோசித்து நல்லவளான ஒருவளையே பருளாகத் தேர்ந்தெடுப்பீர்கள் என்று நம்புகிறேன்'' என்றான்.

அதைச் சொல்லி முடித்ததும் அவன் தன் ஆசனத்திலே அமர்ந்தான். சிறிது நேரம் கழித்து அப்ஸரஸ் போன்ற அழகிய முகம் படைத்த தியூனஸ் தன் ஆசனத்திலிருந்து எழுந்து நின்றாள். பிறகு குரலைக் கனைத்துக் கொண்டு, "எகிப்து நாட்டு வாசிகளே! உங்கள் பொருட்டு இந்த மாபெரும் போரை நடத்தி நாட்டுக்கு வெற்றியை வாங்கிக் கொடுத்த வீரன் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் தோல்வியுற்று யுத்தகளத்திலிருந்து புறமுதுகிட்டு ஓடிவந்து கோட்டைக்குள்ளே ஒளிந்து கொண்ட பொழுது—என்ன என்னவெல்லாம் அவமானம் ஏற்பட வேண்டுமோ, அவ்வளவு அவமானங்களும் ஏற்பட்டு, வெளியில் தலை காட்ட முடியாமல், நீங்கள் அறையில் வந்து அடைந்து கிடந்த பொழுது—நீங்கள் மறந்து காற்றில் பறக்க விட்டு விட்ட உங்கள் கடமையை உங்களுக்கு நினைவூட்டியவன் யார்? உங்கள் மகாராணி தன்னை நீக்ரோவர்களின் கல்தாஷைத் தலைவனான ஷம்லாக்கின் கையிலே ஒப்படைத்து விடுவது என்று நிர்மானித்த பொழுது, அவளை அந்த அவமானத்திலிருந்தும் அபாயத்திலிருந்தும் காப்பாற்றியவன் யார்? சொல்லுங்கள், பார்ப்போம்!'' என்று கேட்டாள்.

மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரே குரலில், "ரேம்பஸ்! ரேம்பஸ்!" என்று கோஷித்தனர்.

"உங்கள் நாட்டிலே எல்லோரையும் விட நல்லவன் எல்லோரையும் விடப் பொறுமைசாலி, எல்லோரையும் விட வீரன் யார்? எகிப்து நாட்டுப் பெண்மணிகளைப் பாவச் செயல்கள் தோய்ந்த கண்களுடன் கண்ணெடுத்தும் பாராத மகாபுருஷன் யார்? ஏழை எளியவர்களின் நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு கையில் கத்தி பிடித்துத் தன் உயிரையே துச்சமாக எண்ணிய வீரன் யார்? உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள்!'' என்று தியூனஸ் மறுபடியும் கேட்டாள்.

ஜனங்கள் மறுபடியும் ஒரு முகமாக, "ரேம்பஸ்! ரேம்பஸ்!" என்று ஆரவாரம் செய்தனர்.

"நான் அவனையே உங்களுடைய பருளாகத் தேர்ந்தெடுத்து உங்கள் எதிரே கொண்டு வந்து விறுத்தினால் நீங்கள் மகிழ்ச்சியுறுவீர்கள் அல்லவா?'' என்று கேட்டாள் தியூனஸ்.

மக்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையில்லை. 'கலகல'வென்று கைதட்டும் சத்தம் பலமாகக் கேட்டது. "தியூனஸ்! சொர்க்க லோகத்துத் தெய்வங்கள் தங்களுக்கு நீண்ட ஆயுளையும் நன்மைகளையும் அளிக்கட்டும்! எகிப்து நாட்டுக்கு மிக மிக மேலான மனிதன் ஒருவனைத் தேர்ந்தெடுத்த தங்கள் பெருமையை என்னவென்று சொல்லுவது? ரேம்பஸைப் பருளாகத் தேர்ந்தெடுத்து எகிப்து நாட்டின் பெருமையைத் தாங்கள் பன்மடங்கு அதிகமாக உயர்த்தி விட்டீர்கள். அதற்காக நாங்கள் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்!'' என்று வாயார மனமாரத் தியூனஸை மக்கள் புகழ்ந்தனர்.

மங்கள வாத்தியங்கள் முழங்கின. நகராக்கள் 'நகநக'வென்று ஒலித்தன. எங்கு பார்த்தாலும் ஒரே சந்தோஷ ஆரவாரம். மகிழ்ச்சிக் கடல் மகிழ்ச்சி தாளாமல் பொங்கி வந்ததோ என்று எண்ணத் தோன்றியது. 'எகிப்து நாட்டின் புது பாதுஷா வாழ்க!' 'எண்ணிய கருமங்களில் எல்லாம் அவருக்கு வெற்றி கிட்டுக!' என்ற ஜெயகோஷம் வானைப் பிளந்தது. அதே சமயம் அரசாங்கப் புரோகிதன் ரேம்பஸின் தலையிலே மணி மகுடத்தைச் சூட்டினான். தியூனஸ் தன் கடைக்கண்ணால் ரேம்பஸைப் பார்த்து இலேசாக இளநகை புரிந்தாள். அவளுடைய செவ்விதழ்களின் இடுக்கு வழியே நன் முத்துப் போன்ற பல் வரிசை மின்னல்போலப் பிரகாசித்தது. மக்கள் மகிழ்ச்சி வெறியில் மிதந்து கொண்டிருந்தனர். அவர்களுக்குக் கொடுங்கோன்மை வாய்ந்த பருளின் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்று, வானவீதி வழியே இன்பலோகத்துக்கே சென்று விட்டதுபோலத் தோன்றியது. 'அப்பாடா! கடைசியில் ஒருவிதமாகப் பருள் அம்னஸின் கொடுங்கோல் ஆட்சியிலிருந்தும் கொலைகாரக் கைகளிலிருந்தும் விடுதலை கிடைத்ததே! இனி நமக்கு அந்தப் பழைய கஷ்டங்களும் சங்கடங்களும் ஏற்படாது. அந்தக் கொடுமைகளுக்

கெல்லாம் இலக்காகாமல் இன்ப வாழ்வு வாழலாம்!' என்ற எண்ணம் அவர்களை மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. துன்பக்கடலைத் தாண்டி இன்பக் கடலிலே இறங்குவதென்றால் ஏற்படும் மகிழ்ச்சியைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

## 17. அதிசயப் பிச்சைக்காரன்!

நாற்றொரு நாட்கள் ஓடி விட்டன. அன்று சீபா நகரம் அலாதிச் சோபையுடன் விளங்கியது. எங்கு பார்த்தாலும் தீபாலங்காரக் காட்சிகள்! சீபா நகரத்து வானமும் வீதிகளும் அத்தகைய இணையற்ற தீபாலங்காரக் காட்சியைத் தன் வாழ்நாளில் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை. நகரத்தின் மூலை முடுக்குகளில் எல்லாம் தீபங்கள் வரிசை வரிசையாக ஏற்றி வைக்கப்பட்டிருந்தன. அன்று சீபா நகரமே ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது என்றால் அதிகம் சொல்லுவானேன்?

அந்தத் தீபங்களுக்கும்தான் என்ன ஆனந்தம்! என்ன சந்தோஷம்! காற்றில் இலேசாக அசைந்து ஆடி அவை தங்கள் தங்கள் உள்ளத்து உணர்ச்சிகளைக் கொட்டிக் கொண்டிருந்தன. அது மட்டுமா? அவற்றின் சுடர் காற்றிலே நெளிந்து ஆடும்பொழுது 'மனிதனுக்கு மட்டும் தானா மனமும் மகிழ்ச்சியும்? எங்களுக்கும் கூடத்தான் உண்டு!' என்று தங்கள் தலையை ஆட்டி ஆட்டி மகிழ்ச்சி பொங்கக் கூறுவதுபோலத் தோன்றியது. சீபா நகரத்தின் அந்தத் தேஜோமயமான தீபாலங்காரக் காட்சிகளைக் கண்டு ஒருவன் அதற்குப் பிரகாசபுரி என்று பெயர் வைப்பானாகில் அது சிறிதும் மிகையாகாது. அன்று அந்தப் பிரகாசபுரியில் உள்ள ஒவ்வொரு வீடுமே ஆனந்தக் கடலாகத் திகழ்ந்தது. அந்த ஆனந்தக் கடலின் மகிழ்ச்சி அலைகளிலே மக்கள் மிதந்து கொண்டிருந்தனர்; எக்களிப்புடன் நீந்தி விளையாடிக் கொண்டிருந்தனர். ஒரு இடத்திலே வாண வேடிக்கை. இன்னொரு இடத்திலே நாட்டியக் கச்சேரி. வேறு ஒரு இடத்திலே பாட்டுக் கச்சேரி. மற்றொரு இடத்திலே கவி அரங்கு. பிறிதொரு இடத்திலே பிரசங்கமும் இலக்கிய நண்பர் சங்கமும். —இவ்வாறாக எங்கு பார்த்தாலும் ஏக அமர்க்களம்! இந்த ஆடல்களும் பாடல்களும் வேடிக்கைகளும் விளையாட்டுகளும் எதற்காக? எதற்காகவா? இது தெரியாதா? அன்றைக்குத்தானே ரேம்பஸுக்குப் பட்டாபிஷேகம்! அப்படியா? அப்படியானால் மக்கள் மகிழ்ச்சியில் மூழ்கி மன்னனின் பட்டாபிஷேகத்தைக் கொண்டாடுவது நியாயம்தான்! அதுவும் கொடுங்கோல் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுச் செங்கோல் ஆட்சி கிட்டப் போகிறது என்றால் ஏற்படும் ஆனந்தத்துக்குக் கேட்கவா வேண்டும்?

அன்று ரேம்பஸும் அரசாங்கப் பொக்கிஷ மாளிகையை மக்களுக்குத் திறந்தே விட்டு விட்டான். சரித்திரத்தின் ஏடுகளிலே அன்றைய இரவு ஞாபகார்த்த இரவு என்று பெயரும் புகழும் பெற வேண்டும் என்பது அவனுடைய அந்தரங்க அவா. 'அன்று யார் வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் பொக்கிஷ மாளிகைக்குள்ளே போகலாம்!' என்று அவன் கட்டளை பிறப்பித்ததோடு மட்டும் அல்ல; வந்த ஏழை எளியவர்களுக்கெல்லாம் வேண்டுமளவு பொருள் வழங்கும்படியும் உத்தரவிட்டான்.

அன்றிரவுதான் என்ன கொண்டாட்டம்! என்ன குதூகலம்! எங்கு பார்த்தாலும் கரை புரண்டோடிய மகிழ்ச்சி வெள்ளத்தில் அல்லவா மக்கள் மிதந்துகொண்டிருந்தனர்! மக்களுக்கு இந்த லோகத்து நினைவே இல்லை. இன்பலோகத்திலே சஞ்சரித்துக்கொண்டிருந்த அவர்களுக்கு இகலோக நினைவு வர நியாயம் ஏது? ரேம்பஸும் நிரூஸும் அரண்மனையின் உப்பரிகையின் மீது ஏறி நின்று வெளியுலகத்து மகிழ்ச்சியையும் கொண்டாட்டத்தையும் கண்டு களித்துக்கொண்டிருந்தனர். அவ்விருவருக்கும் தங்கள் எழிலும் இனிமையும் மிக்க பொன் மயமான எதிர்காலம் கண்களெதிரே கைகட்டி வாய் புதைத்துக்கொண்டு நிற்பதுபோலத் தோன்றியது. மட்டற்ற மகிழ்ச்சி வெறியில் மூழ்கியவாறே அவ்விருவரும் வெகு நேரம் வரை நகரத்துக் காட்சிகளைக் கண்டு களித்துக்கொண்டிருந்தனர். பிறகு பக்கத்து அறைக்குச் சென்று விட்டனர்.

அதே சமயம் மாளிகையின் வாசலிலே ஏராளமான பிச்சைக்காரர்கள் பாதுஷா



டாக்ஸியில் உட்கார்ந்திருப்பவர்:— என் டிரைவர், உன்னால் இதைவிட வேகமாகப் போக முடியாதா?

டிரைவர்:— முடியும், ஸார்! இறங்கி நடந்தால் இதைவிட இன்னும் வேகமாகப் போவேன்!



அம்மா:—பட்சணத்தை எடுத்துத் தின்றாயா, கிட்டு?

கிட்டு:— ஐயோ, அம்மா! இல்லவே இல்லையே!

அம்மா:—பொய்சொல்லாதே!

கிட்டு:— பொய் இல்லை, அம்மா! பட்சண டப்பாவைத் தான் என்றால் திறக்கவே முடியவில்லையே!

யின் கல்யாண விருந்து சாப்பிடுவதற்காகக் கூடியிருந்தனர். அவர்களுடன் இன்னொரு பிச்சைக்காரனும் வந்து கலந்து கொண்டான். அவனுடைய கைகால்கள் 'வெடவெட' வென்று நடுங்கிக்கொண்டிருந்தன. அவன் அணிந்திருந்த ஆடைகள் தாறுமாறாகக் கிழிந்து கிடந்தன. எண்ணெயைக் கண்டு எத்தனையோ நாட்களாகி விட்ட அவன் தலை மயிர் மண் படிந்து சிக்குப் பிடித்து சிக்கு எடுக்க முடியாத சடையாக மாறித் தொங்கிக்கொண்டிருந்தது. அந்தப்பிச்சைக்காரன் பக்கத்திலிருந்த பிச்சைக்காரர்களை வியப்புடனும் ஆச்சரியத்துடனும் பார்த்தான். பிறகு விழுந்தடித்துக்கொண்டு வெகு வேகமாக உள்ளே போக முன்னேறினான். மற்றப் பிச்சைக்காரர்கள் அவனைக் கவனிக்கவே இல்லை. அவர்கள் அவனை ஏன் கவனிக்க வேண்டும்? அவனும் அவர்களைப் போன்ற ஒரு பிச்சைக்காரன் தானே? அவர்கள் உணவு உண்பதிலேயே உள்ளம் முழுவதையும் செலவிட்டிருந்தனர். கடைசியில் அந்தப் பிச்சைக்காரன் கூட்டத்தை இடித்து விலக்கிக் கொண்டு மாளிகையின் வாசற்படியை நெருங்கி விட்டான்!

அதைக் கண்ட காவலாளி அவனைத் தடுத்து நிறுத்தி, "நில்! எங்கே போகிறாய்? இனிமேல் மேலே போகக் கூடாது!" என்று அதட்டினான்.

காவலாளியின் அதட்டலைக் கேட்ட அந்த மனிதன் ஒரு முறை காவலாளியைக் காலிலிருந்து தலைவரை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு பக்கத்தில் கூடியிருந்த பிச்சைக்காரர்களைத் திரும்பிப் பார்த்து, "மேலே போகக் கூடாதாமே! என்னைத் தடுக்க இவன் யார்?" என்றான். பிறகு காவலாளியைப் பார்த்து, "ஜாக்கிரதை! நான் யார் தெரியுமா? நான் தான் பருன் அம்னஸ்! பருன் அம்னஸைத் தடுக்க இந்த உலகத்திலே ஒரு மனிதன் உண்டா?" என்று கேட்டான்.

பிச்சைக்காரர்கள் அதைக் கேட்டு 'கடகட' வென்று நகைத்தனர். நகைத்தனர், நகைத்தனர், அப்படி நகைத்தனர். அதற்குப் பின் அந்த மனிதனுக்கு அருகில்—எவன் தன்னைப் பருன் அம்னஸ் என்று எண்ணிக்கொண்டிருந்தானோ, நினைத்துக் கொண்டிருந்தானோ, அதுமட்டும் இல்லை, நான் தான் பருன் அம்னஸ் என்று வேறு சொல்லவும் சொல்லிக் கொண்டிருந்தானோ அந்த மனிதனுக்கு அருகில்—வந்து அவனைச் சுற்றிச் சூழ்ந்து நின்று கொண்டனர்.

அவர்கள் அதோடு நின்றால் தான் தேவலையே! அவனைக் கேலியும் கலாட்டாவும் வேறு செய்யத் தொடங்கிவிட்டனர். அவனைப் பற்பல விதங்களில் படாதபாடு படுத்தி விட்டனர். ஆயினும் அவன் அவர்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அடிக்கடி, "நான் தான் பருன் அம்னஸ்! நான் தான் பருன் அம்னஸ்!" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

அதைக் கேட்டுச் சூழ்ந்திருந்த பிச்சைக்காரர்கள் அனைவரும் அவனைப் பைத்தியம் என்று எண்ணி விட்டதில் என்ன தவறு? ஒரு பிச்சைக்காரன் தன் கையிலிருந்த தடியால் அவன் தோள்பட்டையில் இடித்து, "ஆமாம்! உன் தலையில் மகுடத்தைக் காணோமே! அது எங்கே போய் விட்டது?" என்று கேலியாகக் கேட்டான்.

அதற்கு அவன் என்ன பதில் சொல்லுவான், பாவம்! கேள்வி கேட்ட அந்தப் பிச்சைக்காரனைப் பார்த்துப் பரிதாபமாக விழித்தான். பிறகு வாய் திறந்து ஒன்றும் சொல்லாமல் தன் கண்களை உயரத் தூக்கி அண்ணாந்து ஆகாயத்தைப் பார்க்கலானான். பக்கத்தில் நின்ற மற்றொரு பிச்சைக்காரன் தன் கையில் இருந்த தகரக் குவளையை அவன் தலையிலே கவிழ்த்து விட்டான். பிறகு பலமாகக் கையைத் தட்டி அட்டகாசமாகச் சிரித்து "இதோ பார், அப்பா! இது தான் இவனுடைய மகுடம்!" என்றான்.

இன்னொரு பிச்சைக்காரன் கம்பீரமான குரலில், "சபாஷ்! இதுதான் வாய் அரட்டைக்குத் தகுந்த சூடு! இவனுக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்! நம் எல்லோரையும் முட்டாள் ஆக்க அல்லவா பார்த்தான்!" என்றான்.

மூன்றாமவன் குரலில் ஏளனம் தொனிக்க "இது தான் இந்த அரசனுக்கு ஏற்ற மகுடம்!" என்றான்.

பிச்சைக்காரர்கள் கைதட்டிக் 'கடகட' வென்று சிரிக்கலாயினர். (தொடரும்)

# 1½ அணா

# நோய், ஜலதோஷம்

## ஆகியவற்றை குணமாக்குகிறது




பிரதி தினமும் தொல்லை கொடுக்கும் ஜுரம், குளிர், நோய், நொடி ஆகியவற்றிலிருந்து எல்லோருக்கும் விடுதலை. கோடிக் கணக்கான மக்களுக்கு 'ஆஸ்ப்ரோ' என்பதின் அர்த்தம் இதுதான் — 'ஆஸ்ப்ரோ' உங்களுக்கும் உதவட்டும். அது உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்கட்டும். அது உங்களைப் பாதுகாக்கட்டும். உங்களுக்கு அருகாமையிலுள்ள மருந்து வியாபாரியிடம் நீங்கள் 'ஆஸ்ப்ரோ'வைப் பெறலாம். 3 மாத்திரைகள் 1½ அணாதான். அல்லது 30 மாத்திரைகள் கொண்ட பெரிய பாக்கெட் அணா 15. தலைவலி, நரம்பு வலி, ஜலதோஷம் ஏதாவது வந்தால் இரண்டு 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகள் சாப்பிடுங்கள். சிறிது நேரத்திற்குள் வலி குறைந்து போகும்; ஜலதோஷம் மறையும்; நீங்கள் மறுபடியும் சுகமாக இருப்பீர்கள். நீங்கள் கஷ்டப்பட வேண்டியதேயில்லை. ஏனெனில் 'ஆஸ்ப்ரோ' உங்களை கைவிடாது.

# 'ஆஸ்ப்ரோ'

## உங்களை கைவிடாது

'ஆஸ்ப்ரோ' அபாயமற்றது. குழந்தை கூட சாப்பிடலாம்.

கீழ்க்கண்ட நோய்களுக்கு உபயோகிக்கவும்:— தலைவலி, ஜலதோஷம், நரம்பு நோய், தொண்டைப்புண், வாதநோய், பல்வலி, தூக்கமின்மை, சூரிய வெப்பத்தால் ஏற்படும் கோளாறுகள்.

குடும்ப சைஸ்
30 மாத்திரை அணா 15




ஒவ்வொரு 'ஆஸ்ப்ரோ' மாத்திரையும் சுகாதார முறையில் காற்றுப் புகவிடாமல் அடைத்து சீலில் வைக்கப்பட்டுள்ளது. இதனால் அது எப்போதும் சுத்தமாகவும் புத்தம் புதிதாகவும் வைக்கப்படுகின்றது.

[illegible]



விரைவில் குணம் • அபாயமின்மை • பலனளிக்கும் தன்மை.

114TM

# போடாத தொட்டில்

நவீனன்

"அடுத்த வாரம் சென்னைக்குப் போக வேண்டும்; அவருக்கு மாற்றல்!" என்று மங்களம் சொன்னவுடன், ஆற்றின பாலை அப்படியே வைத்துவிட்டு அசந்து விட்டாள் மீனு.

"ஏன் மாமி! என்னை விட்டுச் செல்ல உங்களுக்கு எப்படி மனம் வரும்?" என்று மீனு ஈனக் குரலில் கேட்டு விட்டுக் கண்களைக் கசக்கினாள்.

சென்ற ஐந்தாறு வருஷங்களாகச் சேர்ந்தாற் போலக் குடியிருந்த உறவு அவர்களை அவ்வளவு தூரம் பிணைத்திருந்தது. ஒரு சின்னக் குழாய்ச் சண்டை கூட வராமல் மங்களமும் மீனுவும் அந்நியோன்னியமாகப் பழகி வந்தார்கள்.

மீனு குடி வந்தபோது, இவ்வளவு பெரிய சம்சாரிக் குடித்தனம் பின் கட்டில் இருக்கிறதே, தானும் தன் கணவரும் நிம்மதியாக இருக்க முடியுமா என்று கவலைப் பட்டாள். கரண்டியைத் துடைத்துக் கொண்டோ, கண்களைக் கசக்கிக் கொண்டோ மணிக்கு மணி எதற்காவது தன்னிடம் அந்த மாமி வந்து நிற்கப் போகிறாளே என்று எண்ணி மீனு முகம் சுருங்கியதுண்டு.

ஆனால் குடி வந்த ஒரு வாரத்துக்கெல்லாம் மங்களம் மீனுவைக் கவர்ந்து விட்டாள். நூறு ரூபாய் சம்பளத்தில் எட்டு ஆத்மாக்களைக் காப்பாற்றும் திறமை மங்களத்திடம் இருந்ததை அறிந்த மீனு, 'இந்த மாமியைப் பார்த்துத்தான் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்' என்று தீர்மானித்தாள். தாயில்லாத பெண்ணாக இருக்கும் தனக்குத் தாயைப்போல அது சரணையாக இருக்கட்டும் என்று "மாமி! மாமி!" என்று மீனு ஒட்டிக் கொண்டாள்.

★

உதவிக்கு ஒரு ஆள் கூட இல்லாமல் மங்களம் அவ்வளவு சாமான்களையும் மூட்டை கட்டி விட்டாள். ஏணி மீதும், ஸ்டூல்மீதும் பெருமூச்சு வாங்க அந்த மாமி ஏறிக் கரண்டிக் கம்பைக் கூட விடாமல் தேடி எடுத்து 'பாக்' செய்யும் அற்புதத்தைக் கண்டு ஆச்சரியப் பட்டபடி மீனு நிலைப்படிக்கருகே மலைத்து நின்று கொண்டிருந்தாள். கூடத்தில் தொங்கிய தொட்டிலை அவள் பார்த்து விட்டு, "என் மாமி! தொட்டிலை மறந்து விட்டீர்களா? அதைக் கழற்றவில்லையே!" என்றாள்.

"காரணமாகத்தான் கழற்றாமல் வைத்து இருக்கிறேன், மீனு! அதை என் ஞாபகார்த்தமாக உனக்குக் கொடுத்து விட்டுப் போகப் போகிறேன். இன்னும் இரண்டு மாதங்களுக்குப் பிறகு நீ ஒரு குழந்தைக்குத் தாயார் ஆகப்போகிறாய் அல்லவா? அதற்கு என்னுடைய பரிசாக இருக்கட்டும் தொட்டில்!" என்று மங்களம் சொல்லி விட்டு மீனுவை அர்த்தபுஷ்டியுடன் பார்த்தாள். அடுத்த வாரம் ஸ்ரீமந்தத்துக்கு முகூர்த்தம் வைக்கப்பட்டிருந்த மீனு "மங்களத்து மாமி! அப்படியானால் ஸ்ரீமந்தம் வரும் வரை கூட நீங்கள் இருக்கப்போகிறது இல்லையா?" என்று கேட்டுவிட்டுப் பெருமூச்சு விட்டாள். 'கிரீச், பிரீச்' சென்று கூடம் வரையில் சென்று விட்டுத் திரும்பும் அவ்வழகிய மரத் தொட்டிலை மீனுவின் கண்கள் சற்றுப் பார்த்து உற்சாகமடைந்தன. "மங்களத்து மாமி எவ்வளவு நல்லவள்! அவ



ளுக்குத்தான் நம்மீது எத்தனை அன்பு !" என்று மீனு குதூகல மடைந்தாள்.

★

ஸ்ரீமந்தத்துக்கு மீனுவின் மாமியார் வந்து இருந்தாள். ரேஷன் அரிசி வாங்கிக் கொண்டு திண்டாடும் தன்னுடைய இரண்டாவது பிள்ளையான மீனுவின் கணவனோடு அவள் இல்லாமல் கிராமத்தில் அரிசிக் கஷ்டமில்லாமல் இருக்கும் மூத்த மகனோடு தங்கியிருந்தாள் அவள்.

எவ்வளவோ வருஷங்களுக்குப் பிறகு "உண்டாகி இருக்கிறாள்" என்று கேள்விப்பட்டவுடன் பறந்தோடி வந்தாள். பிரசவத்துக்குப் பிறந்தகம் போனால் அவளை வைத்துப் போஷிக்கப் பெற்ற தயார் கூட இல்லையே, அவள் அப்பா என்ன ஏற்பாடு செய்திருக்கிறாரோ என்ற கவலை மீனுவின் மாமியார் முகத்தில் படிந்து கிடந்தது.

வந்து இறங்கியவுடன் அவள் கண்களில் முதன் முதலாகத் தொட்டில் ஒன்று மாட்டி இருப்பது தெரிந்தது. "என் மீனு ! அதற்குள் உங்கப்பா உனக்குத் தொட்டில் வாங்கி அனுப்பி விட்டாரா, என்ன ?" என்று வியப்பு மேலிடக் கேட்டுக் கொண்டே கம்பங்களைப் பிடித்துப் பார்த்தாள். கைகளால் தொட்டிலின் கடைப் பலகையை அழுத்தி வலியாமலிருக்கிறதா என்று சோதித்துப் பார்த்தாள்.





"இல்லை, மாமி ! பின் கட்டில் குடியிருந்த மங்களா மாமி எனக்கு இனாமாகக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள் !" என்றாள் மீனு. அப்போது மாமியாரின் முகத்தில் ஏற்பட்ட அருவருப்பை அவள் கவனிக்காமல் இல்லை.

"மீனு ! நான் சொல்கிறேனே என்று வருத்தப்படாதே ! 'யாரோ' இனாமாகக் கொடுத்தார்கள் என்பதற்காகக் கண்ட தொட்டிலை வாங்கக் கூடாது. 'ஆவி' வந்த தொட்டிலாக இருக்க வேண்டும். பெரியவர்கள் பார்த்து, பரம்பரையாகக் குடும்ப விருத்தி செய்து நல்ல பேர் எடுத்து இருக்கும் தொட்டிலாக இருக்கணும். என்னமோ மனசிலே தோன்றியது, சொன்னேன் !" என்று சற்றுப் படபடவென்று கூறிவிட்டுத் தன் குடும்பத்தில் நடந்த ஒரு சம்பவமொன்றையும் எடுத்துச் சொன்னாள் :—

"உன் நாத்தனார் ராஜத்தை இப்படித்தான் 'இரவல் தொட்டில்' ஒன்றில் காது குத்திப் போட்டிருந்தேன். தூங்கிய குழந்தை சற்று நேரத்துக்கெல்லாம் 'வீல்' என்று அலறிற்று; ஓடிவந்து பார்த்தேன். காதில் போட்டிருந்த 'தங்க அவல்' தொட்டில் பலகையில் இருந்த இடைவெளியில் சிக்கிக் கொண்டு இலேசில் வரமாட்டேன் என்று விட்டது. மிகச் சிரமப்பட்டுக் குழந்தையைத் தொட்டிலின் இருந்து எடுக்கும்படி ஆகி விட்டது. காது ஓட்டைகூடச் சற்றுப் பிய்ந்துவிட்டது. வெகு நாட்கள் வரை காதில் தோடு கூடப் போட முடியவில்லை அவளுக்கு. அதற்குப் பிறகு நான் யாருக்கும் தொட்டிலே போடுவது இல்லை ; தூளிதான் !"

மீனுவுக்கு என்னமோபோல ஆகி விட்டது. வந்து இறங்கியவுடன் மாமியார் இப்படிச் சொன்னால் ? மங்களத்து மாமிக்கு ஏழு, எட்டுக் குழந்தைகள். எல்லாம் அந்தத் தொட்டிலில் வளர்ந்து செழித்தவைகள். அத்துடன் நல்ல மனசுடன் அவள் அன்புடன் அளித்த பரிசு. அதில் தோஷம் கற்பிக்க முடியுமா ?—இம்மாதிரியான நல்லுணர்ச்சிகளை யெல்லாம் மாமியாரின் கட்சி அடித்து விரட்டி விட்டு ஏதோ வொரு குழப்பத்தைச் சிருஷ்டித்து விட்டது. மாமியாரின் அனுபவ உண்மைகள் மீனுவைக் கலங்க



ஒருவர்:—ராமசுப்பு இப்பொழுது கடவாத்தியம் வாசிப்பதை நிறுத்தி விட்டு, மிருதங்கம் வாசிக்க ஆரம்பித்து விட்டாராமே, ஏன்?

மற்றவர்:—ஆமாம், எல்லாம் ஊரார் ஏசுவதைப் பொறுக்க முடியாமல்தான்!

அவர்:—யாராவது அவருடைய வாசிப்பு நன்றாயில்லை என்று சொன்னார்களா?

மற்றவர்:—இல்லை, இல்லை! ஊரிலே இருக்கிறவர்களெல்லாம் 'கடங்காரர்', 'கடங்காரர்' என்று அவரைச் சொன்னால் அவருக்குக் கஷ்டமாயிருக்காதா?

வைத்துவிட்டன. ஆனால் அத்தொட்டில் பக்கம் மீனா வரும்போதெல்லாம் அது மங்களமாமியாக மாறி, "அடி அசடே! மனசுதான் காரணம். அது வாழ்ந்த தொட்டில்; வீணாகக் கலங்காதே!" என்று கூறுவது போல இருந்தது. இருந்தாலும் சஞ்சல அலைகள் இதயக் கடலில் மோதிக் கொண்டுதானிருந்தன.

ஸ்ரீமந்தம் ஆயிற்று. மீனாவை அவள் அப்பா வந்து அழைத்துப் போனார்.

★

"மீனா பிரசவித்துவிட்டாள். ஆனால் குழந்தை இறந்து விட்டது. அவள் பிழைத்தது புனர்ஜன்மம்...." என்று மீனாவின் கணவன் நாகநாதனுக்கு மாமனாரிடமிருந்து தந்தி வந்தது. பிறகு மீனா கைப்படத் தகவலும் வந்தது.

"......எந்த வேளையில் தொட்டிலை வாங்கினேனோ! என் ஆசை நிராசை ஆகி விட்டது. உடனே அந்தத் தொட்டிலை மங்களத்து மாமிக்குத் திருப்பி அனுப்பி வையுங்கள். அல்லது, உடைத்து அடுப்பில் வையுங்கள்!"

நாகநாதனுக்கு இந்த 'வேளை' 'சகுனம்' 'விதி' இவைகளிலெல்லாம் அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. தொட்டிலுக்கும், பிறந்த குழந்தை அந்த ஊரில் இறந்ததற்கும் துளிக்கூடச் சம்பந்தமில்லை என்று நினைத்தான். ஆனால் அவள் கட்டளைப்படி சென்னைக்குத் திருப்பி அனுப்ப விலாசம் விசாரித்தான். ஆனால் அது அசம்பாவிதமாகப் பட்டது. கழற்றிக் கண்களில் படாமல் மூலை முடுக்குகளில் போட்டு வைக்கத் தீர்மானித்தான்.

அதே சமயம் அவனுடைய ஆபீஸ் நண்பர் ஒருவர் அவசரமாக வந்து அத்தொட்டிலை இரவலாகச் சில நாட்களுக்குக் கொடுக்கும்படி கேட்டார். உடனே நாகநாதன் கழற்றிக் கொடுத்து விட்டான்.

★

மீனா மறுபடியும் நாலைந்து மாதங்களாக 'ஸ்நானம்' பண்ணவில்லை. இந்தத் தடவை பிரசவத்துக்குப் பிறந்தகத்துக்கு அனுப்ப நாகநாதன் இஷ்டப்படவில்லை. எங்கேயோ இருக்கும் அத்தையைச் சமயத்துக்கு வரவழைத்து வைத்துக்கொண்டு விடப் பார்த்தான்.

பின் கட்டுக்கு யாரோ புதிதாகக் குடி வரப் போவதாக நாகநாதன் சொன்னான்.

"பார்த்துக் குடி வையுங்கள். கண்டவர்களை வைத்துவிட்டுக் கஷ்டப்படும்படி நேர்ந்து விடப் போகிறது!" என்றாள் மீனா.

"வரப்போகிறவர் எங்கள் ஆபீஸ் நண்பர்தான்! இப்போது தான் அவருக்கு ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. ரொம்ப நல்லவர்கள்!" என்று நாகநாதன் சொல்லிவிட்டு ஆபீஸ் போய்விட்டான்.

அன்று மாலை பின் கட்டுக்குக் குடி வந்தவர்களை மீனாவுக்குப் பிடித்திருந்தது.

அதிகச் சாமான்கள் இல்லை. அவர்கள் இரண்டு பேர்; தங்க விக்கிரகம் போலத் தளதளவென்று ஒரு ஆண் குழந்தை; அத்துடன் அழகான தொட்டில்.

தொட்டிலை எடுத்துக்கொண்டு குடி வந்தவள் தன் 'போர்ஷ'னுக்குக் கொண்டு போகாமல் நடுக் கூடத்தில் நின்று மீனாவைக் கூப்பிட்டாள்.

"மாமி! சமயத்துக்குத் தங்கள் கணவர் இந்தத் தொட்டிலை எங்களுக்கு இரவல் கொடுத்து உதவினார். இல்லாவிடில் ஈரமுள்ள அந்த வீட்டில் மிகவும் திண்டாடி இருப்போம். இந்தாருங்கள், தொட்டில்!" என்று திருப்பித் தந்தாள். அவள் முகத்தில் நன்றி பொங்கிற்று.

அந்தப் பெண்ணின் பிரசன்ன வதனம், அந்தத் தொட்டில், அதில் ஏழெட்டு மாதங்களாகப் படுத்துக் கொழுகொழுவென்று வளர்ந்திருந்த குழந்தை—எல்லாவற்றையும் பார்த்துத் திகைத்தாள்.

"பாவம், தொட்டில் என்ன பண்ணும்? எல்லாவற்றுக்கும் நம்முடைய மனசுதான் காரணம்!' என்று மீனாவின் அந்தராத்மா பரமதிருப்தியுடன் அறிவித்தது.

# மிஸ்டர் அப்பு

## 10. அப்புவும் கெட்டான்!

சங்கரன் ஏற்கெனவே இரும்புப் பெட்டியைத் திறக்க உபயோகித்த மாற்றுச் சாவியை எங்கோ தொலைத்து விட்டான். அதை எங்கே நழுவ விட்டானோ, வைத்த இடம் மறந்து விட்டதோ அது அவனுக்கே தெரியாது. அதற்காக அவன் அதிகம் கவலைப்படவில்லை; வேறொரு மாற்றுச் சாவி தயாரிப்பதில் ஈடுபட்டான். அவனுக்குப் பழக்கமான கடை வீதியிலுள்ள பழைய காதர் மொய்தீனிடமே போகவேண்டியிருந்தது.

காதர் மொய்தீன் பழைய பூட்டுகளுக்குச் சாவி போடும் சிறிய கடை வைத்துத் தொழில் நடத்திக் கொண்டிருந்தாலும் அவன் பெயர் ஊரில் ரொம்பப் பிரசித்தம். ஊரில் எந்தக் கலகமோ, சண்டையோ நடந்தாலும் காதர் மொய்தீன்தான் அதற்குக் காரண புருஷனாக விளங்குவான்—யாரையாவது அடிக்க வேண்டுமா? எந்தப் பொதுக் கூட்டத்திலாவது கலவரம் செய்ய வேண்டுமா? காதர் மொய்தீனுக்குக் கொஞ்சம் கைக்கூலி கொடுத்து அழைத்துக்கொண்டால் போதும். ஊரில் அவன் பெரிய வஸ்தாது. அவனுக்குச் சிங்கப்பூர் வஸ்தாது என்று பட்டப் பெயர் உண்டு. காதர் மிகவும் சிறு வயதிலேயே சிங்கப்பூருக்குச் சென்றவன். அங்கு பலவிதமான தொழில்கள் செய்து ஆயிரக் கணக்காகப் பணம் சம்பாதித்தவன். சம்பாதித்த பணத்தை யுத்தம் ஆரம்பமாகுவதற்கு முன்னால் இந்தியாவுக்குக் கொண்டு வந்தான்.

இங்கு படாடோபமாக வாழ்ந்ததில் அவன் கைப்பணமெல்லாம் செலவாகி விட்டது. கடைசியில் வயிற்றுப் பிழைப்பின் காரணமாகப் பழைய பூட்டுகளைப் பழுது பார்க்கும் தொழிலில் ஈடுபட்டான். ஆனால் அவனுக்குச் சிங்கப்பூரில் இருந்த மோகம் விடவேயில்லை. 'எடுத்ததற்கெல்லாம் சிங்கப்பூரைப் போல ஆகுமா?' என்று சொல்லுவான். 'சிங்கப்பூரில் நாலு பேரை ஒரே சமயத்தில் கொலை செய்தால்கூடப் போலீஸ்காரங்க கேட்கமாட்டாங்க. இங்கே ஒருத்தனைச் சும்மா ஒரு அடி அடிச்சாக்கூடப் போலீஸ் வந்து மிரட்டுதே! ஆயிரம் இருந்தாலும் சிங்கப்பூரைப் போல ஆகாது' என்பான். அவனுக்கு மறுபடியும் சிங்கப்பூருக்குப் போக வேண்டு



# இங்கே இல்லை!



“என்ன ஸார்! நம்ம சுப்புச் செட்டியார் மார்க்கெட்டிலே கடை வைத்திருக்கிறார் என்றீர்களே, அப்போதிருந்து தேடுகிறேன், அந்தக் கடை அகப்படவில்லையே!”

“அவர் கடை இங்கே இல்லை, ஸார்! அது கறுப்பு மார்க்கெட்டிலே இருக்கிறது!”

---

மென்ற ஆசைதான். ஆனால் அவன் கையில் போதுமான பண வசதி இல்லையே! அங்கு போனால் ஒரு தொழிலை ஆரம்பிக்க முதல் கொஞ்சம் இருக்க வேண்டாமா? இதற்காக அவன் எங்கேயாவது கொள்ளையடிக்கக்கூடச் சித்தமாயிருந்தான். கொள்ளையடிக்கச் சித்தமாயிருந்து என்ன பிரயோஜனம்? பணம் எங்கே, யாரிடமிருக்கிறது என்றுதான் அவனுக்குத் தெரியவில்லை. அப்படியே ஏராளமாகப் பணமுள்ளவர்களை அவனுக்குத் தெரிந்திருந்தாலும் அவர்கள் எங்கே பணம் வைத்திருக்கிறார்கள் என்று அவனுக்குத் தெரியாததுதான் அவன் முயற்சிக்குத் தடங்கலாக இருந்தது.

சங்கரன் இரண்டாவது முறையாகக் காதரிடம் சாவி வாங்க வந்தபொழுது காதருக்கு ஏதோ சம்சயம் ஏற்பட்டது. இந்தத் தடவை பெட்டியைத் தான் கண்ணால் பார்க்காத வரையில் சரியான சாவி பார்த்துக் கொடுப்பது அசாத்யம் என்று சங்கரிடம் சொல்லி விட்டான். சங்கரன் அவனைத் தன் சிநேகிதனைப்போல் வீட்டிற்கு அழைத்து வந்து இரும்புப் பெட்டியை ஜாடையாகக் காட்டினான். எல்லாவற்றையும் மனதில் இரகசியமாக வைத்துக் கொள்ளும்படி சங்கரன் அவனைக் கேட்டுக் கொண்டான். காதரும் அப்படியே ரகசியமாக வைத்துக் கொள்வதாக அவனுக்கு வாக்குறுதி அளித்துவிட்டு, சங்கரனிடமிருந்து பத்து ரூபாய் வாங்கிக் கொண்டு வேறொரு சாவி தயாரித்துக் கொடுத்தான்.

சங்கரன் வீட்டில் ஒருவருக்கும் தெரியாமல் இரண்டாவது முறையாகப் பெட்டியைத் திறந்து இருபதாயிரம் ரூபாய் வரையில் எடுத்துக் கொண்டு எப்பொழுதும் போல் பெட்டியைப் பூட்டி விட்டான்.

அவன் கையில் அந்தக் கள்ளச் சாவி இருப்பது எப்பொழுதும் ஆபத்திற்கு இடமானது என்று அவனுக்குப் பட்டதால் அதை மாடியிலிருந்தபடியே குருட்டுப் போக்காகத் தோட்டத்தை நோக்கி வீசி எறிந்தான்.

தோட்டத்தில் காமாட்சி செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த பொழுது அவள் காலடியில் ஏதோ வொன்று பொத்தென்று விழவே திடுக்கிட்டுப் பயந்து விட்டாள். அவள் ஒரு விதமாகத் தன் மனதில் எழுந்த பயத்தைத் தெளிய வைத்துக் கொண்டு பார்த்தபொழுது அவள் காலடியில் கிடந்தது ஒரு சாவி என்று தெளிவாக விளங்கியது. அவள் மனதில் ஏற்பட்ட பயம் ஒருவிதமாகத் தணிந்ததே தவிர அவளுக்கு ஏற்பட்ட ஆச்சரியம் தணியவில்லை. கீழே கிடந்த சாவியை எடுத்துப் பார்த்து விட்டு நான்கு புறமும் தன் பார்வையைச் செலுத்தினாள். அவள் கண்ணுக்கு எட்டிய வரையில் ஒருவரும் இருப்பதாகத் தெரியவில்லை. ‘இந்தச் சாவியை யார் விட்டெறிந்திருப்பார்கள்? எதற்காக விட்டெறிந்திருப்பார்கள்? அவளுடைய புருஷன் முனுசாமி சில சமயம் எங்கேயாவது ஒளிந்து கொண்டு அவள்மீது எதையாவது விட்டெறிந்து விளையாடுவது வழக்கம். ஆனால் அவன் கல், மண் எதையாவது எடுத்து அவள்மீது எறிந்து விளையாடுவது வழக்கமே தவிர இதைப் போலச் சாவி, பூட்டு இவைகளை விட்டெறிந்து விளையாடும் விநோதப் பழக்கங்கள் கிடையாது. இதை ஏதோ ஒரு தெய்வந்தான் கொண்டு வந்து போட்டிருக்க வேண்டும் என்று காமாட்சி முடிவு கட்டினாள். ‘ஆனால் அந்தப் பவித்ரியக்

காரத் தெய்வம் ஒரு சாவியைக் கொண்டு வந்து அவனிடம் போடுவானேன்? ஏதாவது இரண்டு பழியை அவன் காலின் கீழ் வீசி எறிந்து விட்டுப் போனாலும் பயனுண்டு. இந்தச் சாவியை வைத்துக் கொண்டு அவன் என்ன செய்வது ......?"

அவன் பலவிதமாக மனது குழம்பி நிற்கையில் முனுசாமி அவனைத் தேடிக்கொண்டு அந்த இடத்திற்கு வந்தான். அவன் அவனைப் பார்த்ததும் கோபமாக, "இத்தனை வயசாயும் உனக்கு இன்னும் இந்த விளையாட்டுப் புத்தி போகவில்லையே?" என்றாள்.

"வயசானால் விளையாட்டுப் புத்தி போயிடணும்னு எந்தப் புத்தகத்திலேயாவது எழுதி வைத்திருக்குதா?" என்றான் முனுசாமி.

"சரிதான்; முன்னேயெல்லாம் மறைந்து நின்று நீ மண்ணைக் கல்லை வாரி அடிப்பே! இப்போ எல்லாம் உனக்குப் புதுப் பயித்தியமாத்தான் பிடித்திருக்கு. சாவி, பூட்டுன்னு எதையாவது தூக்கி என்மேலே வீசி எறியறே!" என்றாள் காமாட்சி.

"சாவியையும் பூட்டையும் வீசி எறிந்தேனா?" என்றான் முனுசாமி ஆச்சரியத்துடன்.

"ஆமாம், இதோ பாரு!" என்று செருவிச் சாவியை அவனிடம் கொடுத்தாள் காமாட்சி. முனுசாமி அதை வாங்கித் திருப்பித் திருப்பிப் பார்த்து விட்டு, "இதை நான் விட்டெறியல்லே! அது சரி; இந்தச் சாவி எப்படி வந்து விழுந்தது?" என்றான்.

"அலறி அடிச்சுக்கிட்டு வந்து விழல்லே; சாதாரணமாத்தான் வந்து விழுந்தது!"

"சரி, எங்கே இருந்து வந்து விழுந்தது?"

"என்ன, போலீஸ்காரங்க மாதிரி கேள்வி கேட்கிறயே? எங்கே இருந்து வந்து விழுந்ததுன்னு பார்த்துக் கிட்டா இருந்தேன்? எங்கேயோ இருந்துதான் வந்து விழுந்திருக்கணும்."

முனுசாமி சாவியைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துவிட்டு,, "இது மாடியிலே இருந்துதான் விழுந்திருக்கணும். சரி, இப்போ மாடியிலே யாரிருக்காங்க?" என்றான்.

"சின்னய்யா இருக்காரு!"

"அதைத்தான் கேட்டேன்? அவர்தான் இதை விட்டெறிந்திருக்கணும்!"



"அவருக்கு என்ன பயித்தியம் ரொம்ப முத்திடுத்தா, சாவியை என் மேலே விட்டெறியறதுக்கு......?"

"அவரு உன் மேலே வீசி எறியணும்னு வீசி எறிந்திருப்பாரு? அவரு சாதாரணமாத்தான் போட்டிருப்பாரு. நீதான் சாவி வந்து விழுகிற இடத்திலே நின்னுக்கிட்டிருந்திருப்பே......!"

"அது போகட்டும், அவரு என் சாவியை விட்டெறியணும்?"

"அவரு காரியம் ஆகிற வரையில்தான் எதையும் கையிலே வைத்திருப்பாரு. காரியம் ஆன பிறகு சாவியாயிருந்தாலும் எதாயிருந்தாலும் சரி, தூக்கி விட்டெறிந்துப்பிடுவாரு! இது அவருடைய உடம்போடு பிறந்த சுபாவம்......"

"அட, கிரகசாரமே! இப்படி இருக்கிறவரு எப்படி ஒரே பெண்ணைக் கல்யாணம் செய்துகிட்டுக் குடித்தனம் செய்யப் போறாரு? சின்னய்யா புத்தியை நீதான் மெச்சிக்கிடணும்!"

"அதிலேதானே இருக்கிறது, ரகசியம்! அவருடைய புத்திசாலித் தனத்தை மெச்சிக்கிட்டிருந்தால்தான் நம்ம கதை நடக்கும்! காசும் கிடைப்பும். இது எந்தச் சாவி தெரியுமா? பெரிய ஐயா தன் பணத்தை யெல்லாம் எந்த இரும்புப் பெட்டியிலே அடைச்சு வைத்திருக்காரோ அந்த இரும்புப் பெட்டிச் சாவியேதான் இது!" என்றான் முனுசாமி.

இதைக் கேட்டதும் காமாட்சி திடுக்கிட்டாள். "பெரிய எசமான் பெட்டிச் சாவியா, இது?" என்று அலறினாள்.

"அந்தச் சாவியே இல்லே, இது! அதனுடைய குலத்திலே கோத்திரத்திலே கூட்டத்திலே வந்த வேறொரு சாவி—அதற்குப் பங்காளிச் சாவி!"

"அப்படின்னு......?"

"அந்த இரும்புப் பெட்டியைத் திறக்கிற சமத்து இந்தச் சாவிக்கும் உண்டு. இன்னிக்குக் காலையிலே சின்னய்யா ஒரு பேர்வழியை வீட்டுக்கு அழைச்சுக்கிட்டு வந்தாரே, தெரியுமா?"

"ஆமாம், கறுப்பா வைக்கல் போரு மாதிரி மீசை வைச்சுக்கிட்டு......?"

"ஆமாம். அவன் சாதாரண ஆசாமி இல்லே, படா போக்கிரி, பெரிய பயில்வான்!

பையன் :— அப்பா, இன்னும் அரை மணி நேரத்திலே ரயிலுக்குப் புறப்படப் போகிறாய், இல்லையா?



அப்பா :— ஆமாம், அதற்கு என்ன?

பையன் :— ஒன்றும் இல்லை. 'எங்கே போறே, அப்பா?' 'எப்போ வருவாய்?' 'நானும் வருவேன்' இதையெல்லாம் இப்பொழுதே கேட்டுவிடுகிறேன். போகும் போதுதானே கேட்கக் கூடாது!

அதோடு மட்டுமில்லை, அவனிடம் ரகரகமாய் சாவிகள் இருக்கு. திறக்காத பெட்டியை எல்லாம் திறக்க வைப்பான் அந்தக் கடவுள்!" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது முனுசாமி எதிர்பாராத வண்ணம் சங்கரன் அங்கு வந்து நின்றான். முனுசாமியும் காமாட்சியும் அவனைக் கண்டு திடுக்கிட்டனராயினும் கணப்பொழுதில் தங்களைச் சமாளித்துக் கொண்டனர்.

சங்கரன் அதிகார தோரணையில் முனுசாமியைப் பார்த்து "வீட்டு வேலையைக் கவனிக்காமல் இங்கே என்னடா பேச்சு?" என்றான்.

முனுசாமி பணிவும் பயமும் கொண்டவன் போல "ஒண்ணுமில்லீங்க; ஒரு சாவி..." என்று இழுத்தான்.

"சாவியா...!" என்று திடுக்கிட்டான் சங்கரன்.

"ஆமாங்க; உங்க கையிலே அந்தச் சாவி இருந்தால் சமயத்திலே உபயோகப்படுங்க."

சங்கரன் சாவியைக் கையில் வாங்கிப் பார்த்துவிட்டு "அப்படித்தானிருக்கு; இருந்தாலும் இதனால் எனக்கென்ன உபயோகம்?" என்று கேட்டான்.

"என்ன அப்படிச் சொல்லீட்டீங்களே! உங்க வயசுக்கு ஐயா பெட்டிச் சாவியை எல்லாம் உங்க கையிலே கொடுத்து வைக்க வேண்டியதுங்க; ஐயாவுக்கு அது தெரியல்லே. நீங்க ஓரோர் சமயம் செலவுக்குப் பணமில்லாமல் தவிக்கிறதைப் பார்த்து எனக்கு ரொம்ப வருத்தமாய் இருக்குங்க. இப்படி உங்க கையிலும் ஒரு சாவி இருந்தா பணம் வேணுங்கிற போது பெட்டியைத் திறந்து சௌகரியமாய் எடுத்துக்கலாமே? இதற்காக நீங்க சாவிக் கடைக்காரர் சாயபுவை வீட்டுக்கு அழைச்சுக்கிட்டு வர வேண்டாமே?" என்றான் மெதுவாக. முனுசாமி மெதுவாகத்தான் சொன்னான். ஆனால் அது வெடிகுண்டு போட்டது போலிருந்தது சங்கரனுக்கு. தன் குழப்பத்தை வெளியே காட்டிக் கொள்ளாதவன் போல் அந்தச் சாவியைத் தன் பைக்குள் போட்டுக் கொண்டு "நீ சொல்வதும் சரிதான்! இந்தச் சாவி என்னிடமே இருக்கட்டும். ஆனால் என்னிடம் ஒரு சாவி இருக்கிறதென்று ஒருவரிடமும் சொல்லாதே!" என்றான்.

"என்ன, அப்படி இந்த முனுசாமியை நினைச்சுட்டீங்க? நானும் சொல்ல மாட்டேன்; என் பெண்சாதியும் வெளியே சொல்ல மாட்டா!"

"நான் இரும்புப் பெட்டியிலேயிருந்து தெரியாமல் பணம் எடுத்தாலும் கெட்ட வழியிலே செலவு செய்ய மாட்டேன். நான் செலவு செய்கிற பணமெல்லாம் உன்னைப் போல ஏழைகள், என்னைப் போல பணக்காரர்கள் எல்லோருக்கும் ஒரு விதமான கதி மோட்சம் ஏற்பட வேண்டுமென்பதற்காகத்தான் செலவு செய்வேன். உதாரணமாக அப்புவின் நூறு வருஷத் திட்டமும் அதன் இருபத்தொன்பது அம்சங்களும் நிறைவேற வேண்டுமென்பதற்காகத்தான் செலவு செய்வேன்!"

"ஆமாங்க! அவருடைய திட்டமும் நிறைவேறணும்; உங்க கல்யாணமும் கடவுள் கிருபையாலே நிறைவேறியாகணும்!" என்றான் முனுசாமி.

"பள்ளம் எங்கே இருக்கிறதோ, அங்கே தான் தண்ணீர் போய்ச் சேரும், முனுசாமி! அதேபோலக் காதல் எங்கே இருக்கிறதோ, அங்கேதான் கல்யாணமும் ஆகணும். அதுவும் தவிர அப்புவின் திட்டம் மனித வாழ்க்கையையே தலைகீழாக மாற்றி அமைக்கப்போகிறது!"

"அப்பு ஐயா மாதிரி நான்கூட ஒரு சரியான திட்டம் போட்டு வைத்திருக்கேங்க!"

"நீகூடத் திட்டம் போட்டு வைத்திருக்கிறாயா? அது எத்தனை வருஷத் திட்டம்? அதற்கு எத்தனை அம்சங்கள்?"

"அந்தத் திட்டத்துக்கு ஒரே ஒரு அம்சம் தான். வருசக் கணக்கெல்லாம் கிடையாதுங்க. பணம் கையிலே கிடைச்சவுடனே அந்த ஒரு அம்சம் நிறைவேறிப் போயிடுங்க!"

"அந்த அம்சம் என்னவென்று விவரமாய்ச் சொல்ல முடியுமா? அது நிறைவேற எவ்வளவு பணம் செலவாகும்?"

"அதுக்கு லட்சக் கணக்கா பணம் வேண்டாங்க. ஒரு ஆயிர ரூபாய் இருந்தாப் போதும். அது ஒண்ணும் பிரமாத அம்சம் இல்லிங்க. எங்க தெருமூலையிலே என் பெண்சாதி இட்டிலி, ஆப்பம் இதெல்லாம் சுட்டு விற்கும் கடை ஒண்ணு வைக்க லாம்னு நினைக்கிறேன். அதனுலே அந்தத் தெருவுக்கே ரொம்ப நல்லதுங்க!" என்றான்.

"பேஷாக வைக்கலாமே! இது நல்ல திட்டம்தான். இதற்கு ஆயிரம் ரூபாய்தானே வேணும்? நான் தருகிறேன்!"

"ஐயா மனசு வைத்தால் எதுதான் நடக் காது? நீங்கதாங்க ஒரு நல்ல நாளிலே அந்தக் கடையைத் திறந்துவைத்து இட்டிலி, ஆப்பம் இதெல்லாம் சாப்பிடுகிறதினுலே ஜனங்களுக்கு எவ்வளவு நன்மை என்கிறதை யெல்லாம் பற்றி அழகாக ஒரு பிரசங்கம் செய்யணுங்க!"

"பிரசங்கம்தானே? பேஷாய்ச் செய்கி றேன்! குறைந்தது மூணு மணி நேரமாவது பேசுகிறேன். முக்கியமாக ரோஜாப்பூ மாலே போட மறந்துடாதே! அதுவும் தவிர என்னுடைய பிரசங்கத்திற்கு முக்கியமாய் 'லௌட் ஸ்பீக்கர்' இருக்கணும்!"

"ரோஜாப்பூ மாலே, லௌட் ஸ்பீக்கர்" இதெல்லாம் இல்லாமே முடியுமா? அதுக் குத்தானே ஆயிர ரூபாய் செலவாகும்னு சொன்னேன்? உங்க பிரசங்கத்துக்குக் கை தட்டக்கூடத் தெருப்பொடியன்களைத் தயார் செய்து வைக்கிறேன்!"

"ஆமாம், இப்படி முன்னுடியே தயார் செய்து வைத்தால்தான் எதுவும் சோபித மாக இருக்கும். ஆயிரம் ரூபாய் ஒண்ணும் பிரமாதமில்லே. மேலே செலவானுலும் என்னைக் கேளு; தருகிறேன்."

"மேலே அதிகமாய்ச் செலவானுல் உங் களைக் கேட்காமல் யாரைக் கேட்கப் போகி றேன்?" என்றான் முனுசாமி.

"சரி, எனக்குக் கொஞ்சம் வேலே இருக் கிறது. நான் போய் வருகிறேன். சாயங்திரம் ஞாபகப்படுத்து; பணம் தருகிறேன்!" என்று சொல்லிவிட்டுச் சங்கரன் சென்றான்.

"நான் போட்ட திட்டம் எப்படி?" என்றான் முனுசாமி, காமாட்சியைப் பார்த் துக் கண் சிமிட்டிய வண்ணம்.

அவள் வெட்கத்துடன் ஒருபுறமாகத் திரும்பிக் கொண்டு, "அப்பு ஐயா கெட் டாரு!" என்றாள். (தொடரும்)





# பாலும் பாவையும்

## 15

அகல்யா, கனகலிங்கத்தின் அறையை நெருங்கியபோது உணர்ச்சியற்ற நகரம் ஒரு கவலையும் இல்லாமல் உறங்கிக்கொண்டிருந்தது. 'அவரும் இந்நேரம் தூங்கியிருப்பார்; கதவும் உள்ளே தாளிடப்பட்டிருக்கும்' என்று நினைத்துக் கொண்டே, அவள் மாடிப் படிகளின் மீது அடி மேல் அடி வைத்து ஏறினாள்—'அவர் நம்மைக் கண்டதும் என்ன சொல்வாரோ, என்னமோ!' என்ற அச்சம்தான் அதற்குக் காரணம். ஆனால் அவள் எதிர்பார்த்தபடி கதவு உள்ளே தாளிடப்பட்டிருக்கவில்லை; வெளியே பூட்டியிருந்தது.




'எங்கே போயிருப்பார்!—என்னதான் வேலை தேடப் போயிருந்தாலும் இவ்வளவு நேரம் ஆகியும் கூடவா திரும்பாமலிருப்பார்.........!'

அகல்யா ஒரு கணம் அந்தப் பூட்டை வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். மறுகணம், 'என்னைப்போல் யாராவது ஒருத்தி இருந்தால் அவர் பொழுதோடு வீட்டுக்கு வருவார்!—யாருந்தான் இல்லையே; எங்கே சுற்றிக் கொண்டிருக்கிறாரோ, என்னமோ!' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டே திரும்பினாள்.

அப்பொழுதுதான் தன்னிடமும் ஒரு சாவி இருக்கும் விஷயம் அவளுடைய ஞாபகத்துக்கு வந்தது. மறுபடியும் மேலே வந்து கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றாள்.

'வா, வா! இனிமேல் நீ இங்கே வரவே மாட்டாய் என்றல்லவா நான் நினைத்துக் கொண்டிருந்தேன்!—வந்து விட்டாயே!' என்று முகமன் கூறி, அவளை யாரோ வரவேற்பது போலிருந்தது.

அகல்யா சுற்றுமுற்றும் பார்த்தாள்; யாரையும் காணவில்லை. 'ஆமாம்; அந்த அதிசய மனிதர் இப்பொழுது இங்கே இருந்திருந்தால் அவர் நம்மை வரவேற்கும் அழகுகூட இப்படித்தான் இருந்திருக்கும்' என்று தனக்குள் முணுமுணுத்துக்கொண்டே அவள் 'ஸ்விட்ச்'சைப் போட்டாள்.

விளக்கின் வெளிச்சத்தில் அறை முழுவதும் ஒரே குப்பையும் கூளமுமாயிருப்பது தெரிந்தது. அகல்யா துடைப்பத்தை எடுத்து அவற்றைக் கூட்டித் தள்ளிவிட்டு மடிப்புக் கட்டிலை எடுத்து விரித்துப் படுத்தாள்.

'அவர் வந்தால் நாம் எழுந்திருக்கவே கூடாது. 'அகல்யா, அகல்யா, அகல்யா!' என்று அவர் எத்தனை முறை அடித்துக்கொண்டாலும் சரி; நாம் 'ஏன்!' என்று குரல் கொடுக்கக் கூடாது.—அப்படி என்ன விரதமாம், அவருக்கு!—ஒரு முறை போனால் போகிறதென்று அவர் நம்மைத் தொட்டுத்தான் எழுப்பட்டுமே!'

இந்த அசட்டு எண்ணத்துக்கு ஆளானதும் அகல்யாவின் முகம் 'குப்'பென்று சிவந்தது. முகத்தைத் தலையணையில் புதைத்துக்கொண்டு அவள் குப்புறப் படுத்தாள். சிறிது நேரத்துக்குப் பிறகு, 'அகல்யா, அகல்யா, அகல்யா!' என்று அவளை யாரோ அழைப்பது போலிருந்தது. ஊஹூம்; அவள் எழுந்திருக்கவில்லை —'தன்னால் முடிந்தமட்டும் கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

அவள் எதிர்பார்த்தது வீணாகவில்லை; அவளை யாரோ தொட்டு எழுப்பினார்கள்.

ஆனால் கையினால் தொட்டு எழுப்பவில்லை போலிருக்கிறதே; பேனாவுடன் பேனா வினாலல்லவா தொட்டு எழுப்புகிறார்கள் போலிருக்கிறது!—'களுக்'கென்று சிரித்துக்கொண்டே அகல்யா எழுந்தாள்—யாரையும் காணவில்லை.

'இது என்ன வேடிக்கை!' என்று அவள் ஏமாற்றத்துடன் எதிரேயிருந்த சுவரைப் பார்த்தாள். அங்கே மாட்டியிருந்த கனகலிங்கத்தின் 'போட்டோ' அவளைப் பார்த்துக் குலுங்கக் குலுங்கச் சிரிப்பது போலிருந்தது!

'ரொம்பப் பொல்லாதவராச்சே, நீங்கள்!—நிஜமாகவே நீங்கள் வந்திருந்தாற்கூட என்னைக் கையினால் தொட்டா எழுப்பியிருப்பீர்கள்! பேனாவினால்தான் தொட்டு எழுப்பியிருப்பீர்கள்!' என்று சொல்லிக்கொண்டே எழுந்து சென்று, அகல்யா அந்தப் 'போட்டோ'வின் கன்னத்தில் சிரித்துக் கொண்டே ஓர் இடி இடித்தாள்.

அவ்வளவுதான்—அந்தப் படம் ஆணியோடு கழன்று கீழே விழுந்து 'கல்' என்று உடைந்தது; அத்துடன் அவளுடைய சிரிப்பும் இருந்த இடம் தெரியாமல் பறந்தது.

'ஐயோ!' என்று திறந்த வாயை மூடாமல், அவள் தன் இதயத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டு கீழே உட்கார்ந்தாள். அவளுடைய கைகள் அந்தப் படத்தைத் தொடும்போது 'வெடவெட'வென்று நடுங்கின; இதழ்கள் 'துடி துடி' யென்று துடித்தன.

கண்களில் நீர் மல்க, அந்தப் படத்தை அவள் ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்தாள்; மறு நிமிஷம் தன்னையும் அறியாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக் கிடந்த கண்ணாடித் துண்டுகளை எடுத்து அவள் ஒன்றோடு ஒன்றை ஒட்ட வைக்க முயன்றாள்—முடியவில்லை!

'மரணத்துக்குப் பிறகு மனிதனின் உயிரும் உடலும்கூட இப்படித்தான் ஆகிவிடுகின்றன' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே சென்று, அந்தக் கண்ணாடித் துண்டுகளை அவள் வெளியே விட்டெறிந்து விட்டு வந்தாள்.

வந்ததும் என்ன நினைத்துக் கொண்டாளோ என்னவோ, 'உங்களுடைய உள்ளமும் உடலும் என்னைத் தீண்டா விட்டாலும் உங்கள் படமாவது என்னைத் தீண்டட்டும்' என்று அந்தப் படத்தை எடுத்து மார்புடன் அணைத்துக் கொண்டு, அவள் ஆனந்தக் கண்ணீர் உகுத்தாள்.

அதற்குப் பிறகு, நீர் நிறைந்த அவளுடைய கண்கள் அடிக்கடி மாடிப் படிகளை நோக்கின—அவன் வரவில்லை—ஆம், அவன் வரவே யில்லை.

இந்தச் சமயத்தில் இன்னொரு பயங்கரமான எண்ணம் அவளுடைய உள்ளத்தில் எழுந்தது. அதன் காரணமாக நிலைத்த கண் நிலைத்தபடி அவள் வெகுநேரம் தன்னுடைய காலின் கட்டை விரலையே பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு, 'சீசீ! அந்த உத்தமருக்கு அப்படியெல்லாம் ஒன்றும் நேர்ந்திராது!' என்று அவள் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டாள். அடுத்த நிமிஷம் அவள் முகம் மலர்ந்தது. ஆனால் அந்த மலர்ச்சி நீடிக்கவில்லை.

'ஒரு வேளை இன்றிரவு அவர் வராமலே இருந்து விட்டால்......!'

இப்படி நினைத்ததும் அவள் முகம் குவிந்தது. கையில் கனகலிங்கத்தின் படத்துடன் கைப்பிடிச் சுவருக்கு அருகே வந்து நின்று, கண்களுக் கெட்டிய தூரம் வரை அவள் சாலையைப் பார்த்தாள்; ஆள் நடமாட்டமே இல்லை.

'இரவு முழுவதும் இங்கே நாம் எப்படித் தனியா யிருக்க முடியும்!'

அகல்யா திரும்பி வந்து நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.

மாடிக் கதவை யாரோ 'தட தட' வென்று தட்டுவது போலிருந்தது. படத்தை மேஜையின் மேல் வைத்து விட்டு ஓடோடியும் சென்று கதவைத் திறந்தாள்—ஏமாற்றத்துக்கு மேல் ஏமாற்றம்; அங்கே யாரையும் காணவே யில்லை!

மறுபடியும் அவள் உள்ளே வந்து உட்கார்ந்து சிந்தனையில் மூழ்கினாள்.

'நண்பர் ராதாமணியுடன் எங்கேயாவது போயிருப்பாரோ!—இருந்தாலும் இருக்கும்; பொழுது விடிந்தால்தான் எல்லா விவரமும் தெரியும் போலிருக்கிறது!'

அகல்யா, கனகலிங்கத்தின் படத்தைத் தலை மாட்டில் வைத்துக் கொண்டு மீண்டும் படுத்தாள்.

அவள் விளக்கை அணைக்கவில்லை; எரியும் விளக்கைப் பார்த்தது பார்த்தபடி விழித்துக் கொண்டிருந்தாள்.




அடுத்த வீட்டுக் கடிகாரம் மணி பன்னிரண்டு அடிக்கும் சத்தம் கேட்டது.

'அந்தக் கடிகாரத்தைப் போலவே நாமும் பொழுது விடியும் வரை விழித்துக் கொண்டிருக்க வேண்டியதுதானா.........!'

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை; அப்படியும் இப்படியுமாகப் புரண்டு புரண்டு படுத்தாள்.

கீழே ஏதோ ஒரு கார் வாயுவேகத்தில் சீறிக் கொண்டு செல்லும் சத்தம் கேட்டது. 'மனிதனின் அமைதியான வாழ்க்கையைக் குலைக்கும் சாதனங்களில் இதுவும் ஒன்று; மடையனுக்குக்கூட நாலு பேருக்கு முன்னால் மதிப்பைச் சம்பாதித்துக் கொடுத்துவிடும் சக்தி இதற்கு இருக்கிறது. அது மட்டுமல்ல; மூடர்கள் உலகத்தை ஏமாற்றுவதற்கு இதை ஒரு கருவியாகவும் உபயோகித்துக் கொள்கிறார்கள்!' என்று தனக்குள் வெறுப்புடன் சொல்லிக் கொண்டே அகல்யா எழுந்து உட்கார்ந்தாள். அந்தச் சத்தத்தைத் தொடர்ந்து, 'வான் வான், வான் வான்!' என்று ஒரு நாய் தீனக் குரலில் வாய் விட்டுக் கதறும் சத்தம் அவள் காதில் விழுந்தது.

'பாவம், சாலையோரத்தில் உறங்கிக் கொண்டிருந்த நாயை அந்தக் கார் கொன்று விட்டது போலிருக்கிறது. இப்படித்தான் சில சமயம் மனிதர்களைக் கூட அந்த யமன் கொன்று விடுகிறது!'

அகல்யா காதைப் பொத்திக் கொண்டு மறுபடியும் படுக்கையில் படுத்துத் தூங்க முயன்றாள்; தூக்கம் வரவில்லை.

'விளக்கை அணைத்து விட்டால் ஒரு வேளை தூக்கம் பிடித்தாலும் பிடிக்கும்' என்று எண்ணிக் கொண்டே எழுந்து சென்று அவள் விளக்கை அணைத்தாள். அவ்வளவுதான்; அவள் உடம்பு முழுவதும் ஒரு நிமிஷம் பயத்தினால் 'கிடுகிடு' வென்று ஆடி ஓய்ந்தது!

'இந்தப் பாழும் உடம்பு பயத்தினால் அப்படியே நில் விட்டுப் போய் விட்டாலும் தேவலை; இருந்துதான் இது என்ன வாழ்ந்து விடப் போகிறது!' என்று துணிந்து அவள் கால்களை விறைப்புடன் நீட்டிப் படுத்தாள்.

அப்புறம் அவள் எழுந்திருக்கவில்லை; பல பயங்கர நினைவுகளுக்கு ஆளாகிப் படுக்கையிலேயே உயிரற்றவள் போல உணர்வற்றுக் கிடந்தாள்.

* * *

மறுநாள் பொழுது விடிந்ததும் அகல்யா மாடி முகப்பில் நின்ற வண்ணம் சாலையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்பொழுதும் கனகலிங்கம் வரவில்லை; அவனுக்குப் பதிலாகத் தலைவிரி கோலத்துடன் ராதாமணி ஏதோ யோசித்தபடி மெள்ள வந்து கொண்டிருந்தான். 'இந்தத் தடவை அவனைக் கண்டதும் அகல்யா தலையை உள்ளுக் கிழுத்துக் கொள்ளவில்லை; அவன் மேலே வருவதற்கு முன்னால் அவள் கீழே இறங்கிச் சென்று, "அவர் வரவில்லையா!" என்று பரபரப்புடன் கேட்டாள்.

படித்தவர் :— டாக்டர், ஸார்! நம் வயிற்றிலே 'அப்பெண்டிக்ஸ்'



என்று ஒரு உறுப்பு இருக்கிறதாம். அதை ஆப்பரேஷன் செய்து எடுத்து விட்டாலும் மனிதன் பிழைத்திருக்கலாமாமே!

டாக்டர் :— வாஸ்தவம், 'அப்பெண்டிக்ஸ்' இல்லாமல் பிழைத்திருக்கலாம். ஆனால் டாக்டர்களாகிய நாங்கள் பிழைத்திருக்க வேண்டாமா? அதற்காகத்தான் 'அப்பெண்டிக்ஸ்' இருக்கிறது!

ராதாமணி ஒன்றும் பதில் சொல்லவில்லை. மௌனமாக மேலே சென்றாள்; அகல்யா 'என்னவோ, ஏதோ' என்று அவளைப் பின் தொடர்ந்து சென்றாள்.

இருவரும் அங்கே நேருக்கு நேராக நின்று ஒருவர் முகத்தை ஒருவர் ஊடுருவிப் பார்த்தார்கள்.

அகல்யாவுக்கு ஆத்திரம் தாங்கவில்லை; "அவர் வரவில்லையா!" என்று அவள் மீண்டும் கேட்டாள்.

அவ்வளவுதான்; அழுகை பொத்துக்கொண்டு வந்து விட்டது அவளுக்கு. முகத்தைக் கைக்குட்டையால் மூடிக்கொண்டு அவள் வெட்கத்தை விட்டு வீரிட்டு அழுதாள்.

"ஏன், என்ன நடந்தது!......சொல்லுங்களேன்!" என்று அவள் துடித்துக்கொண்டே கேட்டாள்.

"நீங்கள் இங்கிருந்து சென்ற பிறகு அவன் இரண்டு நாட்கள்தான் இந்த உலகத்தில் உயிரோடு இருந்தான். மூன்றாவது நாள் யாரோ ஒரு கொலைகாரன் அவன் மேல் காரை ஏற்றி அவனைக் கொன்றுவிட்டான்!" என்று விக்கலுக்கும் விம்மலுக்கும் இடையே அவள் சொல்லி முடிப்பதற்குள், 'தொபுகடீர்' என்று அகல்யா கீழே விழுந்தாள்.

அதற்குப் பிறகு இதயத் துடிப்பைத் தவிர வேறு எந்தவிதமான துடிப்பும் அவளுடைய தேகத்தில் இல்லை.

• • •

அன்று மாலை மூர்ச்சை தெளிந்து எழுந்தபோது, தனக்குப் பக்கத்தில் யாரோ ஒரு முதியவள் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அகல்யா விழித்தாள்.

ராதாமணி குறிப்பறிந்து, "வேறு யாருமில்லை; என் தாயார்தான். நீங்கள் மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டதும் நான் ஓடோடியும் சென்று அவர்களை உதவிக்கு அழைத்துக் கொண்டு வந்தேன்!" என்றாள்.

உடனே அந்த முதியவளைக் கைகூப்பி வணங்கிவிட்டு அகல்யா எழுந்தாள்.

"எங்கே போகப் போகிறீர்கள்!" என்று கேட்டாள் ராதாமணி.

அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை; பதில் சொல்ல அவளுக்கு வாயும் வரவில்லை. ஏனெனில் அதற்குள் துக்கம் அவளுடைய உள்ளத்திலிருந்து முகத்துக்கு வந்து விட்டிருந்தது; அப்படி வரும்போது அவள் தொண்டையை அது அடைத்து விட்டிருந்தது!

அவள் மௌனமாகக் கீழே இறங்கிச் சாலையை நோக்கி நடந்தாள்.

கடைசி நம்பிக்கையையும் இழந்து, கதியற்றுச் செல்லும் அந்தக் 'காதல் பைத்திய'த்தை ராதாமணியும் அவளுடைய தாயாரும் அனுதாபத்தோடு பார்த்தார்கள்.

அவள் தலை மறைந்தது; அந்த நிமிஷமே உலக வழக்கத்தை யொட்டி அவர்களும் அவளை மறந்து விட்டார்கள்!

## 16

'உன்னைக் காதலிக்காமல் கொல்வதை விடக் காதலித்தே கொன்றுவிடுகிறேன்......'

'உன்னைக் காதலிக்காமல் கொல்வதை விடக் காதலித்தே கொன்றுவிடுகிறேன்......'

'உன்னைக் காதலிக்காமல் கொல்வதை விடக் காதலித்தே கொன்றுவிடுகிறேன்......'

பழைய நினைவுகளில் லயித்துச் சென்று கொண்டிருந்த அகல்யாவின் காதில் கனகலிங்கம் அன்று சொன்ன அந்த வார்த்தைகள் மீண்டும் மீண்டும் மீண்டும் ஒலித்தன.

'ஆம்; அன்று நீங்கள்தான் என்னைக் காதலித்துக் கொல்வதாகச் சொன்னீர்கள். ஆனால் இன்றோ நான் உங்களைக் காதலித்துக் கொன்று விட்டேன்!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே அவள் நடந்தாள்.

'எங்கே போவது!' என்ற பிரச்னை அவளுடைய உள்ளத்தில் திடீரென்று எழுந்தது.

'அவருக்குப் பிறகு இந்தப் பரந்த உலகத்தில் நம்மை ஆதரிக்க வேறு யார் இருக்கிறார்கள்!' என்று அவள் ஒருகணம் யோசித்தாள்; மறுகணம், 'இல்லை; யாரும் இல்லை!' என்ற தீர்மானத்துடன் அவள் மேலே நடந்தாள்.

'அப்படியானால் இனி தனக்குச் சாவதைத் தவிர வேறு வழியே கிடையாதா!'

சிறிது தூரம் சென்றதும் இந்தக் கேள்வியைத் தனக்குத் தானே போட்டுக் கொண்டு அவள் நின்றாள்.

'கிடையாது; கிடையவே கிடையாது!' என்று பதில் வந்தது.

'அதற்கு முன்னால் அம்மாவை ஒரு முறை—ஒரே ஒரு முறை—பார்த்துவிட்டால்......!'

அவள் திரும்பினாள்.

'சௌமனா இருக்கும் தெருவுக்கு அடுத்த தெருவில்தானே அம்மா இருக்கிறாள்! அங்கே போய் விசாரித்தால் யாராவது சொல்ல மாட்டார்களா!'

இப்பொழுது அவளுடைய நடையில் வேகமில்லா விட்டாலும் உள்ளத்தில் ஒரு சிறு நம்பிக்கை உதயமாகியிருந்தது—'என்ன இருக்

தாலும் பெற்ற மனம் பித்து என்பார்கள்; ஒருவேளை அம்மா நமக்காக இரங்கினாலும் இரங்கலாமல்லவா!'—இந்த நம்பிக்கையின் துணையைக் கொண்டு அவள் நடந்தாள், நடந்தாள், நடந்து கொண்டே இருந்தாள்..

யமுனா இருக்கும் தெருவை நெருங்கியதும் அவள் முகம் அவளையும் அறியாமல் சிறுங்கிற்று. 'நல்ல வேளை, அவளிடம் எல்லாவற்றையும் சொல்லித் தொலைக்காமல் இருந்தோமே!' என்ற ஆறுதலுடன் அவள் அடுத்த தெருவில் காலடி எடுத்து வைத்தாள்.

அங்கே, தன்னைப் பற்றி வேறு யாரையும் விசாரிக்க வேண்டிய சிரமத்தை அகல்யாவின் தாயார் அவளுக்கு வைக்கவில்லை; 'இதோ, நான் இங்கேதான் இருக்கிறேன்' என்று சொல்வது போல, அவள் எச்சில் இலையும் கையுமாக அங்கிருந்த ஒரு வீட்டின் முன்னால் காட்சியளித்தாள்.

அவளைக் கண்டதும் அகல்யாவின் உள்ளத்தில் மீண்டும் புயல் வீசிற்று. அதை ஒருவாறு சமாளித்துக் கொண்டு அவள் அந்த வீட்டை நெருங்கினாள்.

அதற்குள் அவளுடைய தாயார் எச்சில் இலையைக் குப்பைத் தொட்டியில் வீசி எறிந்து விட்டு, போகிற போக்கில் வராந்தாவில் எரிந்து கொண்டிருந்த விளக்கையும் அணைத்துவிட்டு உள்ளே சென்றாள்.

'எச்சில் இலைக்கு நேரும் கதிதான் இனி நமக்கும் நேரும் போலிருக்கிறது!' என்று எண்ணிக்கொண்டே, அகல்யா துணிந்து அந்த வீட்டை நோக்கி முன்னேறினாள். வராந்தாவில் இருந்த ஒட்டுத் திண்ணையை அடைந்ததும் அவளால் மேலே செல்ல முடியவில்லை; அந்தத் திண்ணையில் சாய்ந்தபடியே நின்றுவிட்டாள்.

உள்ளே தன் அப்பாவும் சித்தப்பாவும் பேசிக் கொண்டிருப்பது அவள் காதில் விழுந்தது. 'என்ன பேசுகிறார்கள்!' என்று அவள் ஒட்டுக் கேட்டாள்:

"அண்ணா! அந்தப் பயலைத் தொலைத்து விட்டேன்!" என்றார் அவளுடைய சித்தப்பா.

"நிஜமாகவா!" என்று தூக்கிவாரிப் போட்டவராய்க் கேட்டார் அவளுடைய அப்பா.

"ஆமாம்; அதிலும் எப்படித் தொலைத்தேன், தெரியுமா!—'எதிர்பாராத விதத்தில் நேர்ந்த மரணம்' என்று போலீஸார் உட்பட எல்லோரும் நினைக்கும்படி ஆளை வேலை தீர்த்து விட்டேன்..."

"ஐயோ, பாவம்!"

"பாவமாவது, புண்ணியமாவது! அதற்காக மோட்டார் டிரைவரிடம் முழுசாக ஆயிரம் ரூபாயல்லவா எண்ணிக் கொடுத்தேன்! - இல்லையென்றால் சமயம் பார்த்து அவன் காரை அந்தப் பயலின் மேலே ஏற்றி யிருப்பானா, என்ன!—போதாக் குறைக்கு அவன் அதற்காகச் சிறைக்குச் செல்ல நேர்ந்தாலும், அதுவரை அவனுடைய குடும்பத்தை வேறு காப்பாற்றுவதாகச் சொல்லியிருக்கிறேனே......!"

"அது சரி; அவனை டிரைவருக்கு எப்படித் தெரிந்தது!"

"நான் அந்தப் பயலின் விலாசத்தைக் கொடுத்தேன். அதன்படி. டிரைவர் அவனுடைய அறைக்குப் போயிருக்கிறான்......"

"பகலிலா!"

"இல்லை; இரவில்தான்!—ஒரு சமயம் போயிருந்த போது அந்தப் பயலுடன் இன்னொரு பயலும் இருந்தானாம். அதனால் ஆளைக் கண்டு கொள்ள முடியவில்லையாம். இன்னொரு சமயம் போயிருந்தபோது ஆசாமி தானாகவே வந்து டிரைவரைப் பிடித்துக் கொண்டு, 'நீ யார்!' என்று அதட்டிக் கேட்டானாம். டிரைவர் ஆளை அடையாளம் கண்டு கொண்டு, அச்சாரமாக அவனுக்கு ஒரு உதையும் கொடுத்துவிட்டுத் திரும்பி வந்தானாம். அடுத்த நாள்தான் ஆளே காலி!"

"ச்சச்சச்சோ!—இதனாலெல்லாம் போன மானம் திரும்பி வந்துவிடவா போகிறது!—போனது போனதுதானே!"

"அதற்காக நம்மிடம் வேலை செய்து கொண்டிருந்த பயல் நமக்கு முன்னாலேயே நம்முடைய பெண்ணுடன் திரிந்து கொண்டிருப்பதா, என்ன!"

"நம்மிடம் வேலை செய்துகொண்டிருந்த பயலா!—அது யார், அது!"

"ஏன், கனகலிங்கம்தான்!"

"கனகலிங்கமா!—'இந்திரன்' என்றல்லவா அவனுக்குப் பெயர்......!"

"என்ன, என்ன......!"

"ஆமாம்; இது அக்கிரமத்திலும் அக்கிரமமாக வல்லவா இருக்கிறது!"

"நான் அகல்யாவோடு அந்தப் பயலை நேருக்கு நேராகப் பார்த்தேனே!"

"என்னமோ, போ!—எனக்கு ஒன்றும் புரியவில்லை."

அதற்குப் பிறகு அவர்களுடைய பேச்சுக் குரல் கேட்கவில்லை; இருவரும் இருட்டைத் தேள் கொட்டியது போல மௌனமாக இருந்து விட்டார்கள்.

'அட, பாவிகளா! நான் அப்பொழுதே நினைத்தேன் — நீங்கள்தான் அந்தக் கொலைகாரனை அனுப்பி யிருப்பீர்களென்று!—நீங்கள் நாசமாய்ப் போக!'

அகல்யாவுக்கு இப்பொழுது 'அம்மாவுமாச்சு, அப்பாவுமாச்சு!' என்று அலுத்து விட்டது. அவள் விரக்தியுடன் வந்த வழியே திரும்பினாள். ஆனால் மனதிலிருந்த பாரம் அவளை நடக்க விட



லில்லை; ஒவ்வொரு அடியையும் அவள் வெகு சிரமப்பட்டு எடுத்து வைக்க வேண்டியிருந்தது. இந்த அழகில் தெருவோடு இருந்த படிகளைக் கடக்கும்போது, அவள் முதல் படியிலிருந்து இரண்டாம் படியில் காலை வைப்பதற்குப் பதிலாக மூன்றாம் படியில் காலை வைத்துவிட்டாள். அவ்வளவுதான்; 'தடால்' என்று அவள் கீழே விழுந்து விட்டாள்.

அதே சமயத்தில் தன்னை மறந்து வந்து கொண்டிருந்த யாரோ ஒருவன் அவள் மேல் இடறி விழுந்தான்.

"ஐயோ!" என்று அகல்யா முனகினாள்.

"மன்னியுங்கள்!" என்று பல்லை இளித்துக் கொண்டே அவன் எழுந்து நின்றான்.

அகல்யா தலை நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். —என்ன ஆச்சரியம்! அவளுக்கு எதிரே ரிஷி பத்தினியான அகல்யாவின் சாபத்தைப் போக்க வந்த ஸ்ரீராமனைப் போலத் தசரதகுமாரன் லக்ஷ்மணனின் துணையின்றி, கையில் கோதண்டமின்றி நின்று கொண்டிருந்தான்.



வக்கீல்:—என்னப்பா! வாதியை எதிரி அடிக்கும்போது நீ அந்த இடத்தில் இருந்திருக்கிறாய். ஆனால் பார்க்கவில்லை என்று சொல்லுகிறாயே, அது எப்படி?

சாட்சி:—பார்த்தால் என்னைச் சாட்சியாகப் போட்டு விடுவார்களே என்று பயந்து, கண்ணை மூடிக் கொண்டு விட்டேன்!

அவனைக் கண்டதும் எந்த விதமான உணர்ச்சியையும் வெளியே காட்டிக் கொள்ளாமல், "நீங்களா!" என்றாள் அவள் தலையைக் கீழே குனிந்துகொண்டே.

"ஆமாம்; நான்தான்!" என்று சொல்லிக் கொண்டே தசரதகுமாரன் முதன் முறையாகத் துணிந்து அவளைக் கைகொடுத்துத் தூக்கினான்.

இருவரும் தனிமையை நாடிக் கடற்கரைக்குச் சென்றார்கள்.

* * *

"எல்லாவற்றையும் நான் கேள்விப்பட்டேன், அகல்யா! — அந்தப் படுபாவி உன்னைக் கல்யாணபுரத்தில் தன்னந்தனியாக விட்டுவிட்டுச் சொல்லிக் கொள்ளாமல் வந்து விட்டானாமே!—வந்த பிறகு, 'இனி என்னை எதிர்பார்க்க வேண்டாம்' என்று அவன் உனக்கு ஒரு கடிதம் வேறு எழுதிப் போட்டானாம். அப்புறம், அந்தக் கடிதத்தைக் கொண்டு நீ எங்கே போலீஸ் நடவடிக்கை எடுத்துவிடப் போகிறாயோ என்று அவனுக்குப் பயமாயிருந்ததாம். அதற்காக மழையில் நனைந்து கொண்டு அவன் ஒரு நாள் உன்னைத் தேடி ஹோட்டல் அறைக்கு வந்தானாம். நீ அப்போது வேறு யாரோ ஒருவனிடம் பேசிக் கொண்டிருந்தாயாம். அந்த ஆசாமி 'இந்திரன் உனக்கு எழுதிய கடிதத்தை என்னிடம் கொடு!' என்று உன்னைக் கேட்டானாம். 'அதைக் கிழித்து எறிந்து விட்டேன்' என்று நீ சொன்னாயாம். அதற்குப் பிறகுதான் அவன் மன நிம்மதியுடன் ஏற்கெனவே தனக்கு நிச்சயமாகியிருந்த ஒரு பணக்காரன் வீட்டுப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டானாமே!—என்ன, நான் சொல்வதெல்லாம் உண்மைதானே!" என்று நீலவானத்தைப் பார்த்தபடி, ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே கேட்டான் தசரதகுமாரன்.

அகல்யா மௌனமாக இருந்தாள்.

"யார் கைவிட்டாலும் நான் உன்னைக் கைவிட மாட்டேன், அகல்யா!" என்று சொல்லிக்கொண்டே, அவன் அவளுடைய கரத்தை மெல்லப் பற்றினான்.

அவனுடைய பிடியிலிருந்து தன்னுடைய கரத்தை விடுவித்துக் கொள்ள அகல்யா விரும்பவில்லை; பேசாமலிருந்தாள்.

"நீ என்னுடைய உயிர்; நான் உன்னுடைய உடல்—நம்மை இனி யாராலும் பிரிக்க முடியாது!" என்றான் அவன்.

அவள் 'முடியும்' என்றும் சொல்லவில்லை; 'முடியாது' என்றும் சொல்லவில்லை—மௌனமாக இருந்தாள்.

"நான் உன்மீது கொண்ட காதல் உடலோடு ஒட்டிய காதல் அல்ல; உயிரோடு ஒன்றிய காதல். அதுவே உயர்ந்த காதல் என்றும், உண்மைக் காதல் என்றும் தெரிந்தவர்கள் சொல்வார்கள், அகல்யா!—அந்தக் காதல் பூமி பிளந்தாலும் சரி, ஆகாயம் கீழே விழுந்தாலும் சரி—எதற்கும் பின் வாங்காது!"

அவள் 'வாங்கும்' என்றும் சொல்லவில்லை; 'வாங்காது' என்றும் சொல்லவில்லை—பேசாமலிருந்தாள்.



"உனக்கு விஷயம் தெரியாது. நான் பழைய தசரதகுமாரன் அல்ல; புதிய தசரதகுமாரன்—என் அண்ணுவுக்கும் எனக்கும் இப்பொழுது பாகப் பிரிவினை யாகிவிட்டது. வீட்டில் நானும் சமையற்காரனும் தான் இருக்கிறோம். எனவே, எந்தவிதமான இடைஞ்சலுமின்றி நாம் இருவரும் 'ஜாம், ஜாம்' என்று கல்யாணம் செய்து கொள்ளலாம். அப்புறம் சிட்டுக் குருவியைப் போலவும் வானம்பாடியைப் போலவும் நாம் திரியலாம்; பறக்கலாம் — அது மட்டுமா! — நீ குயில்; பாடுவாய்!—நான் மயில்; ஆடுவேன்!—என்ன, உனக்குச் சம்மதம்தானே......!"

அவள் 'சம்மதம்' என்றும் சொல்லவில்லை; 'சம்மதமில்லை' என்றும் சொல்லவில்லை—மௌனமாக இருந்தாள்.

"என்னுடைய பாக்கியமே பாக்கியம்!—நான் சாப்பிட்டுவிட்டு ஒரு கண்பனைப் பார்ப்பதற்காக வந்து கொண்டிருந்தேன். வழியில் கைதவறிப் போட்டுவிட்ட மாணிக்கத்தைப் போல நீ கிடைத்தாய்! — என் மகிழ்ச்சிக்குக் கேட்க வேண்டுமா! — என்னுடைய நெடுநாளைய கனவு இன்றுதான் நனவாயிற்று! இனி நான் பொறுக்க மாட்டேன்; ஆமாம், பொறுக்கவே மாட்டேன்!—வா அகல்யா, வா!—என்னுடைய பொறுமையை நீ இன்னுமா சோதித்துக் கொண்டிருக்கப் போகிறாய்!—வேண்டாம்; வேண்டவே வேண்டாம்!—என்னால் தாங்க முடியாது; தாங்கவே முடியாது!—வா! எழுந்து வா!"

அவன் அவளுடைய கையைப் பிடித்து இழுத்தான். அவள் பேசாமல் எழுந்து அவனுக்குப் பின்னால் சென்றாள்.

அவளுடன் தோளோடு தோள் சேர்த்துச் செல்லும்போது தசரதகுமாரனுக்குப் பூமியில் நடப்பது போலவே இல்லை; ஆகாயத்தில் பறப்பது போல இருந்தது.

ஆனால் அந்த மகிழ்ச்சி நெடுநேரம் நீடிக்கவில்லை; சிறிது தூரம் சென்றதும் அவனுக்குப் பின்னால் யாரோ இருவர் 'கொல்' லென்று கைகொட்டிச் சிரிக்கும் சத்தம் கேட்டது. அவன் திரும்பிப் பார்த்தான்; அகல்யாவைத் தவிர வேறு யாரையும் அங்கே காணவில்லை.

"நீயா சிரித்தாய்!" என்று அவளை நோக்கிக் கேட்டான் அவன்.

அவள் 'இல்லை' என்றும் சொல்லவில்லை; 'ஆமாம்' என்றும் சொல்லவில்லை—மௌனமாக அவனுக்குப் பின்னால் உடல் சோர, உள்ளம் சோர வந்து கொண்டிருந்தாள்.

அதைப் பொருட்படுத்தாமல் அவன் மேலே மேலே நடந்துகொண்டே இருந்தான்.

'அதோ, அவனுடன் போகிறாள், பார்!—அவளைத்தான் முதலில் இந்திரன் அழைத்துக் கொண்டு போனான். அப்புறம் அவன் அவளை விட்டுவிட்டான்!' என்று யாரோ ஒருவன் அகல்யாவைச் சுட்டிக் காட்டிச் சொல்வது போலிருந்தது தசரதகுமாரனுக்கு.

அவனைத் தொடர்ந்து, 'ஆமாம்; எனக்குத் தெரியுமே—அதற்குப் பிறகு அவள் யாரோ ஒரு புத்தகக் கடைக்காரப் பயலுடன் இருந்தாளாம்!' என்று இன்னொருவன் சொல்வது போலிருந்தது.

'அப்படியானால் இவன் மூன்றாவது ஆசாமி என்று சொல்லு!' என்று மற்றொருவன் சொல்வது போலிருந்தது.

இப்படி ஒருவர் பின் ஒருவராக ஏதேதோ சொல்வது போலிருக்கவே, தசரதகுமாரனின் மனம் சலன மடைந்தது. அவன் காதைப் பொத்திக் கொண்டு, மார்பை அழுத்திப் பிடித்துக் கொண்டு எப்படியோ தன் வீட்டை அடைந்தான்.

அகல்யாவுடன் அவன் தன் அறைக்குச் சென்று அமர்ந்ததும், "ஸார்!" என்று குரல் கொடுத்துக் கொண்டே கையில் பால் செம்புடன் சமையற்காரன் வந்தான்.

"என்ன!" என்று தசரதகுமாரன் கேட்டான்.

"ரொம்ப நேரம் கழித்து வந்திருக்கிறீர்களே!—பால் கெட்டுப் போய்விட்டதே!" என்று பால் செம்பைத் தசரதகுமாரனுக்கு எதிரே நீட்டினான் அவன்.

"சரி, கெட்டுப்போன பாலை என்ன செய்யப் போகிறாய்!" என்று கேட்டுக் கொண்டே செம்பிலிருந்த பாலையும், தனக்கு எதிரே உட்கார்ந்திருந்த பாவையையும் தசரதகுமாரன் கணத்துக்குக் கணம், கணத்துக்குக் கணம் மாறி மாறிப் பார்த்தான்.

சமையற்காரன் சிரித்தான். சிரித்துவிட்டு, "என்ன ஸார், இது!—'கெட்டுப்போன பாலை

என்ன செய்யப் 'போகிறாய் !' என்று 'காலேஜ் ஸ்டூடண்ட்ஸ்' கேட்கிற மாதிரி கேட்கிறீர்களே ! —எங்கேயாவது கெட்ட பால் நல்ல பாலாகுமா, ஸார் ! — எடுத்துச் சாக்கடையிலே ஊற்ற வேண்டியதுதான் !'' என்றான் அவன் அலட்சியமாக.

இதைக் கேட்டதும் தசரதகுமாரனுக்குச் 'சுருக்' கென்றது. அவன், ''சரி, போ !'' என்று சமையற்காரனை விரட்டி விட்டு, அகல்யாவின் முகத்தை ஊடுருவிப் பார்த்தான்; அவளும் அவன் முகத்தை ஊடுருவிப் பார்த்தாள்.

அடுத்த நிமிஷம் அவனுடைய இதயம் இரும்பாயிற்று. 'சட்' டென்று அவன் அகல்யாவின் கரத்தைப் பிடித்துக் கரகர வென்று இழுத்துக் கொண்டு போய் வெளியே விட்டு விட்டுக் கதவைப் 'பட்'டென்று சாத்தித் தாளிட்டுவிட்டு வந்தான் !



அகல்யாவுக்கு விஷயம் புரிய வெகு நேரம் ஆகவில்லை; புரிந்ததும் அவள் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள்.

'யார் இடம் அளிக்காவிட்டாலும் உலகத்தை விட மூன்று பங்கு பெரிதான கடல் கூடவா நமக்கு இடமளிக்காது !'

அதற்குமேல் அவள் அங்கே நிற்கவில்லை; நிதானிக்கவில்லை; எதையும் யாரையும் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. ''வா, வா !'' என்று தன்னை அன்புடன் அணைத்துக் கொள்வதற்காகக் கைதூக்கி வரவேற்கும் அலைகடலை நோக்கி அவள் ஓடினாள், ஓடினாள், ஓடிக் கொண்டே இருந்தாள்.

பாவம், மரணம் அவள் உயிரை மாய்க்கலாம்; உடலை மாய்க்கலாம்; உள்ளத்தை மாய்க்கலாம்—ஆனால் அவள் வலிந்து ஏற்றுக் கொண்ட பழியை அதனால் மாய்க்க முடியுமா, என்ன !

''நல்லவர்கள் வாழ்வதில்லை
நானிலத்தின் தீர்ப்பு !''—கதாசிரியன்.

(முற்றும்)



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 309. வானத்தையே இடித்து விடுவோமா!

லக்ஷ்மணன் செய்த போர் காரணமாக அரக்க சேனை எத்தனையோ அழிந்தன. அதிகாயன் முதலான ராவணனது மக்கள் இறந்தனர்.

இந்த விஷயத்தைத் தூதர்கள் போய் ராவணனிடம் சொன்னார்கள்.

செய்தியைக் கேட்ட மாத்திரத்தில் ராவணனது மனசில் உண்டான துயர வெறியை இப்படி அப்படி என்று சொல்ல முடியாது.

ஆங்காரமும் சோகமும், மனத் தாங்கலும் வீரமும் வந்து வந்து ராவணனைப் பாடாய்ப் படுத்தின.



மனசு ஒரே குழப்பமாய்க் குழம்பி என்ன செய்வதென்று தெரியாமல் அப்படியும் இப்படியுமாக வெறித்துப் பார்க்கிறான் அப்பாவி ராவணன்.

பக்கத்தில் நிற்கிற உயர்ந்த லக்ஷியம் உள்ள பெரியார்களை (தேவரை) நோக்குகிறான். அவர்கள் என்ன சொல்லியும் கேட்கவில்லை தானே ராவணன்.

தனக்கு வரப்போகும் பெரும் பழியையும் யோசிக்கிறான்.

திசையினை நோக்கும், நின்ற
    தேவரை நோக்கும், வந்த
வசையினை நோக்கும், கொற்ற
    வாளினை நோக்கும், எற்றிப்
பிசையுறும் கையை, மீசை
    சுறுக்கொள உயிர்க்கும்; பேதை
நகையிடை இழந்தான் என்ன
    நகும் அழும் முனியும் நாணும்.

[திசையினை நோக்கும்: கிழக்குத் திசையை நோக்குகிறான், உடனே திரும்பி மேற்குத் திசையை நோக்குகிறான். இப்படியாக மாறி மாறித் திசைகளைக் காரணமின்றி வெறித்துப் பார்க்கிறான்; நின்ற தேவரை நோக்கும்: பக்கத்தில் துயரத்தோடு நின்ற அறிஞர்களைப் பார்த்தான்; அறிஞர்களைப் பார்த்த உடன்; வந்த வசையினை நோக்கும்: அவமானமும் பழிச் சொல்லும் ஞாபகத்துக்கு வந்தன; கொற்ற வாளினை நோக்கும்: எத்தனையோ வீரச் செயல்களைச் சாதித்த வாள் கையில் இருந்தது. அதைப் பார்த்தான்.

எற்றிப் பிசையுறும் கையை: கையோடு கையைப் படார் என்று மோதி அப்படியே ஒன்றோடொன்றை இறுக்கிப் பிசைந்தான்.

மீசை சுறுக்கொள உயிர்க்கும்: மீசை கருகிச் சுருள்கிறதோ என்று எண்ணும்படி வெப்பமான பெரு மூச்சு விடுகிறான்.

பேதை நகையிடை இழந்தான் என்ன: சாமானியப்பட்ட ஒருவருக்கு ஜமீன்தார் பதவி வந்து விட்டது. அந்தப் பதவிக்குத் தக்கவாறாக மகுடாபிஷேகம் நடந்தது. கிரீடத்தை வைத்துக் கொலுவில் இருக்கச் செய்தார்கள். அந்த அலங்காரத்துடனேயே பல்லக்கில் உட்காரச் செய்து பிறகு மேளதாளங்களோடு பவனி போகிறது. ஊர் வீதியில் வட மேற்கு மூலையில் பவனி வரும்போது ராஜாவின் ஆட்கள் வந்து பல்லக்கை நிறுத்தி



சாப்பிடுபவர் (சர்வரைப் பார்த்து):- ஒரு டம்ளர் ஜலம் கொடு, அப்பா!

ஸர்வர்:— சாப்பிடுவதற்குத் தானே கேட்கிறீர்கள்?

சாப்பிடுபவர்:— இல்லை; நீச்சல் அடிப்பதற்கு!

'நீ ஜமீன்தார் அல்ல' என்று சொல்லிப் பல்லக்கை விட்டு இறக்கி ஓடிப் போகச் செய்தால் பவனி வந்த ஆசாமி மனம் எப்படி இருக்கும். பவனி வரும்போது கட்டி வந்த மனக் கோட்டைகள் எல்லாம் எப்படித் தகர்ந்து போகும். அந்த மன நிலையில் இருந்தான் ராவணன். அதிகாயன் முதலிய வீர மக்கள் இறந்து பட்டார்கள் என்ற செய்தியைக் கேட்டபோது—பேதை நகை யிடை இழந்தான் என்ன!

நகும் அழும்: இப்படியா வந்தது நம்முடைய வீரச் செயலின் பயனெல்லாம் என்று சிரிக்கிறான். இப்படிக்கு வந்து விட்டதே என்று உடனே அழுகிறான்.

முனியும் நாணும்: அடங்காதபடி கோபம் வரத்தான் செய்கிறது. உடனே இந்த ஒன்றுக்கும் உதவாத மனுஷர், குரங்கு இவைகளைத் தோல்வியுற்றோம் என்று ஏற்பட்டு விட்டதே, என்று லஜ்ஜை வந்து மனதை அமிழ்த்துகிறது.

குறிப்பு:—சோக வெறி ஒரு வீரனை எப்படி வெல்லாம் பாடாய்ப் படுத்தும் என்பதை அபூர்வமான தெளிவோடு சித்திரித்திருக்கிறது செய்யுளில்.]

⁂

அழுகை வந்தது; லஜ்ஜை வந்தது. சிறிது நேரங் கழித்து ஒரு வெறி, அடங்காத கோப வெறி:



ஒருவர்:—நேற்று நீ கொடுத்த தேங்காய் ஒரே அழுகல்! வீட்டில் 'அம்மா' ரொம்பவும் கோபித்துக் கொண்டார்கள்!

கறிகாய்க் கடைக்காரி:—அதற்கு நான் என்ன பண்ணட்டுங்க? நானுதான் முன்னுலேயே அந்தத் தேங்காயை வாங்கிக் கொண்டு போகச் சொன்னேன். அன்னைக்கு வேண்டாம் என்று போய் விட்டீங்க!

பூமியையே உடைத்து விடுவோமா என்று எண்ணுகிறான் ராவணன். அப்படி எண்ணுவது இயல்புதானே.

பூகம்பங்களுடைய செயல்களை நம்மவர் ஆதிகாலத்திலும் பார்த்திருக்கிறார்கள்.

வானத்தையே இடித்து விடுவோமா என்று எண்ணத் தோன்றுகிறது. கோடை இடி வானத்தின் ஒரு மூலையில் இருந்து மற்றொரு மூலைக்குக் குமுறிக் கொண்டு ஓடும்போது வானத்தையே இடிக்க எத்தனிப்பதாகத் தோன்றும்.

மண்ணினை எடுக்கஎன் னும்;
வானினை இடிக்கஎன் னும்;
எண்ணில உயிர்கள்எல் லாம்
ஒருகணத்(து) எற்றஎன் னும்;
பெண்ணெனும் பெயரஎல் லாம்
பிளப்பென்என்(று) என்னும்; எண்ணிப்
புண்ணிடை எரிபுக்கென் ன
மானத்தாற் புழுங்கிநை யும்.

[மண்ணினை எடுக்க என்னும்: பூமியை அப்படியே தூக்கி உடைத்து விடுவோமா என்று எண்ணத் தோன்றும்; வானினை யிடிக்க என்னும்: வானைத் தகர்த்து விடுவோமா என்று எண்ணுவான்; எண்ணில உயிர்களெல்லாம் ஒரு கணத்து எற்ற என்னும்: எண்ணில்லாத உயிர்ப் பிராணிகளை வெல்லாம் அப்படியே உதைத்துக் கொன்று விடுவோமா என்று எண்ணுவான்; பெண்ணெனும் பெயர எல்லாம் பிளப்பென் என்று என்னும்: பெண் என்று பெயரை உடைய எல்லோரையுமே (வயதைப் பாராமல்) வாளினால் இரண்டு இரண்டு துண்டாக வெட்டித் தீர்த்துவிடுவோமா என்றும் எண்ணுகிறான்-சீதையினால் இவ்வளவும் விளைந்ததே என்ற நினைவு வந்ததும் ஆங்காரம் பெண் இனத்தையே நோக்கிச் செல்லுகிறது; எண்ணி: இந்த வாறாக எல்லாம் எண்ணி எண்ணி; புண்ணிடை எரிபுக்கென்ன: கட்டி பழுத்து உண்டான புண்ணில் கொள்ளியை வைத்தமாதிரி; மானத்தால் புழுங்கி நையும்: அவமானம் வந்து தாக்கவும் மனம் படாத பாடு படுகிறது.]

சோகம் காரணமாக, எத்தனையோ எண்ணங்கள் இதயத்தை வந்து தாக்கும் என்னும் உண்மையை மேலே குறித்த கவிகள் வெகு அற்புதமாய் எடுத்துக் காட்டுகின்றன.

# 'பால்ய நண்பன் பாலு'

எஸ். வி. எஸ்.

ராஜுவுக்கு வயது இரண்டரைதான் ஆகிறது. ரொம்பவும் சூட்டிகையான பையன். அவன் யாருடன் எல்லாம் பழகுகிறானோ அவரவர் இயல்பை அறிந்து பழகுவான். அவனுக்கு உங்களிடம் ஏதாவதும் வேண்டியிருந்தால் அவன் கேட்கும் தோரணையிலேயே கொடுத்துவிட வேண்டும் என்று தோன்றும். என் மேஜைமீதிருக்கும் பேனா வேண்டியிருந்தால் "அப்பா! அதை எடுத்துக்கலாமா?" என்று பேனாவைச் சுட்டிக் காட்டிக் கொண்டே முகத்தில் புன்சிரிப்புத் தவழக் கேட்பான். அப்போது "இந்தப் பேனா என்ன. எது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளேன்" என்றுதான் எனக்குச் சொல்லத் தோன்றும்.

இப்படித்தான் அவன்! எந்த வஸ்துவையும் கேட்காமல் எடுத்துக் கொள்ள மாட்டான். அவன் தாயார் அப்பளாம் பொரித்துக் கொண்டிருந்தால் "அம்மா, நான் அப்பளாம் எடுத்துக்கலாமா?" என்று அப்பளாத்தைக் காட்டிக் கொண்டே எடுப்பான்!

இந்தக் கேள்வி கேட்கும் ராஜு என் வாழ்க்கையில் தோன்றியதிலிருந்து எனக்கு என் பால்ய நண்பன் பாலுவின் நினைவு அடிக்கடி வருகிறது.

பாலுவும் நானும் எங்கள் கிராமத்தில் ஒன்றாக வசித்தவர்கள். அவன் ஒரு ஏழை வைதிகக் குடும்பத்தைச் சேர்ந்தவன். ரொம்பவும் அடக்க ஒடுக்கமான சாதுப் பையன். பள்ளிக்கூடத்தில் ஏதாவதும் கணக்குப் போடச் சொன்னால், உடனே உபாத்தியாயரை, "போடலாமா ஸார்?" என்று கேட்பான். "கணக்குப் போடத்தானே சொல்லுகிறேன். அப்புறம் போடலாமா, என்னலாமா?" என்பார் உபாத்தியாயர்.

ஆமாம்; அவன் எந்தக் காரியத்தையும் ஒரு கேள்வியுடன் ஆரம்பிப்பான். என்னிடம் ஏதாவது ஒரு புஸ்தகம் இரவல் வாங்க வேண்டும் என்று வந்தால், "உன்னிடம் நான் ஒன்று கேட்க வேண்டும் என்று இருக்கிறேன், கேட்கலாமா?" என்ற பீடிகையுடன் தான் ஆரம்பிப்பான்.



இந்த மாதிரி பாலு என்னுடன் ஒரு வருஷமோ என்னவோதான் படித்தான். அவனுக்குப் படிப்பு ஏறவில்லை. அதனால் படிப்பை நிறுத்தி விட்டுக் குடும்பத் தொழிலாகிய வைதிகத் தொழிலில் ஈடுபடப் பயிற்சி பெறலானான்.

* * *

நான் எங்கள் ஊர்ப் பள்ளிக்கூடத்தில் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்துப் 'பாஸ்' செய்தேன். பிறகு என் கல்லூரிப் படிப்பை முன்னிட்டு சென்னைக்கு வந்தேன். சென்னையில் நான்கைந்து வருஷங்கள் தொடர்ந்து இருந்து விட்டேன். விடுமுறை நாட்களில் கூட ஊர்ப் பக்கம் போகவே இல்லை. ஊருக்குப் போக வேண்டும் என்ற ஆசை யிருந்தாலும், ஏதேதோ வேலைகள் குறுக்கிட்டுப் போக முடியாமல் செய்து வந்தன.

கடைசியில், (ஊரை விட்டு வந்த) ஐந்தாவது வருஷத்துக் கோடை விடுமுறை நாட்களில் கிராமத்துக்குப் போனேன். கிராமத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. மேடும் பள்ளமாக இருந்த ரோடுகள் எல்லாம் நல்ல விசாலமான சாலைகளாக மாறி யிருந்தன. ஊர் முழுவதும் மின்சார விளக்குகள் போடப்பட்டிருந்தன. தெருவுக்குத் தெரு குழாய்கள் வைக்கப்பட்டிருந்தன. "தேசு வாசகசாலை" என்ற இலவசமாகப் பத்திரிகைகள் படிக்கும் ஒரு வாசகசாலை ஏற்பட்டிருந்தது. காய்ந்து வறண்டு கிடக்கும் எங்கள் ஊர்க் குளத்தின் நடுவில் ஒரு பெரிய மூங்கில் கம்பு நடப்பட்டு அதன் உச்சியில் மூவர்ணக் கொடி, தேசக் கொடி பறந்து கொண்டிருந்தது. இப்படி எத்தனை மாறுதல்கள்! எத்தனை மாறுதல்கள்!

முதலில் இந்த மாறுதல்களைக் கண்டு பிரமிப்பும் மலைப்பும் ஏற்பட்டன. சந்தோஷமாகவும் இருந்தது! பிறகு....பிறகு...

நான் ஊரிலிருந்த போது, எங்கள் தெருக் கோடியில் கோமசுவரய்யர் என்று ஒரு 'தாத்தா' இருந்தார். அவரை நாங்கள் 'கோடித் தாத்தா' என்று அழைப்பது வழக்-

கம். நான் "நம்ம கோடித் தாத்தா சௌக்கியமாக இருக்கிறாரா?" என்று ஊருக்குப் போனதும் விசாரித்தேன். "இருக்கிறார் பரலோகத்திலே பரம சௌக்கியமாக!" என்று சொன்னார்கள். அவர் இறந்து போய் அத்தனை வருஷங்களாகி, பழசாகிப் பழங் கதையாகி, ஐதீகக் கதையாகவும் போய் விட்டது. ஆனால் அந்தச் செய்தி என்னைத் தூக்கி வாரிப்போட்டது!

"குப்பண்ணா என்னவானார்?"

"ஐயோ, அவருக்குக் கடன் தலைக்கு மேல் போய் வீடு வாசல் எல்லாம் ஏலத்திலே போய்விட்டது" என்றார்கள்!

"குப்பண்ணாவுக்கா இந்தக் கதி!" என்று என் மனம் அங்கலாய்த்தது.

பிறகு அன்று சாயங்காலம் ஊர் சுற்றி வருவோம் என்று போனேன்.

நான் சிறுவனாக இருந்த போது என் தோழர்களுடன் கோலி விளையாடிய புளிய மரத்தடி ஒரே சூன்யமாக இருந்தது. அந்தப் புளிய மரத்தையே காணோம்!

நாங்கள் பந்து விளையாடிய மைதானத்தில் ஒரு பிரம்மாண்டமான கட்டிடம் எழும்பி யிருந்தது.

உள்ளூர்க் கோவிலின் இடிந்த மதிற்சுவர் பரிபூரணமாக இடிந்து போய்ப் பழுது பார்க்கப்படாமற் கிடந்தது!

இதெல்லாம் பார்த்த போதும் கேட்ட போதும் எனக்கு முதலில் ஏற்பட்ட சந்தோஷம் இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது!

மனதில் ஒரு வித அதிருப்தி, ஒரு அசந்தோஷம் ஏற்பட்டது. தெரிந்த மனிதர்கள் ஒருவராவது இல்லை. தெரிந்த இடங்கள், பழகிய இடங்கள் எல்லாம் மாறிப் போய் விட்டன—என்றால் ஏக்கம் இராதா?

இந்த ஏக்கத்துடனேயே அன்றிரவு சாப்பிட்டு விட்டுப் படுத்தேன். தூக்கம் வரவில்லை; ஆனால் ஏதோ ஒன்று சட்டென்று நினைவு வந்தது. "நம்ம பாலு சாஸ்திரி இருக்கானா?" என்று கேட்டேன் பக்கத்து வீட்டுக்காரரை.

"எந்த பாலு சாஸ்திரியைக் கேட்கிறேள்? லாமா சாஸ்திரியைத் தானே கேட்கிறீர்கள்?" என்று கேட்டார் பக்கத்து வீட்டுக்காரர்.

"ஆமாம், ஆமாம், அந்த லாமா பாலுவைத் தான் கேட்கிறேன்" என்றேன்.

"அடாடா! அவனுக்கு அடித்த யோகத்தை என்னவென்று சொல்லுவது, போங்க! அதிர்ஷ்டம் என்றால் அப்படின்னா அடிக்கணும்!" என்றார்.

"அப்படி என்ன யோகம் அடித்தது?"

"அவன் இப்போ வெறும் லாமா பாலு சாஸ்திரி இல்லை; ஜமீன்தார் பாலு ஆகி விட்டான்!"

"என்ன?"

"ஆமாம்; ஜமீன்தார் ஆகிவிட்டான்."

"இது என்ன வேடிக்கையாக இருக்கிறதே! அவன் எப்போ ஜமீன்தார் ஆனான்?" என்றேன் ஆச்சரியத்துடன்.

"மூன்று வருஷத்துக்கு முன்னால் நம் ஊர் ஆற்றில் திடீரென்று பெருவெள்ளம் ஆடி மாதத்தில் வந்தது. ஆடி பதினெட்டாம் பெருக்கின்போது ஊரே அமர்க்களப் பட்டது. விதவிதமான சித்திரான்னங்கள் எல்லாம் நம்ம பெண்டுகள் கட்டிக்கொண்டு போய்க் காவேரியம்மனுக்கு நைவேத்தியம் பண்ணி விநியோகித்தார்கள்.

"அன்று சாயங்காலம் ஆறு மணியிருக்கும். நம்ம லாமா சாஸ்திரி ஆற்றங்கரையோரம் நடந்து போயிருக்கான். அவன் பாட்டுக்கு மனோராஜ்யத்தில் மூழ்கி நடந்து போய்க் கொண்டிருந்தபோது 'ஐயோ! ஐயோ!' என்று ஒரு பெண் பிள்ளை அலறும் சத்தம் கேட்டது.

"சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான் பாலு. யாரும் அகப்படவில்லை. அப்புறம் ஆற்றிலே, இருபது கஜ தூரத்தில் ஒரு கருங்கூந்தல் ஜலத்தில் சுழலுவது தெரிந்தது. உடனே ஒரு பெண் சுழலில் மாட்டிக் கொண்டுவிட்டாள், அவள்தான் அப்படிக் கத்தியிருக்கிறாள் என்று பாலு தீர்மானித்து, இடுப்புத் துணியை வரிந்து கட்டிக் கொண்டு ஆற்றில் இறங்கி நீச்சல் அடித்துக் கொண்டு போய் அவள் கூந்தலைப் பற்றிக் கரையில் கொண்டு சேர்த்தான். நல்ல வேளை மூச்சிருந்தது. ஜலம் தான் சாப்பிட்டிருந்தாள். பிறகு அவளுக்கு முதல் சிகிச்சை செய்து உயிர்ப்பித்து, அவள் யார் என்னவென்று விசாரித்தான். பக்கத்து ஊர் ஜமீன்தார் ஜம்புநாதய்யர் பெண் என்றும் பதினெட்டாம் பெருக்கு பார்க்க வந்ததாகவும் கால் சறுக்கி ஆற்றில் விழுந்துவிட்டதாகத் தெரிவித்தாள். அப்புறம் ஒரு வண்டி வைத்து அவளை அவள் வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்தான்!" என்று சொல்லிச் சற்று நிறுத்தினார்.

"ஆனால் அவனுக்கு யோகம் அடித்தது என்றீர்களே? அது என்னவென்று சொல்லவில்லையே!" என்றேன்.

"அதைத்தான் சொல்லப் போகிறேன். கொஞ்ச நாளைக்குப் பிறகு அந்தப் பெண்

னின் கல்யாணப் பேச்சு வந்தது. அப்போது, 'அப்பா, என்னை ஆற்று வெள்ளத்திலிருந்து காப்பாற்றினாரே அவருக்குத்தான் இந்த உயிர் சொந்தம். அவருக்கே என்னைக் கல்யாணம் பண்ணிக்கொடுங்கள்!' என்று சொல்லி விட்டாளாம்.

"கட்டுப் பெட்டி சாஸ்திரியையா கல்யாயாணம் பண்ணிக்கிறேன் என்கிறாய்?' என்று ஜமீன்தார் கேட்டார்.

"சாஸ்திரியானால் என்னப்பா? நம்ம வீட்டுக்கு வந்தால் அவரும் ஜமீன்தார் ஆகிவிடுகிறார். உங்களுக்கு அப்புறம், யார் மாப்பிள்ளையாக வருகிறாரோ அவர் தானே ஜமீன்தார்!' என்றாள். அப்புறம் ஜமீன்தார் வாதாடவே முடியவில்லையாம். பாலு சாஸ்திரிக்கு அடித்தது யோகம்.

"பணக்கார இடத்தில் கல்யாணமும் ஆச்சு; கல்யாணமான அடுத்த வருஷமே அவன் மாமனார் காலமானார். பாலு ஜமீன்தார் ஆகிவிட்டான்! இப்போ கூட பாலு இந்த ஊருக்கு வந்திருக்கான். பழைய 'புட்பால் கிரவுண்'டிலே ஒரு புது பங்களா கட்டியிருக்கான். மாசத்திலே ஒரு நாள் இரண்டு நாள் இங்கே வந்து தங்குவான்" என்றார்.

எனக்கு இந்தக் கதையைக் கேட்டதும் ஏற்பட்ட ஆச்சரியம் கொஞ்ச நஞ்சமல்ல. உலகத்தின் விசித்திரப் போக்கை எண்ணி எண்ணி வியந்து கொண்டே அன்றிரவு தூங்கிப் போனேன்!

* * *

பொழுது விடிந்தது. நான் உலாவப் போனேன். ஆம், ஜமீன்தார் பாலுவின் பங்களாப்பக்கமாகத்தான் போனேன். ஜமீன்தார் பாலு எப்படியெல்லாம் மாறியிருக்கிறான் என்று அறிய வேண்டும் என்ற ஆவலுடன் போனேன்!

என் அதிர்ஷ்டவசமாக அவன் வாசலிலேயே இருந்தான். அவனுடன் பேச வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருக்கவில்லை. அவன் ஜமீன்தார் ஆகிவிட்டான்; நம்முடன் பேசுவது தன் கௌரவத்துக்கு உகந்த விஷயம் என்று கருதுகிறானோ என்னவோ? அதனால் அவனைத் தூர இருந்து ஒரு முறை பார்க்க வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் சென்றேன்.

ஆனால் என்னைக் கண்டதும் என் பெயரைச் சொல்லி யழைத்தான். அது எனக்குப் பெரு வியப்பாக இருந்தது! பிறகு பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். என் வரைக்கும் அவன் பழைய பாலுவாகவே, ஒளிவு மறைவின்றிப் பேசும் பாலுவாகவே இருந்தான்.

ஆனால் அவனுடன் பேசிக்கொண்டிருந்த போதெல்லாம் அவனை ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்ற ஆவல் என் உள்ளத்தில் எழும்பி எழும்பி அமிழ்ந்து கொண்டு வந்தது. அந்தக் கேள்வியைக் கேட்கத் துணிச்சலும் தைரியமும் வேண்டியிருந்தது.

கடைசியில் ஒருவாறு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அவனைப் பார்த்து, "நீ ஆற்றில் குதித்து உன் மனைவியைக் காப்பாற்றியபோது, யாரை 'ஆற்றில் குதிக்கலாமா?' என்று யோசனை கேட்டாய்?" என்றேன்.

"ஒருவரையும் கேட்கவில்லை; ஏனெனில் அங்கே யாரும் இருக்க வில்லை" என்றான்.

'அந்த ஒரு முறை பிறருடைய அபிப்பிராயம் கேட்காமல் தன்னம்பிக்கையுடன் தன் மனச்சாட்சி சொன்னபடி செய்த காரியம் அவனுக்கு எவ்வளவு பெரிய லாபத்தை அளித்திருக்கிறது' என்று சிந்தித்துக் கொண்டே என் வீட்டை நோக்கி வந்து சேர்ந்தேன்!



அடுத்த வீட்டு மாமி:—உன் மாமியாருக்கு உடம்பு சரி யில்லையாமே? பாவம், உனக்குத்தான் ரொம்ப கஷ்டம்!

மாட்டுப் பெண்:—டாக்டர் இப்படியும் சொல்லாமல் அப்படியும் சொல்லாமல் கழுத்தறுப்பது தான் ரொம்ப ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது!




## 4

**பீ**ஜித் தீவுகள் அழகானவை என்பது மாத்திரமன்று. பூமியும் மிகச் செழிப்பு வாய்ந்தது. மரஞ்செடிகள் யாவும் நன்றாய்க் காய்க்கும்.

அங்குள்ள பூமியில் ஒரு கத்திரிச் செடி நட்டால் அது தொடர்ச்சியாய்ப் பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் கூடக் காய்க்கும். ஒரு மிளகாய்ச் செடி ஐந்தாறு வருஷம் காய்க்கும். காட்டு மிளகாய்ச் செடி கணக்கில்லாமல் காய்த்துக் கொண்டேயிருக்கும். எங்கே பார்த்தாலும் கொய்யாக் காடுகளும், கொடி எலுமிச்சைப் பழக்காடுகளும் ஏராளமாக இருக்கும். அவற்றைத் தின்பதற்கு அங்கே ஆட்கள் இல்லை.

பீஜியில் மழை அதிகம். ஆதலால் தண்ணீர் பாய்ச்சியோ, அல்லது இறைத்தோ எவரும் பயிரிடுவதில்லை. பீஜியில் எல்லாப் பக்கங்களிலும் தென்னந் தோப்புகளையும், மழை குறைவான பக்கங்களிலெல்லாம் கரும்புத் தோட்டங்களையும் வைத்துப் பயிரிடுவார்கள். கடலோரங்களிலெல்லாம் தானே முளைத்த தென்னை மரங்களைக் காணலாம். பீஜித்தீவின் கிழக்குப் பாகத்தில் ஓயாது மழை பெய்யும். அங்கே வருஷத்தில் ஏறக் குறைய 120 அங்குலம் மழை பெய்கிறது. மற்ற பாகத்தில் அதில் பாதியளவு பெய்யும். சீதோஷ்ண நிலை 90°க்கு மேற் படாமலும் 60°க்குக் குறையாமலும் மிதமாக இருக்கும். பூமத்திய ரேகைக்குத் தெற்கே யிருப்பதால் இந்தியாவில் கோடைகாலமாயிருக்கும்போது அங்கே குளிர் காலமாயும், இந்தியாவில் குளிர்காலமாயிருக்கும்போது பீஜித்தீவுகளில் கோடைகாலமாயிருக்கும்.

பீஜியில் காடு அதிகமாயினும் காட்டுப் பன்றி ஒன்றைத் தவிர வேறு கொடிய மிருகங்களை கிடையாது. சிங்கம், புலி, கரடி, யானை முதலியன எதுவும் இல்லை. மிருகங்களில் தந்திரம் வாய்ந்தது என்று சொல்லும் நரிகள்கூட இல்லை. முயலும் இல்லை. விஷமம் செய்யும் குரங்கு ஒன்றுகூடக் கிடையாது. பாம்பு, தேள் ஆகிய விஷஜந்துக்களும் கிடையாது. தண்ணீர்ப் பாம்பு போன்ற ஒருவகைச் சிறிய பாம்பு எங்கேயோ ஒன்று அதிசயமாகக் காணப்படும். வீட்டோடு வளர்க்கும் மாடு, குதிரை, நாய், பூனை முதலிய மிருகங்கள் உள்ளன. எருமை கிடையாது. காக்கை மாதிரிக்கு ஒன்றுகூட இல்லை. கழுகு முதலிய பெரிய பட்சிகளும் இல்லை. மைனாக்குருவி, சிட்டுக் குருவி முதலான சிறிய பறவைகள் அதிகம் இருக்கின்றன.

பீஜியின் ஜீவன வளங்களைக் கண்டறிந்த ஆஸ்திரேலிய முதலாளிகள் அங்கே பயிரிட்டு லாபம் சம்பாதிக்க நினைத்தார்கள். அதற்கென முயற்சி செய்தார்கள். ஆனால் ஆஸ்திரேலியாவிலிருந்து அவர்களின் இனத்தார் அங்கு சென்று பயிரிட இஷ்டப்படவில்லை. ஏனெனில் அவர்கள் நாட்டிலேயே ஏராளமான பூமி உண்டு. மேலும் பீஜிக்குச் சென்றால் தங்கள் பிள்ளைகளைப் படிக்க வைக்கவும் முடியாது. மற்றும் வாழ்க்கைக்குத் தேவையான அநேக சௌகர்யங்கள் அங்கே கிடைப்பது அரிது. எனவே முதலாளிகள் பொருள் திரட்டும் நோக்கத்தால் வேறு இடங்களிலிருந்து ஆட்களைக் கொண்டு போய் வேலை வாங்கி லாபம் சம்பாதிக்க

விளைத்தனர். ஒவ்வொரு இடமாய்ப் பார்த்துத் தங்கள் எண்ணம் நிறை வேறுமல் போகவே முடிவாகப் பிரிட்டிஷ் சர்க்காரின் உதவியால் அங்கு இந்தியக் கூலிகளைக்கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

இந்தியர்கள் பீஜிக்குச் சென்று அங்கே பட்ட பாடு எத்தன்மையது என்பதைச் சொல்வதை விடச் சொல்லாமல் விட்டு விடுவதே மேலானது. ஆயினும் இந்தியரின் உழைப்பால் அங்குள்ள பூமி பொன் விளையும் பூமியாக மாறி விட்டது. காடு வெட்டிச் செய்வன செய்து மிகச் சிறந்த முறையில் பலன் கிடைக்குமாறு உழைத்துப் பண்படுத்தி யிருக்கின்றனர். அதிகாலையில் மூன்று மணிக்கே எழுந்து அக்காலத்தில் வேலைக்குப் போவார்கள். யாரேனும் அயர்ந்து தூங்கி விட்டால் சவுக்கடிதான் அவர்களை எழுப்பும். அக்காலத்தில் அவர்கள் செய்த வேலையில் காலில் ஒரு பங்குகூட இப்பொழுதுள்ள இந்தியர்கள் செய்வதில்லை என்று குறை கூறுகிறார்கள்.

பீஜியில் கரும்புப் பயிர்தான் முக்கியமான பயிர். அங்கு சர்க்கரை உற்பத்தி செய்யும் கம்பெனி ஒன்றே. அதன் பெயர் ஸி. எஸ். ஆர். கம்பெனி. ஐந்து பெரிய மில்கள் இருக்கின்றன. எல்லாக் கரும்பும் இந்த ஐந்து மில்களில்தான் அரைக்கப்படும். இந்தியரே கரும்புப் பயிர் உண்டாக்கிக் கம்பெனியின் இஷ்டத்துக்குத் தக்கபடி வேலை செய்து வெட்டிக் கொடுப்பார்கள். வெட்டிய கரும்பை ரயில் வண்டித் தொடரில் இழுத்துச் சென்று மில்களில் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள். கரும்பின் விலையைக் கம்பெனியிடமிருந்து விவசாயிகள் பெறுவார்கள். பீஜி ஆலைகளில் உற்பத்தி செய்யப்படும் சர்க்கரை கம்பெனியிடமிருந்து பிரிட்டிஷ் சர்க்காரால் விலைக்கு வாங்கிக் கொள்ளப்படுகிறது. இவ்வாறு வெளி நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படும் சீனி வருஷந்தோறும் சுமார் 1½ லட்சம் டன் ஆகும். ஓரளவு பீஜியிலேயே விற்பனையாகிவிடும். பீஜியில் உற்பத்தியாவது மணலைப் போன்ற சொர சொரப்புச் சர்க்கரை. சர்க்கரையாகச் செய்வதற்குத் தகுந்த பக்குவமில்லாத கரும்புச்சாறு வெல்லமாய் (மொலாஸிஸ்) பீப்பாய்களில் அடைக்கப்பட்டு ஆஸ்திரேலியாவுக்குக் கொண்டு போகப்படுகின்றது. அதிலிருந்து 'ரம்' போன்ற சாராய வஸ்துக்களும் பெட்ரோல் முதலியனவும் யுத்த காலத்தில் செய்யப்படுகின்றன. கரும்பு பூராவும் இந்தியர்களாலேயே பயிரிடப்படுகின்றது. காரணம் என்னவென்றால் இந்தியர்களைப் போலக் கைவித்தியர் இன்னும் பயிரிடக் கற்றுக் கொள்ளவில்லை.

இரண்டாவது ஏற்றுமதிப் பொருள் கொப்பரை. தென்னந்தோப்புகள் எல்லாம் பெரும்பாலும் ஐரோப்பியர்கள் கையிலும் ஓரளவு கைவித்தியர் கையிலுமிருக்கின்றன. இத்தோப்புகளில் இந்தியரும் கைவித்தியருங்கூடச் சில ஆயிரம்பேர் கூலிகளாக வேலை செய்கிறார்கள். தேங்காய்களைப் பொறுக்கிச் சேர்ப்பதும், அவற்றை வெட்டித் தேங்காய்ப் பருப்பைக் குடைந்தெடுத்துக் காய வைப்பதும், கட்டி ஏற்றியனுப்புவதும், பூமியைக் கொத்தி விடுவதும் ஆன பல வேலைகளை அவர்கள் செய்கிறார்கள்.

மூன்றாவது தங்கச் சுரங்கம். மைசூரிலுள்ள கோலார் தங்கச் சுரங்கங்களைப் போல, கூலிக்கு ஆட்களை நியமித்துப் பூமியிலிருந்து தங்கத்தை வெட்டி எடுத்துச் சுத்தமாக்கி ஏற்றுமதி செய்யும் வியாபாரமும் நடக்கின்றது. இச் சுரங்கங்களில் வெளி வேலைகளில் மட்டும் சில இந்தியர்கள் அமர்ந்து வேலை செய்கிறார்கள். மற்றையோரெல்லாம் கைவித்தியரே.

நான்காவது அன்னாசிப்பழம். மேலே சொன்ன ஸி. எஸ். ஆர். கம்பெனியே இப் பழங்களை உற்பத்தி செய்து அதற்கான வேலைகளுக்கு ஆட்களை வைத்து வேலை வாங்கி ஆலையில் கொண்டு போய் அவை



பூக்காரி (வீட்டு வாசலில் நின்ற பையனைப் பார்த்து):—ஏன் தம்பி, அம்மா வீட்டிலே இல்லையா?

பையன்:—இருக்கிறாளே!

பூக்காரி:—பின்னே ரொம்ப நேரமாகப் 'பூ வேணுமா, அம்மா!' என்று கேட்கிறேன், யாரும் பதில் சொல்ல வில்லையே! நீ தான் உள்ளே போய் உன் அம்மாளைக் கூப்பிடேன்!

பையன்:—எங்கள் வீடு பக்கத்துத் தெருவிலே யல்லவா இருக்கிறது!

களை டின்களில் அடைத்து ஏற்றுமதி செய்கின்றது. கரும்பு ஆலைகளைப் போலவே இந்த ஆலையிலும் இந்தியர், கைவித்தியர் ஆகிய இருபாலரும் வேலை செய்கிறார்கள்.

ஐந்தாவது வாழை. பீஜியிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களில் வாழைப் பழமும் ஒன்று. இது பெரும்பாலும் கைவித்தியராலேயே மலைச் சரிவுகளிலும், ஆற்றோரங்களிலும் உற்பத்தி செய்யப் படுகின்றது. வாழைப் பழங்களைக் காற்றோட்டமான பெட்டிகளில் அடைத்து ஏற்றுமதி செய்கிறார்கள். இந்த வியாபாரம் செய்யும் கம்பெனி வேறு ஒன்று உண்டு.

இந்த ஐவகைப் பொருள்கள் அல்லாது இன்னும் கொஞ்சம் உணவுப் பொருளும் பீஜியில் உற்பத்தியாகின்றது. பீஜியில் வசிக்கும் ஜனங்களுக்கு ஒரு பாதியளவு உணவுக்குத் தக்கபடி நெல்லும், துவரை, உளுந்து, பயிறு, கடலை முதலிய சில்லறைப் பயிர்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்தப் பயிரெல்லாம் அநேகமாய் இந்தியர்களே உண்டாக்குகிறார்கள். மற்றப் பாதியளவு ஆகாரம் வெளி நாட்டிலிருந்து வரவேண்டும். ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமை மாவு வருகின்றது. யுத்த காலத்துக்கு முன்னால் இந்தியாவிலிருந்தும் உணவுப் பொருள்களைத் தருவித்து வந்தார்கள். உயிர் வாழ்க்கைக்குத் தேவையான மற்ற எல்லாப் பொருள்களும் வெளி நாடுகளிலிருந்தே வரவழைக்கப் படுகின்றன.

ஆலைகளை ஏற்படுத்திக் கரும்பு உற்பத்தி செய்யும் சி. எஸ். ஆர். கம்பெனி அதிகாரிகள் ஆரம்ப காலத்தில் நேராகவே கூலி ஆட்களை வைத்துக் கரும்பைப் பயிரிட்டார்கள். அதில் பல கஷ்டங்கள் தோன்றியபோது ஆயிரம், இரண்டாயிரம் ஏக்கர் நிலங்கள் கொண்ட எஸ்டேட்டுகளாக வகுத்து ஐரோப்பிய விவசாயிகளிடம் ஒப்பந்தம் செய்து கொண்டு கரும்பு வாங்கி வந்தார்கள். இப்பெரிய ஐரோப்பிய விவசாயிகள் இந்தியர்களைக் கூலி ஆட்களாக அமர்த்திக் கொண்டு வேலை வாங்கினார்கள். இந்த வழியிலும் அதிகலாபம் கிடைக்கவில்லை. கடைசியாக, பத்து ஏக்கர் பூமியாகத் துண்டித்து ஒவ்வொரு இந்திய விவசாயியையும் அதில் இருத்திப் பயிரிடச் செய்து கரும்பை வாங்கத் தலைப்பட்டனர். அது முதல் கம்பெனிக்கு அதிக லாபம் கிடைக்கலாயிற்று.

கம்பெனி அதிகாரிகளின் கீழும் பெரிய ஐரோப்பிய விவசாயிகளின் கீழும் கூலிகளாக வேலை செய்த காலத்தில் தான் இந்தியர்கள் மிக அவமானத்துக்கு உட்பட லாயினர். பிற்காலத்தில் ஒப்பந்தக் கூலி முறை ரத்து செய்யப்பட்டுப் பழைய கூலிகள் விடுதலை செய்யப்பட்டது முதல் நிலைமை ஒருவாறு சீர்திருந்தலாயிற்று.

காடு வெட்டிக் களை பிடுங்கி, கல் நீக்கிப் பூமியை நல்ல நிலைமைக்குக் கொண்டு வரும் மகத்தான வேலையையெல்லாம் இந்தியரே செய்திருந்தும் அவர்களுக்கென சொந்தமான பூமி பீஜியில் இல்லை. பின் பூமி முழுதும் பூர்விகக் குடிகளான கைவித்தியருக்குத்தான் சொந்தமாயிருக்கின்றதா என்றால் அதுவும் இல்லை. முதல்தரமான நல்ல பாகமெல்லாம் சில ஐரோப்பியரிடம் பூரண சுவாதீனத்தோடு கூடிய பூமியாய் அடங்கிவிட்டது. இதற்கு 'பிரீ ஹோல்ட்' (Free hold) என்று பெயர். இந்தப் பூமிக்கு வாய்தா இல்லை; வரி இல்லை.

இப்படிப்பட்ட நிலத்தை இவர்கள் பெற்றது எப்படி? அக்காலத்தில் நிலம் கைவித்தியருக்கு உபயோகமில்லாமல் இருந்தது. ஒரு துப்பாக்கியோ அல்லது ஒரு ஜதைத் துணியோ, ஒரு கடியாரமோ எது கிடைப்பினும் அதைப் பெற்றுக் கொண்டு கைவித்தி, ஒருவன் 'அதோ அந்த மலை உச்சியிலிருந்து இன்னொரு மலை உச்சி வரையில் இருக்கிற பூமி யெல்லாம் என்னுடையது. அதை அப்படியே கொடுத்து விடுகிறேன்' என்று சொல்லி விடுவானும். அல்லது ஐரோப்பியரும் தானுமாய் இரு குதிரைகளில் ஏறிக் கொண்டு ஓரிடத்திலிருந்து இன்னொரு இடம் போய் இறங்கிக் கொண்டு 'அது முதல் இது வரைக்குமுள்ள நிலம் உனக்குக் கொடுத்தேன்' என்று சொல்லுவானும். இப்படியெல்லாம் நிலத்தைப் பெற்றிருக்கிறார்கள் ஐரோப்பியர்கள்.

பிற்காலத்தில் இந்தியரின் ஒப்பந்தக் கூலி முறை ரத்தாகி இந்தியர் தமக்கென நிலம் வேண்டுமென்று தேடும் சமயம் வந்தது. ஆனால் அச்சமயம் புதிய சட்டங்கள் ஏற்பட்டன. கைவித்தியரின் பின் சந்ததியார் விழித்துக்கொண்டு தங்களுக்கும் நிலம் வேண்டுமென்று உரிமை கொண்டாடினால், அவர்களுக்கு வழங்க நிலம் இல்லாமற் போனால் என்ன செய்வதென்ற கவலை சர்க்காருக்கு ஏற்பட்டது. ஆகவே நிலத்தை ரட்சிப்பதற்காகச் சட்டம் செய்தார்கள். அது முதல் தேவையானவர்களுக்கு நிலம் குத்தகைக்கு மட்டும் கிடைத்து வந்தது.

இந்தியர் குத்தகைக்கு நிலம் எப்படிப் பிடித்தார்கள் என்பதும் மிகவும் வேடிக்கையான விஷயம். (தொடரும்)

# யசோ மறைந்தாள்!

இமய குமாரன்

"யசோ!"

"......"

"யசோ, பேசமாட்டாயா?"

"சத்யா, இங்கிருந்து போய்விடு."

"யசோ, என்னைப் போகச் சொல்லுகிறாயா? பின் எதற்காகக் கூப்பிட்டாய்?"

"ஏனோ கூப்பிட்டேன்."

என்னைக் கூப்பிட்ட காரணம்கூட உனக்குத் தெரியவில்லையா, யசோ. உன் இதயத்தைத் தொட்டுப்பார். அது சொல்லும் ஏன் கூப்பிட்டாய் என்று."

அவள் அவனை ஏறிட்டு நோக்கினாள்; அவள் கண்கள் கலங்கி யிருந்தன.

"யசோ"

"சத்யா நீ போய்விடு" என்று சொல்லிக் கொண்டே தன் மாளிகையை நோக்கி நடந்தாள் யசோ.

"நாளை இதே நேரத்தில் இங்கு வருகிறேன். நீயும் வா, யசோ" என்ற குரல் கேட்டுத் திரும்பினாள். அவள் போவதையே துக்கம் ததும்பப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான் அவன்.

* * *

தன் அறையில் நுழைந்த யசோ படுக்கையருகில் போய் நின்றாள். படுக்கையில் குழந்தை ராகுலன் தூங்கிக் கொண்டிருந்தான். கொஞ்ச தூரத்தில் கட்டிலில் தேவேந்திர பாபு ஆழ்ந்த நித்திரையில் லயித்திருந்தார்.

அப்பொழுதுதான் மேகக் கூட்டங்களினிடையே மறைந்திருந்த சந்திரன் வெளியே வந்து தன் குளிர்க் கிரணங்களைப் பூவுலகம் முழுவதும் அள்ளித் தெளித்துக் கொண்டிருந்தான்.

சந்திரனின் ஒளிக் கிரணங்கள் ஜன்னல் வழியாக அந்த அறையில் பாய்ந்து, அவள் உணர்ச்சியைத் தூண்டி விட்டது.

படுக்கையிலே உட்கார்ந்து குழந்தை ராகுலனையும், கணவனையும் மாறி மாறிப் பார்த்தாள். ஒரு பக்கம் சாந்தமே உருவெடுத்த கணவன் முகம். மற்றொரு பக்கம் தூக்கத்திலும் புன்முறுவல் புரியும் பால் மணம் மாறாத பாலகனின் முகம்.

தன் இதயக் குமுறலை அடக்க முடியாமல் தலையணையிலே முகம் புதைத்துக் கொண்டாள். அவள் கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் தலையணையை நனைத்தது.

சட்டென்று ஏதோ ஓர் சக்தி அவளை உந்தித் தள்ளப் பக்கத்திலுள்ள ஜன்னலருகே போய் நின்றாள்.

தூரத்திலே யமுனா நதி சல சலவென்று ஓடிக் கொண்டிருந்தது.

வெண்மதி தன் பொற் கிரணங்களால் யமுனையின் பிரவாகத்தைத் தழுவிக் கொண்டிருந்தான்.

அவள் உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டி விட்டது, யமுனையின் சலசலப்புச் சத்தமா? தவழ்ந்து வரும் இளம் தென்றலா? அல்லது உணர்ச்சி யூட்டும் வெண்மதியின் கிரணங்களா? உற்றுக் கவனித்தாள். இல்லை, அவளை அப்படி மெய் மறக்கச் செய்தது காற்றிலே மிதந்து வந்த அந்தக் கானந்தான்.

ஆம். சத்யன்தான் பாடிக் கொண்டு போகிறான். அத்தெய்வீக கானம் அவளை எங்கோ கொண்டு சென்றது. சிந்தனையிலேயே லயித்து விட்டாள்.

* * *

அன்னை பாரத தேவி தன் விடுதலைக்காகத் தன் மைந்தர்களை அறைகூவியழைத்தாள். காந்தி மகான், அன்னையின் விடுதலைக்காகக் கடைசிப் போராட்டத்தை ஆரம்பித்துச் சங்க நாதம் செய்து விட்டார். பாரத புத்திரர்கள் சுதந்திர லட்சியத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

சுதந்திரப் போராட்டச் சரித்திரத்திலே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய காலமது. ஒவ்வொரு தேசபக்தனின் விடுதலை உணர்ச்சிக்குச் சோதனைக் காலம். அன்னையின் அடிமை விலங்குகள் தகர்த் தெறியப்பட்ட காலமது.

ஆனால் அதுவே அவள் வாழ்க்கையின் போக்கையே வேறு திசையில் மாற்றி விட்ட காலம். அவள் காதல் வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்ட காலம்.

"சத்யா! கடைசியில் உன் இஷ்டப்படியே முடிவு செய்து விட்டாயா?"

"ஆம், யசோ! அதோ பார், அன்னையின் அறைகூவல். விண்ணைப் பிளக்கும் விடுதலை வீரர்களின் யுத்த கோஷங்கள். திக்கெட்டு மொலிக்கும் காந்தி மகானின் போர் முரசு. யசோ! அன்னை அடிமை வாழ்வு வாழ நான் மட்டும் என் சுயநலத்தைக் கருதலாமா?"

"சத்யா! நீ விடுதலைப் போரில் கலந்து கொள்வதை நான் தடுக்கவில்லை. ஆனால் அந்தப் போர் என்னிடமிருந்து உன்னைப் பிரித்துவிட்டால்............"

"அதனால் என்ன? அன்னையின் விடுதலைக்காக உயிரைக் கொடுத்த தியாகி

என்று என்னைத் தேசம் புகழும். அது உனக்கு மகிழ்ச்சி யளிக்காதா?"

"அதற்கில்லை, சத்யா! நீ திரும்பிவரும் வரை ஏழைக் காரியஸ்தன் மகனுன உனக்காக என் தந்தை என்னைக் காத்திருக்கும்படி செய்வாரா?"

"யசோ...... என்ன சொல்லுகிறய்!"

"ஆம் சத்யா, நீ போனுல் அப்புறம் எப்பொழுது திரும்புவாயோ, அதற்குள் என் தந்தை எனக்கு விவாகம் செய்ய ஏற்பாடு செய்வார். நான் உன்னைத்தான் கலியாணம் செய்துகொள்வேன் என்று சொன்னுல் என் தந்தை அதற்கு இணங்கவே மாட்டார். நீ அருகிலிருந்தால் எப்படியாவது முயற்சிக்கலாம். இல்லையேல் நீ என்னை மறக்க வேண்டியதுதான்."

சுதந்திரப் போரிலே ஈடுபடத் துடித்துக் கொண்டிருந்த சத்யன் அதற்கு முன்னதாக இன்னொரு போரில் ஈடுபட வேண்டியிருந்தது.

ஆம், அவன் மனதில் காதலுக்கும் கடமைக்கு மிடையே போராட்டம் மூண்டது. கடைசியில் கடமையே வென்றது. சுதந்திரப் போரில் ஈடுபட்டான். வெள்ளை அரசாங்கத்தின் அடக்கு முறையிலே ஏழு வருடம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டுச் சிறை புகுந்தான் சத்யன்.

கால சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. சுதந்திர வீரர்கள் வெற்றி கண்டார்கள். அந்நிய அரசாங்கம் பணிந்தது; பாரதம் விடுதலை அடைந்தது. சிறைக் கூடங்கள் திறக்கப் பட்டன. சுதந்திரச் சிற்பிகள் தலைநகரை நோக்கி விரைந்தார்கள், சுதந்திரக் கொண்டாட்டத்தி லீடுபட்டுச் சுதந்திர தேவியைத் தரிசிக்க.

ஆனுல் சிறையை விட்டு வெளியே வந்ததும் கிராமத்தை நோக்கி நடந்தான் சத்யன் தன் இதய தேவியைத் தரிசிக்க.

அவன் மனம் கற்பனை யுலகிலே சஞ்சரித்துக் கொண்டிருந்தது: இந்த இடைக் காலத்தில் யசோ எப்படித்தான் மாறியிருப்பாள்! அன்று நான் கண்ட குழந்தை யுள்ளம் படைத்தவளாக இருக்க மாட்டாள் இன்று. உள்ளத்திலே காணம் புகுந்திருக்கும். யௌவனத்தின் புது மெருகுடன் பிரகாசித்துக் கொண்டிருப்பாள். பருவம் அவள் ஒவ்வொரு அங்கத்தையும் அழகு படுத்திக் கொண்டிருக்கும்.

இப்படியே மனக்கோட்டை கட்டிக் கொண்டு கிராமத்தை யடைந்த சத்யனுக்கு அங்கு ஓர் பெரிய ஏமாற்றம் காத்திருந்தது.



யசோவுக்கு மணமாகி விட்டது. அன்று யசோ சொன்னதுபோல் ஏழை சத்யன் அவள் பணக்காரத் தந்தையின் சிந்தனையில் எட்டவே யில்லை. உள்ளூரிலேயே பெரிய பணக்காரனுன தேவேந்திர பாபுவுக்கு யசோவை மணம் செய்து கொடுத்து விட்டார்.

தன் இதயக் கோட்டையிலே யாரை வைத்துப் பூஜித்து வந்தானே அந்த யசோவை உள்ளடக்கிக் கொண்டிருக்கும் தேவேந்திர பாபுவின் ஓங்கி உயர்ந்த மாளிகை அவனைப் பார்த்துப் பரிகசிப்பது போலிருந்தது.

அந்த மாளிகையைப் பார்த்தபடியே நீண்ட பெருமூச்சு விட்டான் சத்யன்.

'நாம் ஏன் விடுதலையானேம்? அந்தச் சிறையிலேயே நம் வாழ்வு முடிந்திருக்கக் கூடாதா? மறுபடியும் சிறைக்கூடம் நம்மை அழைக்குமா?' என்று எண்ணிக் கலங்கினுன் சத்யன்.

சத்யன் கிராமத்துக்கு வந்து விட்டான் என்ற செய்தியைக்

கேட்டிலிருந்து. யசோ தன் அறையில் உட்கார்ந்து கொண்டு, தான் சத்யனுடன் ஓடி விளையாடிய பால்யப் பருவ நாட்களை நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டாள்.

அந்த மாளிகையினுள்ளே யசோவுக்கு ஒரு குறையுமில்லாமல் வைத்திருந்தார் தேவேந்திர பாபு. சொன்னபடி கேட்க வேலையாட்கள், அழகு படுத்திக் கொள்ள கணக்கிலா ஆடையணிகள், நாளுக்கொரு விதமாக அலங்காரம் செய்து கொள்ள விதம் விதமான விலையுயர்ந்த நகைகள்.

இன்னும் கொஞ்சமும் களங்கமில்லாத அவரது பரிபூரண அன்பு. அவரது அன்பின் பிரதியாக தங்கப் பதுமை போன்ற ராகுலன்.

மனிதப் பிறவிக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்! ஆனால் யசோவின் மனதை அவைகள் ஒன்றும் திருப்திப் படுத்த முடியவில்லை. எத்தனையோ இரவுகளில் படுக்கையில் படுத்தபடியே தேம்பித் தேம்பி யழுவாள் யசோ. காரணம் தெரியாமல் தத்தளிப்பார் பச்சையுள்ளம் படைத்த தேவேந்திரபாபு.

தன் உள்ளக் குமுறல்களை அவள் அவரிடம் சொல்ல முடியுமா?

அந்த உள்ளக் குமுறல்கள் இன்னும் அதிகமாயின சத்யனின் வருகையால்.

*   *   *

அன்று தன் அறையிலே உட்கார்ந்திருந்தாள் யசோ. அவள் பெயருக்கு வந்த ஓர் கடிதத்தைக் கொடுத்து விட்டுச் சென்றான் வேலையாள்.

கடிதத்தைப் படித்த அவள் உள்ளமும், உடலும் பதறிற்று. கைகள் நடுங்கின. சத்யன் தான் எழுதியிருந்தான்.

"யசோ, என் வாழ்விலே எனக்கு நம்பிக்கை போய் விட்டது. இனி இந்த உயிரை ஏன் வைத்துக் கொண்டிருக்கிறேம் என்றே நினைக்கிறேன். அந்த எண்ணம் வரும் பொழுதெல்லாம் ஒரே ஒரு நினைவு மட்டும் என் உயிரை இழக்கப் போதுமான தைரியத்தை எனக்குக் கொடுக்கவில்லை.

ஆம், யசோ, சின்னஞ்சிறு வயதிலே நாம் இருவரும் சேர்ந்து விளையாடின நாட்களை நினைத்தால் என் மனதிலே ஓர் புத்துணர்ச்சி உண்டாகிறது.

அந்த நாட்களில் மாலை வேளைகளிலே நான் ஓடி வருவேன், உன் மலர் முகத்தைக் காண. நீ இன் முகம் காட்டி என்னை எதிர் கொண்டழைக்க ஓடோடியும் வருவாய். நாம் இருவரும் கைகோத்துக் கொண்டு யமுனா நதியின் கரையில் உட்கார்ந்திருப்போம்..."

அதற்கு மேல் அவளால் படிக்க முடியவில்லை. பொங்கி வரும் அழுகையை அடக்க முடியாமல் இதயம் விம்ம அழுதாள்.

ஒரு க்ஷணத்தில் ஏதோ ஓர் முடிவுக்கு வந்தவள் போல், மள மள வென்று ஒரு கடிதம் எழுதி அனுப்பி விட்டாள் யசோ.

அதன்படிதான் அன்று இரவு நிலவிலே, பூந்தோட்டத்தில் யசோதாவைத் தனிமையில் சந்திக்க வந்திருந்தான் சத்யன்.

அவளைக் கண்டவுடன் ஏனோ அவன் மனம் 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது. தன் மனதிலே நினைத்திருந்ததைச் சொல்ல முடியாமல் ஓடி வந்து விட்டான்.

*   *   *

சிந்தனை கலைந்தது. ஆம், அவள் சிந்தனையைக் கலைத்தது மறுபடியும் அந்த தெய்விக கானந்தான்.

சத்யன் எழுதியிருந்தான்—"நாம் இருவரும் கைகோத்துக் கொண்டு யமுனையின் கரையிலே உட்கார்ந்திருப்போம்......"

'ஆம், சத்யா நானும் நீயும் உட்கார்ந்திருப்போம். அன்று நீ உணர்ச்சி ததும்பப் பாடுவாய்; நான் மெய் சிலிர்க்கக் கேட்பேன். கடைசியில், நீ

ஆயர்குலத்தில் அவதரித்தானடி
அவன்—மாயக் கண்ணனடி

என்று பாடுவாய். அந்தப் பாட்டைக் கேட்டு நான் என் உணர்வையே இழந்து விடுவேன்.

'சத்யா மறுபடியும் அந்த நாள் வருமா? நானும் நீயும் அன்னை யமுனையின் கரையில், பால் போன்ற வெண்ணிலவு காய்ந்து கொண்டிருக்கும் ஓர் இரவிலே உட்கார்ந்திருக்க, அந்தப் பாட்டை நீ பாட அதை நான் கேட்கும்படியான பாக்கியம் கிடைக்குமா?"

'சத்யா, ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? என்னிடம் கோபமா சத்யா......?'

அவள் கண்கள் இருண்டன. பிரக்ஞை யற்றுச் சாய்ந்து விட்டாள்.

மறுநாள் காலைக் கதிரவனின் கிரணங்கள் முகத்திலே பட்டுக் கண் விழித்தாள் யசோ.

அவள் இருதயத்திலே ஏதோ ஒன்று பாரமாய் அழுத்துவதுபோ லிருந்தது. முதல் நாளிரவு சத்யனைச் சந்தித்தது; உணர்ச்சியைத் தூண்டி விட்ட அந்தக் கீதம், தன்னை யறியாமல் தான் வாய் விட்டுப் பிதற்றினது எல்லாம் ஒன்றன்

பின்னொன்றாக அவள் ஞாபகத்துக்கு வந்து அலை மோதின.

ஐயோ, என்ன பைத்தியக்காரத் தனம். ஒரு சமயம் அவருக்குத் தெரிந்துவிட்டால், என்று எண்ணிப் பயத்தினால் சுற்று முற்றும் பார்த்த யசோ திடுக்கிட்டாள். அவளருகே தேவேந்திரபாபு உட்கார்ந்திருந்தார்.

அவள் ஹிருதயம் 'பக்' 'பக்'கென்று அடித்துக் கொண்டது. கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய் வழிந்தோடிற்று. தன் நடுங்கும் கரங்களால் கணவனின் கரங்களைப் பிடித்துக் கொண்டு, "என்னை மன்னித்து விடுங்கள், நான் பாபி" என்று சொல்ல வாயெடுத்தாள். தொண்டையிலிருந்து வார்த்தைகள் வெளிவர முடியாமல் தடுமாறினாள்.

"யசோ, வருத்தப்படாதே! என்ன இருந்தாலும் நீ அன்று கண்ட இன்பத்தை இன்று உன்னால் காணமுடியுமா?" என்றார் தேவேந்திரபாபு.

யசோவின் உள்ளத்தையே உலுக்கிற்று அந்த வார்த்தை.

"ஆம்; உண்மைதான் அன்று நான் சின்னஞ்சிறு பெண்; கட்டிலடைபடாத சுதந்திரப்பறவை. இன்று நான் வேறொருவரின் சொத்து. இதை நான் உணரவில்லை. நான் பாபி, என்னை மன்னித்து விடுங்கள்" என்று கணவனின் கைகளில் முகம் புதைத்துத் தேம்பித் தேம்பி அழுதாள்.

* * *

அன்று இரவு கிஷ் களங்கமான நீல வானிலே வெண்மதி பவனி வர ஆரம்பித்து விட்டது. யமுனா நதி அமைதியாக ஓடிக் கொண்டிருந்தது.

சாளரத்தின் வழியாகப் பார்வையைச் செலுத்திய வண்ணம் உறுதியான தீர்மானத்துடன் தன் அறையில் உட்கார்ந்திருந்தாள் யசோ.

நிமிஷத்துக்கு நிமிஷம் அவள் ஹிருதயத் துடிப்பு அதிகமாகிக் கொண்டே இருந்தது. திடுக்கிட்டு எழுந்தாள். தூரத்தில் அதே மல்லிகைப் பந்தலை நோக்கிச் சத்யன் வந்து கொண்டிருந்தான்.

விம்மும் ஹிருதயத்தைக் கடினமாக்கிக் கொண்டு எழுந்து வேகமாகச் சென்றாள்.

"சத்யா!"

"ஏன் யசோ?"

"சத்யா, உன்னை மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். நீ இந்த ஊரைவிட்டே போய் விடு."

"யசோ, ஊரைவிட்டே போகச் சொல்லுகிறாயா?"

"ஆம், சத்யா! சின்னஞ் சிறுவயதிலே நம்மிடையே முளைத்த அன்புக்கு இன்று ஓர் களங்கம் ஏற்படாமல் இருக்கவேண்டுமானால் நீ போய்த்தான் ஆகவேண்டும்" என்று சொல்லிக் கொண்டே அவன் பதிலையும் எதிர்பாராமல் மாளிகையை நோக்கி நடந்தாள் யசோ.

கண்களில் நீர் ததும்ப அவள் போவதையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் சத்யன்.

## சாரணச் சிறுவன் சீனு!

சீனு என்ற பையன் சாரணப்படையில் சேர்ந்திருந்தான். ஒரு நாள் அவன் வழியில் பர்ஸ் ஒன்றைக் கண்டெடுத்தான். அதில்ஒரு பாசும், சில கடிதங்கள் மட்டுமே யிருந்தன. உடனே அவன் வீட்டுக்கு ஓடி, அங்கே விளையாடிக் கொண்டிருந்த தன் தம்பி பாலுவையும் அழைத்துக் கொண்டு போய், அந்தப் பர்ஸை அதன் சொந்தக் காரரைக் கண்டு பிடித்துக் கொடுத்தான்.

பர்ஸின் சொந்தக்காரர் ஆச்சர்யத்துடன் பர்ஸைப் பெற்றுக்கொண்டு, தன் பையிலிருந்து ஒரு எட்டணா நாணயத்தை எடுத்துச் சீனுவிடம் நீட்டினார். "நான் ஒரு சாரணச் சிறுவன் ஸார்! என்னுடைய கடமையைத்தான் நான் செய்தேன். இனுமெல்லாம் நான் வாங்க மாட்டேன். வாங்கவும் கூடாது" என்று சொல்லிச் சீனு அந்த நாணயத்தை வாங்கிக்கொள்ள மறுத்து விட்டான். பர்ஸின் சொந்தக் காரர் பன்மடங்கு ஆச்சர்யத்துடன் அந்த நாணயத்தைத் திரும்பத் தன் பையில் போடப்போனார். அப்பொழுது சீனு தன் தம்பி பாலுவைச் சுட்டிக் காட்டி, "ஸார்! இவன் என் தம்பி. இவன் இன்னும் சாரணப் படையில் சேரவில்லை. ஆகையால் அந்த நாணயத்தை இவனிடம் கொடுத்து விடுங்கள்" என்றான்!





மாக படிந்த தோற்றத்துடனும் அடிக்கடி முகப் பருக்களினாலும் தோலில் தடிப்புகளுடனும் வாழ்நாள் முழுதும் அவள் அவதிப்பட வேண்டுமென்றிருந்ததா? ஆம், அவள் அப்படித்தான் நினைத்தாள். அதிகப் பணச் செலவில் செய்த சர்ம சிகிச்சைகளும், க்ரீம்களும், களிம்புகளும் நிரந்தரமான பலனை அளிக்கவில்லை. பின்னர்தான் அவளது உபாதைகளின் மூல காரணத்தைத் தாக்கிய "க்ருஷனை" நாடினாள்......

அப்பழுக்கற்ற மேனி நிறத்தையுடைய ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் உலகெங்கும் 'க்ருஷ'னுக்கு நன்றி செலுத்துகின்றனர். ரத்தத்திலுள்ள அசுத்தங்களே, தோலின் மங்கலான நிறத்திற்குக் காரணமாக அமையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் க்ருஷனிலுள்ள ஆறு விதமான லோக உப்புக்கள் அதி அற்புதத்தை விளைவிக்கின்றன. மந்தமடைந்த உறுப்புக்களினால் கழிக்கப்பட முடியாத தொல்லை தரும் விஷப் பொருள்கள் வெளியே தள்ளப் படுகின்றன. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்கியம் ததும்புகிறது. தோலின் மேலுள்ள மறுக்கள் நீக்கப் பட்டு இயற்கையாகவே உள்ள அழகிய தோற்றம் பெறுகிறது.

க்ருஷனுல் அடையப்பட்ட உட்புற சுத்தம் திருப்ப ளிப்பது சர்ம சௌந்தர்யம் மாத்திரமல்ல. அது வாழ்க்கையின் ஆனந்தத்தையும் அளிக்கிறது. சரும, மூக்...ரக்காய், குடல்கள் இவற்றை இயங்குமாறு ஆறு விதங்களில் தூண்டும் "க்ருஷ"னே தேக நலத்தையும் இயற்கை வழமையும் திரும்பப் பெற மிகச் சிறந்ததும் சிக்கனமான வழியாகும். க்ருஷனின் விலை ரூ. 1-10-0 தான். எல்லாக் கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்



## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்!




உணவு நெருக்கடியைத் தோற்கடியுங்கள்

**உணவு**
**உற்பத்தியைப்பெருக்குக**

AC 127 TM

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden Poonamallee, High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

துணிகள்
வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

துணிகள்
பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...




ஸன்லைட்
சோப்பிலும்
தான்

துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!

S. 127-50 TM